உ

கணபதி துணை

மறைஞானசம்பந்தநாயனார்

அருளிச்செய்த

# சிவதருமோத்தரம்

மூலமுமுரையும்

இவை

திருநெல்வேலி

சாலிவாடீசுரஓதுவாமூர்த்திகளால்

பலபுத்தகங்களைக்கொண்டுபரிசோதித்து

திருநெல்வேலி

அம்பலவாணன்கவிராஜரவர்கள்

௸ சிவராமமுதலியாரவர்கள்

புதூர் வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்

இவர்களது

முத்தமிழாகர

அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டன

பிரபவ௵ மார்கழி௴

கஅசூஎ ம் ௵ டிசம்பர் ௴

சிவமயம்

# திருநெல்வேலி

# சாலிவாடீசுரவோதுவாமூர்த்திகளால்

இயற்றிய

# நிலைமண்டிலவாசிரியம்

திருவளர்கமலத்துருவளர்பொகுட்டினில் *
வீற்றிருந்துயிர்களைத்தோற்றல்செய்வேதனுஞ் *
சக்கரம்விரும்பித்தாரைசாத்துமெட் *
டக்கரத்தமைந்தவச்சுதமூர்த்தியும் *
வேண்டியபொருளைவிரும்பிக்கொடுக்குஞ் *
சேண்டிகழ்கற்பகச்செழுநிழற்கோவு *
முப்பான்மூன்றுகோடிமுதல்வருந் *
தப்பார்முனிவருமொப்பில்சித்தரு *
மிருக்குமுதலாவிருக்குநான்மறைகளுங் *
காமிகமுதலாத்தோமிலாகமமு *
மந்திரமுதலாத்தந்திரங்களுஞ் *
சைவமாதிமெய்வருபுராணமும் *
பன்னெறியருச்சனைபதிதொறும்பயின்று *
நன்றுமத்தைநாவாலோதியு *
மிந்நாள்காறுமியற்கையிலீதென் *
றுள்ளந்தாலுவாலுள்ளியோதற் *
கெள்ளளவேனுமியையாதென்றுங் *
குணமுங்குறியுங்குறிக்கக்குறிபடா *
வணமடியிடைமுடிமருவுதலின்றி *
யொப்புமுயர்வுமொருவியொளிருஞ் *
செப்பருஞ்சோதிசின்மயவடிவாய்ப் *
புராதனபூரணபுண்ணியபுனித *

நிராமயமாகியநிட்களசிவமே
விண்ணுலகத்தும்விரிநீர்சூழ்ந்த
மண்ணுலகத்துமற்றெவ்வுலகத்து
மன்னியமெய்ம்மையுடையவர்தமக்கு
மெண்ணிலடங்காவிச்சைகாரணத்தாம்
கண்ணியகாமக்குரோதலோப
மோகமதமாச்சரியமூழ்கி
யூகந்துறைந்துநல்லொழுக்கந்தவிர்ந்து
மையுண்கண்ணியர்வலையிற்பட்டு
நைவுண்டிடுக்குநாயினுஞ்சிறிய
வெம்பாவியர்க்குமின்னருள்புரிந்து
பொன்போகமுதலாப்பொருந்துபயன்களை
வேண்டுவார்வேண்டுவதாண்டாண்டுதவி
யிருவினையகற்றியிணையிலாவின்ப
மருவியபேரானந்தவாழ்வினை
யருளுதற்காகத்திருவுளங்கொண்டு
சகளமூர்த்திகளாசகளமுமாகிப்
பாண்டிநாட்டொருபதியொன்றுங்
காண்டற்குரியகண்ணிநாட்டிற்
புத்திமுத்திசித்திநித்தியமுதவிக்
கருணைபெருகியபொருணைநதியுந்
திங்கண்மும்மாரிபெய்மங்குன்முழவதிரக்
குயிற்குலம்பாடமயிற்குலமாடச
சாலிக்கதிர்கள்சாமரையிரட்டப்
பாலிற்றிகழ்வெண்பாரந்தொகுதிரட்டக்
கொன்றைபொன்சொரியப்புன்குபொரிதூவ
நீயுர்பாசடைமிசைநீர்குடையெடுப்பச்
சேயிதழ்த்தாமரைச்செழுந்தவிசிருந்து
வளமையன்னமிளமைப்பேடையை

மலாம்புரிந்தின்புடனிலங்குவாவியு *
நந்தனவனமுஞ்செந்தளிர்ச்சோலையுஞ் *
சென்னற்பரப்புங்கன்னற்காடும் *
வரம்பைக்கடந்தவரம்பைவனமு *
மற்றும்பலபலவளங்களும்பல்கிக் *
கற்றுச்சிவாகமங்களுக்கமைந்தவரும் *
பொய்தீர்மறையின்மெய்தேர்விபுதரும் *
பண்ணுடன்றமிழ்மறைபயில்சன்மார்க்கரும் *
மடத்துறைநீர்ந்தவெண்மடத்துறைதுரவரும் *
வையாகரணருநையாயிகரு *
மறத்தாறீட்டுஞ்சிறப்புறுநிதியை *
மாரியும்வெள்கவளையாதுகொடுக்குஞ் *
சீரியகுணத்துப்பாரியொப்பாருந் *
தருமமுதலாக்கருதுபொருள்க *
ளெளிதினெய்துதற்குளநிலைதேயென *
மருவியெந்நாளும்வாழ்ந்தினிதிருக்குந் *
திருநெல்வேலியெனுஞ்சிவபுரியிற் *
பப்புறுமறைகள்செய்பமுதல்பூசைகொண் *
டெப்பிரானையத்துந்தப்புதலின்றி *
வேறுவாவிப்பேறுமினென்று *
மணவூராளுந்தணநலமுடைய *
வழுவறுதொல்சீர்முழுதுங்கண்ட *
ராமவழுதிதன்காமுறுபசுக்களின் *
பாலைக்கறந்துகோபாலன்பனைமுனை *
யிடத்துநடகக்குடத்தைக்கவிழ்த்துத் *
திருமுடிக்காட்டியவ்வரசனுக்கருளியுந் *
தாயினன்றியாத்தனிமுதலாகியும் *
வேயினின்றுமிருவிமலமுத்தாகித் *
திருவுருத்தோன்றப்பெருவிருப்புற்றுப் *
பூசைகொண்டருளத்தேசார்திருவுருப் *

போதாதென்றுளத்தாதரவுடனப் *
பாண்டியனன்றுவேண்டவளர்ந்தும் *
வேதசன்மாவாமாதிசைவ *
னில்லத்தேற்றநெல்லைக்கொண்டு *
கோயிலினுயர்கார்வாயிலுலர்த்திச் *
சிந்துபூந்துறைக்கந்நீர்கொணர்வா *
னேகுற்றுழிச்சூன்மேகம்பரந்து *
சோனைமாமழைசொரியக்கண்டு *
நாவிலரியென்செய்கோநயந்துறுபூசைக் *
கென்றுயிலொந்துசென்றுபார்க்கவச் *
சாலிக்குவேலிகோலுநீர்கண்டு *
நெல்லுக்குவேலிசெய்நின்மலனேயெனச *
சொல்லித்துதிக்கநல்லருள்கொடுத்தும் *
பிரமாண்டத்துக்கொருமாதாவாங் *
காந்திமதித்தாய்தேர்ந்துச்சிவாகம *
முட்படத்திரண்டறம்பட்டியாற்றிக் *
கம்பைமாநதியிலேனம்பண்டக்கிட் *
புரிதவங்கண்டுதெரியாதுவந்து *
வாலியநிறத்துமால்விடையிருந்து *
காட்சிகொடுத்துக்கலந்துமணந்தும் *
பூட்சியிற்பொலிந்துபொருந்துமுயிர்க *
ணீட்சிசெய்வினையிரிகவியின்புற் *
றிம்மைமறுமைவீடென்றுறுப்பயன்களுந் *
தம்மகம்பொருந்தச்சந்ததந்தான *
னாதபாண்டியர்க்குமன்னவனாய் *
மறுவறுமேதவாசடமுறைவரு *
மறுபதிற்றிரமாண்டருள்செய்துங் *
கலைமுழுதுணர்ந்தாலியமாமுனிக்குப் *
பணக்கோலமறைத்துமணக்கோலங்காட்டியுந் *
தாருகவனத்தவாச்சேருமகங்கெடக் *

கங்காளவேடனாய்சசெங்கைபலியிரந்து *
மேலுமனந்தலீலைகள்புரிந்து *
மெழுந்தருணெல்லையெம்பிரானருளா *
லித்தலத்திதுகாறெம்மனோரியற்று *
வுத்தமக்கருமமுனூற்றுபுசெய்வா *
னெத்தலத்தோர்களுமேத்திடுகவிஞனை *
முத்துக்குமாரசுவாமிமுன்புசெய் *
மெய்த்தவத்துதித்துவிளங்கிடுபாலன் *
றீனரக்ஷகராந்தானநாதருக்கும் *
வேந்திமவான்றவக்காந்திமதிக்கும் *
பொற்பகம்பிரியாக்கற்பகங்கமல *
வாகனமமைத்துமாகனம்பொருந்திய *
சுந்தரமூர்த்திசெந்தமிழ்க்கவிஞனைக் *
கனிட்டபிதாமனத்திநிட்டமாய்நடப்போன் *
குடக்கநிறைந்தகொள்கைபோன்றென்று *
மடக்கமும்பொறையுமமைந்திடுசீல *
னைந்திலக்கணமுஞ்சந்தகம்விரும்பி *
வந்துகேட்குநர்க்குவழங்குமம்பல *
வாணனெனும்பெயர்பூணுகவிஞனும் *
மலைக்கொடிமலைபுணாமுலைச்சுவடணிந்து *
மாவடியமர்ந்தசேவுயர்கொடியன் *
றொண்டைநாடிசசெய்தொண்டைநாட்டம் *
புலியூர்சோலைப்புலியூர்க்கோட்டத் *
தென்றும்புகழ்மிகுகுன்றத்தூர்வாழ் *
கோக்குழாம்பரவுஞ்சேக்கிழார்கோத்திரன் *
வேதாந்தஞ்சித்தாந்தம்விளங்கிடு *
பேதாபேதப்பிறிவறிந்தரசர்க் *
கமைச்சனுந்தியாகராசனருந்தவத் *
தமைப்பினிலுதித்தவழகியசற்குணன் *

வேணுவனத்தமர்தாணுவாம்பொருண் *
மறையவர்சிறூர்க்குத்துறைபலவாகிய *
வேதமுதற்கலேயோதுவித்தருளுமத் *
திருவிளேயாட்டைப்பெருவிருப்புற்றுச் *
செய்திகபாமுமுய்திறம்பெற்றேன் *
கல்வியின்ஞைதன்கலந்தநட்பினர்க்குக் *
கவராமனத்தொடுகொருதியதுதவுஞ் *
சிவராமனெனுஞ்சீரபிதாமனும் *
மதுவூர்சோலேப்புதுவூர்மருவு *
மிராமசுவாமியெனும்பெருவள்ளல் *
தராதலத்துவந்துசெய்தவப்பயக்காதலன் *
முறுக்கலர்சோலேக்குறுக்குத்துறைநதித் *
திருவுருமாமலேமருவியகுமரன் *
பச்சைசாத்தியெழுந்தருள்பவனியை *
முச்சகம்புகழச்சச்சையன்பாற்செய் *
சுப்பிரமணியனைப்புநற்கனிட்டன் *
அரியகலேகளகத்தமைவுறப்பயின் *
றரியமாந்தர்க்குணர்த்தவல்லவ *
னுள்ளிநாடோறுமுறவினர்க்குதவும் *
வள்ளிநாயகமாகியமகிபனு *
மொத்துத்தம்பொருளுத்தரஞ்செலுத்துபு *
வுத்தமக்கருவிகளித்தலம்வரவழை இ *
முத்தமிழாகரவித்தகவச்சுக் *
கூடமென்பெயற்பெயர்குணித்துநிறீஇச் *
சிவதருமோத்தரவுவமைபிலுரைமுத *
லிலக்கணமிலக்கியந்தலக்கண்விளக்கிய *
வச்சுக்கூடமறமுதற்பயன்கொடுத் *
திச்சகத்தென்றுமினிதுமல்குகவே *

நிலேமண்டிலவாசிரியமுற்றும்

உ

சிவமயம்

# சிவதருமோத்தரவுரை

## சிறப்புப்பாயிரம்

### கடவுள்வாழ்த்து

#### கணபதிவணக்கம்

மலைக்குமகள்பெற்றமகனைக்கயமுகத்தனைமனத்திருத்தியா ※
னலற்பிணிபிறப்பறுக்கவாயகத்தியமுனிக்கருளிய ※
னுலப்பில்காளைக்கடவுளுருத்திரனருத்தறுமுகத்தனா ※
※ ரிலக்குமியலக்கணிலைக்கவுரைப்பலுலப்பிட்டமுறையே ※

என்பது — யான், மலையரையன்மகள்பெற்றமைந்தனும்யானைமுகத்தையு டையவிநாயகனைமனத்திலேதியானித்துவற்றாதகிருபாசமுத்திரமாகியவுருத்திரன து திருமேனியிற்றோன்றியகுமரக்கடவுளானவன்றனதருளினாலான்மாக்களுக்கா ணவாதியாலுண்டானபிறவிநோய்தீர்த்தற்பொருட்டகத்தியமாமுனிக்குபதேசி த்தசிவதருமோத்தரத்தைக்கலிவலிகெடவுமுலகங்கதிபெறவுமுரையாநின்றேனெ ன்றவாறு — யானென்னுமெழுவாயுரைப்பலென்னுமல்லீற்றுத்தன்மைவினைமுற்று டன்முடிந்தது - அணுக்களையென்னுமையுருபு - ஈண்டுநான்கனுருபாய்மயங்கிற்று.

#### சிவபெருமான்வணக்கம்

திருமாலும்போதனுந்தேவருமாமுனிவருமோசெறிந்துபோற்ற ※
மருவாரும்பொழினிலவுந்தில்லைமணிமன்றுடன்மகிழ்வானன்றருவே ※
யுருவாகித்தானுயிர்கட்குருவாகியளித்தடக்கியுய்யச்செய்யும் ※
பெருமானைநிருமலனைச்சிவனையடிபணிந்துளத்திற்பேணுவாமே ※

---

※ இலக்கல் - விளக்கல் - ஈண்டுபதேசப்பொருட்டாய்நின்றது

எ - து — நாரணனும்பிரமாவுந்தேவருமுனிவருநெருங்கிநின்றுதுதிசெயமணநிறைந்தசோலைகள் சூழுந்தில்லைமணிமன்றின்கணின்று நிருத்தஞ்செயமகிழ்வோனுமாய்த்தானேதிருமேனிதரித்தான்மாக்களைச்சிருட்டித்துத்திதித்துச்சங்கரித்தநுக்கிரகஞ்செய்யும் பெருமானுமாயநாதிமலமுத்தனுமாயிருக்கிற சிவனையவனது சீபாதகமலத்தில்யாம்வணங்கியெமதுள்ளத்தின்கட்டியாணிப்பாமென்ற வாறு. ஓகாரம்-அசைநிலை [க]

சின்மயனைச்சிவனைமலவலிதொலையவிஞ்ஞானகலர்க்குஞ்செப்புந் [ம்
* சொன்மயனைத்துகளிலியைத்துலையிலியைப்புலியரவுஞ்சுரர்க்கொப்பாரு
பொன்மயனும்புகழவருள்புரிவானையானைத்துயிரும்பொருந்திப்பேத *
மின்மயனைப்பதம்பணிவாரெண்ணியவர மெணியபடியெய்துவாரே. *

எ-து - ஞானமயனுமாய்மலவலிகெடப்பிரணவர்முதலிய ✠ விஞ்ஞானகலர்க்குமருளிச்செய்ததிவ்வியாகமத்தைவடிவாயுடையனுமாய் மலரகிதனுமாயொப்பிலாதவனுமாய்வியாக்கிர பாதபதஞ்சலிகளுந்தேவர்களுக் கொப்பாகியதில்லை மூவாயிரவருமிரணியவன்ம நாயனாரும்பணியவவர்களுக் கனுக்கிரகஞ்செய்வோனுமாய்ச்சருவான்மாக்களிடத்து மிரண்டறவியாபித்துப்பேதமற்றிருப்போனுமாயிருக்கிறசிவனையவனது சீபாதகமலத்திற்பணியுமவர்கள் கருதினவரத்தைக்கருதினபடியேபொருந்துவர்களென்ற வாறு.

விஞ்ஞானகலர்க்குமென்றவும்மையால் மண்டலர்முதலியபிரளயாகலர்க்குமெனவறிக [உ]

சத்திவணக்கம்

அப்பாலைக்கப்பாலைக்கப்பாலாயபிவரியவமலைதன்னை *
யெப்பாலுந்தானாகித்தொழிலைந்துமியற்றுதேயியற்றுவாளை *
முப்போதுமலர்தூவிமுடிசாய்த்துமனத்தகத்துமுன்னுவாளைத் *
தப்பாதேபிறப்பறுக்குஞ்சிவகாமசவுந்தரியைப்பணிவாந்தாண்முன் *

எ - து, மாயைபெருமாயையெனக்கூறியவிரண்டினுக்குமப்பாலா யான்மாக்களறிதற்கரிதாய்மலமில்லாத சிவசத்தியுமாய்ச்சருவவியாபியுமாய் ஐந்தொழிலுந்தான்செய் யாமற்றன்சன்னிதிமாத்திரத்திலே காரியப்படுத்துமவளுமாய்த்தனது சீபாதங்களின் மூன்றுகாலங்களுமலர்களைத்தூவி யிதையகமலத்திற்றியானித்து

*சொல்லென்பதாகும்பெயராயாகமத்தையுணர்த்திற்று
✠—விஞ்ஞானகலர். பிரளயாகலர். சகலர்என்னுமூவகையான்மபேதங்களைத்தத்துவப்பிரகாசம். கூயஎ. ம்பாட்டிற்கண்டுகொள்க

வணக்கஞ் செய்யுமடியாருடையபிறப்பை நிச்சயமாகவறுப்பவளுமாயிருக்கிற சிவகாமசவுந்தரியையவளதுசீபாதகமலத்தின்முன்யாம்பணிவாமென்றவாறு.

✠ அப்பாலைக்கப்பாலைக்கப்பாலானை யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறேயென்பதனாலறிக. [௯]

## காரைக்காலம்மைமுதலாயினோர்வணக்கம்

ஆலவனத்தமலனடங்கண்டுவந்தகாரைக்காலம்மைதன்னைப் ✻
பாலருந்தியுமைமுலையிற்பதிகவிதம்பலபகர்ந்தபாலன்றன்னைச் ✻
சூலையினைச்சிவனருளாற்றுடைத்தானைத்தடுத்தாண்டான்றோழன்றன்னை ✻
மாலைமணிவாசகனைமற்றையடியவரையுமடிவணங்குவாமே ✻

எ-து. திருவாலங்காடென்னுந்திருப்பதியின்கணின்றும் பரமசிவன்முஞ்சமாமுனிகார்க்கோடராகிய நாகராசாவிவர்களுக்குத்திருநடஞ்செய்யுமூலதாண்டவத்தைத்தெரிசித்துச்சந்தோஷித்தகாரைக்காலம்மையையுஞ்,சீகாழியிற் பெரியநாயகியார்திருமுலைப்பாலையமுதுசெய்ததனாற்றிருஞானமுண்டாய்ப் பலசந்தத்தாற்றிருப்பதிகங்களையருளிச்செய்ததிருஞானசம்பந்தநாயனாரையும்,வீரட்டேசுரனருளினாலேசூலைநோய்நீங்கியதிருநாவுக்கரசரையுந், தடுத்தாட்கொள்ளுஞ்சிவனுக்குத்தோழனான சுந்தரப்பெருமானாயனாரையும், ரத்னமாலைபோன்றவாசகத்தையுடையவாதவூராளியையுந், தண்டேசுரர்முதலாகியபத்தர்களையுமவர்கள்சீபாதத்தில்வணக்கஞ்செய்வாமென்றவாறு. [௪]

## வாழ்த்து

வானவரும்பூசுரருமாதவருங்கோதனமுமன்னரிவர்க ✻
கானமதினடமாடியடியார்க்கும்பதமருத்துங்கருணையாரு ✻
மூனமறவோங்கிடுகவுலகிதனைமனுமுறையாலோம்புமன்னர் ✻
தானவினையொடுதழைகதிங்கடோறும்மாரிபொழிகதானே ✻

எ-து. வெளி,சூத்திரம், வெளிப்படுசொல்லேகிளத்தல்வேண்டா வெளிப்படவாராகிளத்தல்வேண்டும்என்பதினாலறிக, சூ- கடவுளுமுனிவரும்பசுவும்பார்ப்பாரு

---

அப்பர்

✠ மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானை வெண்பளிங்கினுட்பதித்தசோதியானை, யொப்பானையொப்பிலாவொருவன்றன்னை யுத்தமனை நித்திலத்தையுலகமெல்லாம்,வைப்பானைக்களைவானை வருவிப்பானைவல்வினையேன்மனத்தகத்தேமன்னினானை, யப்பாலைக்கப்பாலைக்கப்பாலானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே.

மாசருமறையு நான்குமென்ப என்றார் தொல்காப்பியனாராதலாலிக்கருத்தைப்பற்றி யிவ்வாசிரியரும்வாழ்த்துக்கூறியதெனவறிக. [ரு]

## அவையடக்கம்

சீரியருஞ்சீரியரையல்லாரைத்தனச்சிறுமைசெப்புவாரோ ※
ஆரியருமாரியரையல்லாரைக்குலப்பழுதுமறைவரோயோ ※
வீரியரும்வீரியரையல்லாரைவலியின்மைவிளம்புவாரோ ※
கூரியருங்கூரியரையல்லாரைச்சொற்றவறுங்கூறுவாரோ ※

எ-று. தனவான்களுந் தனமில்லாதவர்களைத் தனச்சிறுமையுடையீரென்றுசொல்லுவர்களோ, சாதுமான்களுமாய்ப்பூச்சியருமாயிருக்கிறவர்கள் சாதியில்லாதவர்களைக் குலப்பழுதுஞ்சொல்லுவர்களோ, வெற்றிப் பாட்டினையுடையசூரர்களும் வீரத்துவமில்லாதவர்களை யேழையென்று சொல்லுவர்களோ, அதுபோலப் பஞ்சலக்கணமுதலியவற்றைக்கற்றுக்கூரிய புத்தியையுடையவர்கள் அஃதில்லாதவெம்போல்வார்சொன்னசொல்லுக்குங் குற்றஞ்சொல்லுவர்களோ சொல்லார்களென்றவாறு.

ஆரியர் அறிவுடையோர் - ஏகார - ஓகாரங்கள் - எதிர்மறைச்சொற்கள்

சூ. அவையடக்கியலேயரிறபத்தெரியின்; வல்லுநர்கூறின் வகுத்தனர்கொண்மினென், றெல்லாமாந்தர்க்கும்வழிமொழிந்தன்றேஎன்றார்தொல்காப்பியனார். [சு]

இந்நூற்சிறப்பும்வரலாறுந்தொகுத்துணர்த்துகின்றார்

ஆதிநடுவந்தமிலாவமலனுயிர்க்கழுக்கறுக்கவறைந்தவாய்மை ※
வேதமுதலுணர்ந்தகுகன்விரைமலர்த்தாளகத்தியன்றுஞ்சீயங் ஏற்றிப் ※
போதகனேவவினைத்துயிர்க்கும்புலமாக்குநெறிபுகலாவென்னக்க ※
ஞ்ஞோதியருள்சிவதருமோத்தரநூலைத்தொகைசெய்துரைப்பாமோர்ந்தே ※

எ-று. யாம், முதனடுவீறில்லாத நின்மலனாகியசிவனுயிர்களுக்காணவமுதலிய பாசங்களையறுக்கையின் பொருட்டருளிச்செய்த வேதாகமமுதலியவுண்மைஞானத்தையுணர்ந்த சுப்பிரமணியனதுமணம்பொருந்திய செந்தாமரைபோன்றசீபாதங்களைவணங்கிஞானாசாரியனே சருவான்மாக்களுக்கு மறிவுண்டாமார்க்கத்தைத் திருவுளம்பற்றுவாயாக வென்றகத்தியன்விண்ணப்பஞ்செய்யவந்தச்சுப்பிரமணியன்றிருவுளம்பற்றிய சிவதருமோத்தர மென்னுஞ்சிவாகமத்தையுற்றுநோக்கித் தொகுத்துத்தமிழாற்சொல்லாநின்றோ மென்றவாறு.

தொகைசெய்துமென்ற வும்மையால்,வகுத்துமெனவறிக அகமாகியவிந்திய

பருப்பதத்தைக்கீழ்ப்படுத்துகையால் அகத்தியனெனப்பெயராயிற்று. ரு. வினையி னீங்கிவிளங்கியவறிவின்: முனைவன்கண்டது முதனூலாகும் என்னும் முன்னூலைப்பார் த்துமொழிபெயர்த்துரைக்கையாலிதுவழி நூலெனப்பெயர்பெறும். சு. வழியெனப் படுவததன்வழித்தாகுமதுவே தானுமீரிருவகைத்தே தொகுத்தல்விரித்தல்தொகை விரிமொழிபெயர்ப்பெனத் தரு நூல்யாப்பீரிரண்டென்ப. என்பதனுள் இஃது தொ கைவகையெனவறிக. அக்கியோன்பெயரை முதற்கட்கூறு நூற்பெயரைக் கூறிய தென்னுதலிற்றோவெனின். எல்லாரும்பிரமாணமாகவங்கீகரிக்கவேண்டுமெயா னென்க, ஆக்கியோன்பெயர்முதலியனவருமாறு, ஆக்கியோன்பெயர், மறைஞானச ம்பந்தநாயனார். வழி. சிவாகமத்தின்வழி. எல்லை. தமிழ்வழங்குமபூமி. நூற்பெயர். முத னூலாற்பெற்றபெயர், யாப்பு, தொகைவகை, நுதலியபொருள், சிவதன்மம்சிவஞான தானமுதலாயின, கேட்போர். அவர்மாணாக்கர், பயன், வீடுபேறெனவறிக [௧]

கயிலாயத்திலிருக்குங்கந்தனையகத்தியர்வணங்குஞ்செய்யுளிரண்டு
முறையேவருமாறுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

மாதவனகத்தியன்மலைக்குமகள்பெற்ற ※
போதகனைவெள்ளிமயமாகியபொருப்பின் ※
வேதமுணர்சண்முகனைவித்தகனையுற்றே ※
பாதமலர்முன்றுதிவிதத்தொடுபணிந்தே ※

எ. து. மகத்தாகியதபசினையுடையவகத்தியர் வெள்ளிமயமாகிய கயிலைமலையி ன்கட்சென்றுமலையரையன்மகள் பயந்தவுபதேசக்குரவனும்வேதத்தையுணர்ந்தவ றுமுகனுமாகியவித்தகனைப்பலவிதமாகியதுதிகளினாலெதிர்பணிந்தென்றவாறு.

ஏகாரம். ஈற்றசை. [௨]

நின்னதடிகண்டிடினுநீசர்வினைநீங்கிப் ※
பொன்னுலகமெய்தியதனன்பொருள்புணர்ந்தே ※
யின்னிசையிருக்குமொழியந்தணர்களென்னப் ※
பின்னவைவரொன்னறைவன்மற்றையவர்பேறே ※

எ. து. பொல்லாதசாதியிற்றோன்றியநீசராயினுந்தேவரீர்சீபாதத்தைக்கண்டார்க ளேயாயிற்றீவினைநீங்கிச்சுவர்க்கத்தின்கணுற்றுண்டுண்டாகியால்லபோகங்களையனு பவித்ததுதொலைந்தவாறேபூமியின்கணினியவோசையையுடையவிருக்குமுதலியம றைமொழிகளையதிகரிக்கும்பிராமணராய்வந்துபிறப்பார்கள்ஆகையானற்குலத்து

ள்ளோராய்வந்துநின்று திருவடிகளைத்தெரிசிக்கில்அவர்களடையும்பலமெங்ஙனஞ் சொல்லுகேனென்றவாறு [கூ]

என்றிவ்வியவாய்மைகளியம்பியிறைகூற *
வன்றுமைதனக்கிலகீழ்யுமறிந்தா *
யின்றுயிர்தனக்குறுநிபோருளெனக்கே *
யொன்றியருளின்றமையிதும்நொடிரவோனே *

எ. து. வாரீர்மகாபெலத்தையுடையவரே முன்னேட்பார்வதியார்க்குப்பரமேசுரன்றிவ்வியாகமங்களையருளிச் செய்யவப்பொழுதெல்லாவற்றையுங்கேட்டறிந்தீர் தேவரீர்சிவனது கிருபையுடன்பொருந்தியிருக்கையாலிப்பொழுதுயிர்க்குறுதியான நூலையெனக்குத்திருவுளஞ்செய்வீராகவென்றவாறு [ய]

என்றுமுனிசண்முகனையேசறவுபேசி *
நின்றுபினுமாகரவுநீட நிறைகூட *
வன்றுவினவுந்திறமனைத்தையுமதித்தே *
யின்றறைவல்பாசவிருளிடறவினைத்தே *

எ. து. அகத்தியமுனியானவர்இப்படியேகருதிக்கந்தனைத்தோத்திரஞ்செய்து நின்றுபின்புசிரத்தையானதுமேன்மேலும் வளர்ந்துசெல்லவறிவுநிலைபெற்றுவணக்கத்துடன்பொருந்தியன்றுவினவியதிறமெல்லாவற்றையும்விசாரித்தான்மாக்கள் பாசவிருண்மெலிந்துகெடும்படிக்கிப்பொழுதுசொல்லாநின்றேனென்றவாறு [யக]

உத்தமசுரர்க்கநிபவூனவினையோட்டும் *
வித்தகவிசாகமயில்வாகனவிண்மேவும் *
புத்தியொடுமுத்திதருபோதகபுலாலுண் *
சத்திதரயான்வினவல்கேட்டுவிடைசாற்றாய் *

எ. து. வெளி [யஉ]

தக்கசிவதன்மநெறிதன்னுளரிதாய *
ரிக்கசிவதன்மநெறியாதுவிபரீத *
முக்குணர்வுகித்திடவுளைக்குமுளையாதோ *
நக்கனடியர்ச்சனையும்பாகிவைநவிற்றாய் *

எ. து. தகுதிப்பாட்டினையுடையசிவபுண்ணியங்களுக் குட்பிறரறிதற்கரிதாய மிகுந்தபலத்தைக்கொடுக்குஞ் சிவதன்மத்தின் முறைமையாது, வாக்கியங்

களனேகமுளவாயினும் ஐயந்திரிபின்றிமெய் யுணர்வுதோன்றாதலில்லாவாக்கியம்யாது, சிவனதுதிருவடியிற்பூசைசெய்யுமுறைமையாது, இவையெல்லாமெனக்குத்திருவுளஞ்செய்வாயாகவென்றவாறு. [௰௩]

நாடரிய ஞானதரதான முநவிற்றாய் ※
பீடுபெறுபேதமுமெனக்கு முறைபேசா ※
யீடுபெறவீயு முறையீபவரிப்பார் ※
கூடுபயனுமியவனைத்து முறைகூறாய் ※

எ - து - ஆன்மாக்களறிதற்கரியவிசிட்டமானசிவஞானதானவிதியையும், பெருமையினையுடையஞானதானஞ்செய்யுமதற்குமண்டபம் அதியாகம்பூசைமுதலியவிதியையும், பெருமைபொருந்தத்தானங்கொடுக்கும்விதியையு, மதனைக்கொடுக்குமவர்கள்வாங்குமவர்களுடையும்பலத்தையுமிவையெல்லாவற்றையுமெனக்கருளிற்றிருவுளஞ்செய்வாயாகவென்றவாறு.

அனைத்துமென்பதனாற்கன்மயாகமுதலியஐவகையாகத்தையும், பலவிசிட்டகாரணத்தையுஞ், சிவதருமபேதத்தையும், பாவவினைத்திறத்தையு, மான்மாக்கள்சுவர்க்காதிகங்களையடையுமுறைமையையுமவர்கள்செனனமரணப்பட்டுலகத்துற்றுயருறுமுறைமையையுநரகத்தில்வினைப்பயனையனுபவித்துச்சேடமாயதற்கேற்றவுடையாளத்தைப்பூமியின்கண்வந்துபொருந்துமுறைமையையுஞ்சிவஞானயோகத்தின்முறைமையினையு நித்தியமுதலியகன்மலோபத்துக்குப்பரிகாரஞ்செய்யுதலைத்தீர்க்குமுறைமையினையும், பசுக்களிற்குஞ்சிவலோகத்தின்வளத்தினையும், விஞ்ஞானதெனவறிகஇதனைப்பரமதருமோபதேசமென்னுஞ்செய்யுளாற்பின்னர்முடித்துக்கூறுகின்றாராண்டுக்காண்க [௰௪]

மேற்குமாரனதுதிருவாக்குரைக்கின்றார்.

வேறு.

என்றாமுனிவினவுதலுமிரக்கமெய்ந்நெறியுடையாறுமான்றாவினை
யிலீசன், றுன்றுகயிலாயநினைந்துதயக்கநீங்கச் சொல்லுவங்கேண்முனிவர
னேதுகளிலீச, னன்றாநள்செய்சிவதன்மோத்தரமெனுநூலினாமதனையுரிந்
துசிலரதனையாக்கிச், சென்றனையசிவபுரியைத்தெ நண்ணிநந்தம்மைச் சிவ
னடியைச்சிலரடையமலருந்தேய்த்தே.

எ-து அகத்தியமாமுனியிவ்வாறுவினவியவளவிலழகினையுடைய குமாரசுவாமிகிருபைசெனித் தொப்பிலாதசிவனது நெருங்கினவீக்கமுலினையு டையசீபாதங்

களைத்தியானஞ்செய்தபின்பு முனிவரனே நின்மலனாகியசிவன் பக்குவான்மாக்களிற்சிறிதுபேர்சிவதன்மங்களையறிந்தனுட்டித்ததனாற் சிவலோகத்தையடையவும் அதிபக்குவரிற்சிவஞானத்தினாலே யாணவமுதலியவாதைகளைப் போக்கித்தற்சொரூபதெரிசனப்படுத்தித்தனது திருவடியையடையவுஞ், சிருட்டிகாலத்திற் சிவனருளிச்செய்தகாமிகமுதலிய திவ்வியாகமமிருபத்தெட்டினுட் சந்தானசருவோத்தமமென்னுமூலாகமத்தினுபபேதமாகிய ஈசானஞ், சிவதன்மம் சிவதருமோத்தரம் திவ்வியப்புரோத்தம் குபேரமெனக்கூறியவைந்தினுட் சிவதருமோத்தரமென்னுமுபாகமத்தை ஐயந்திரிபுநீங்கயாஞ் சொல்லாநின்றேமதனைக் கேட்பாயாகவென்றாரால்.

மலமுமென்றவும்மையாற் கன்மமாயையுமெனவறிக -ஏகாரம்- ஈற்றசை இஃதுபபேதமென்பதனை ஆகமத்திற்சருவோத்தமத்துபபேதமெனப் பின்னர்க்கூறுகின்றார். [ம நு]

சூ. வணக்கமதிகாரமென்றிரண்டுஞ்சொல்லச்சிறப்பென்னுபாயிரமாஞ்சீர், அபிரமுகத்தாலதன்றதாயினும் பாயிரமில்லதுபனுவலன்றே- என்பதனுல்பாயிரமுரைத்து நூலுரைத்தன்றோவெனக்கொள்க-யாதானுமோர்நூற்குப்பொருளுரைக்குங்கால் காண்டிகைவகையானுமுரைவகையானுமுரைக்கப்பெறும் - ஈண்டிந்நூற்குக்கூறியதியாதெனில்-சூ - சூத்திரத்துட்பொருளன்றியுமியாப்பின்றியமையாதியல்பவையெல்லாமொன்றவுரைப்பதுரையெனப்படுமே பொழிப் பேயகலநுட்பமெச்சமென்றப்பாலுன்கேயுரைக்குறுப்பாகும் - பொழிப்பேபொருளை யொருப்படத்துரைத்தல், விரித்துரைகாட்டனேயகலமென்ப நுட்பமப்பொருட் கேற்பவுணர்த்தல் ஆகுத்தபொருளாயகன்றுநிற்பதனையெடுத் துரைப்பதுவேயெச்சமாகும், இதனிற்பொழிப்பென்பது, தொகுத்துணர்த்தல், அகலமென்பது, விரித்துணர்த்தல், நுட்பமென்பது கடாவிடைகூறல், எச்சமென்பதுகடாவறத்துணிந்தபொருள், இதனுனேஓரோவழியாற்சிறப்புப்பாயிரங்கூறியதெனவறிக.

## முதலாவதுபரமதருமாதியியல்

இவ்வோத்தென்னபெயர்த்தோவெனின்,பரமதருமமாகியசிரத்தைமுதலியவிஷயைக்கூறுகையாற் பரமதருமாதியியலென்னும்பெயர்த்து - சூ. இயலிசையனுநதமிழ்நடையுமாகும் என்பதனுல்தனித்தமிழ்நடையாற் கூறுதலாலியலென்றார், மேலித்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின் றுத்தமுறையானேசிவதருமத்துக்குமூலஞ்சிரத்தையென்றுணர்த்துதனுதலிற்று.

அதரவேபரமானவறமதாகுமாதிடுவெந்தமிவற்றனைத்துமாகு ✲
மாதரவற்றவரிகையறமேயாகாதாதலினலாதரவேமூலமாகு ✲
மாதரவேபிரகிருதியான்மாவீசனெனும்பொருண்மூன்றுமறிவிக்குமாமென்றுள ✲
மாதரவேயடைவிக்குமாதலாலேயனைத்தினுக்குமாதரவேமூலமாமே ✲

எ - து - வெளி, சிரத்தைக்குப்பரியாயப்பெயர் பத்தியெனவும்பாவமெனவும் பாமப்பிரீதியெனவுஞ் சிவதன்மத்திலொருப்பாடெனவும்பிரதிபத்தியெனவும் ஐந்துவிதப்படும்அவைகளையாண்டாண்டுவந்துழிக்காண்க. அதரவு - எ - துசிரத்தை [௰௯]

மேலதனைவற்புறுத்தியுணர்த்துகின்றார்

மகவினையாலாகத்தின்வருத்தந்தன்னான் மாநிதியால்மற்றுமுளபொருள்களாலுந், தகைபெறுவானவராலுங்காதலின்றேற்சாதிக்கப்படுவதலந் தருமந்தானே, புவகைபுறவாதரவாற்சிறிதேதேனுமுதவியிடுமறமதனாற் பெரிதுண்டாகு, மகபெகலுமாதரவேயரியபேறென்றறியாதாரென்பெறுவரன்றோவன்றோ.

எ - து யாகாதிகன்மத்தினாலேயாதல்கிருச் சிரசாந்திராயணமுதலியவற்றாற் சரீரத்தைவாடுதல்பண்ணியாதல் மிகுந்ததிரவியத்தாலாதல் ஏனையரத்தினமுதலியபொருள்களினாலாதல்சிரத் தையில்லாதவிடத்துத்தகைமைப்பாட்டையுடையதேவர்களாலுஞ்சிவதன்மங்கள்சாதிக்கப்படுவதல் லயாதொருவர்சிரத்தையுடனேயற்பமேதாயினுந்தானஞ்செய்யிலதனாலேமிகுந்தபலத்தைக்கொடுக்குந்தன்மையுண்டாம் ஆதலான்மனநெகிழ்ச்சியுடையவாதரவே பெறற்கரியபேறென்றறியமாட்டாதார் என்னபலத்தையடையப்போகிறார்கள் ஐயோஐயோவென்றவாறு.

வானவராலும்பெறற்கரிதெனவேயேனை யோராலுஞ்சாதிக்கப்பெறாதென்பதாம் - ஏகாரம் - ஈற்றசை அன்றோவன்றோ எ-துஇரக்கத்தின்கண்வந்தகுறிப்பு [௨௰]

சிவவாக்கியத்தினதுவிசிட்டமுணர்த்துகின்றார்

முனிவரனேசிவதருமமூலஞ்சொன்றேமொழிந்திடுவெவ்வாக்கியங்கேண் மோகம் போகப், புனிதமுறுமனமொருமைப்புந்திதானும்பொய் யகலமெய்யகலப்பொள்ளலாக்கைத், துனி தொலையத்துன்பிலோயில்சோதிபாதங் கூடியிடச்சிரம் படர்ந் துதொடர்ந்துநின்ற, வினைவிளியவிறையுறுமேவேகேட்பார்தங்கள்விளக்கெனமெய்ப்பொருளையதுவிளக்கும்போ.

எ - று - வாராய்முனிகளுக்குட்சிறப்பினையுடையவனே சிவதன்மத்துக்குச்சிரத்தைதானேமூலமென்றுசொன்னோம்; அவனருளிச்செய்தசிவவாக்கியத்தையாசையுடன் கேட்போருடைய சுகதுக்கங்கண் முற்றுதலாலுண்டாகியமோகங்கெடவும், மனங்கவராது நிச்சயிப்பிக்கும்புத்தியுமென்னவே யந்தக்கரணங்கள்சுத்திபெறவும், பொய்யானதவறைப்பொருந்தாமல்விட்டுப்போகவுமெய்யானதவரிடத்திற்பொருந்தியெங்கும்பரம்பவும், நவத்துவாரத்தினையுடையசரீரத்தையெடுக்குந் துக்கமொழியவும், தனக்கொப்பொருவருமில்லாதசிவனது சிபாதத்தைத்தலையிற்றரிக்கவும், பிரவாகரூபியாயசெனனங்கட்டொழவும், அடையாநின்றகன்மக்ஷயம்பிறக்கவும், விளக்கானதுவிசுவத்திற்பதார்த்தங்களைவிளக்குவதுபோலப்பக்குவான்மாக்களுடைய விதையகமலத்திற்பதார்த்தமுதலியபொருள்களைவிளக்கவும், மந்தச்சிவவாக்கியத்தைச்சொல்லாநின்றோமதனைக்கேட்பாயாகவென்றவாறு. [௰அ]

கபிலர்பதஞ்சலிமுதலாயினோர்வாக்கியங்கள் பிரமாணமல்லவோவென்னிலவர் கண்மலத்தோடு கூடினவர்களாதலாலவர்கள் வாக்கியம் ஆப்தமானபிரமாணமல்லவாதலாற்சருவஞ்ஞனாகியசிவனது திருவாக்கேபோகமோக்ஷங்களைக் கொடுக்குமென்றுரைக்கின்றார்.

அமலவரனருளியசொல்வாக்கியமோது தானாரத்தத்தாலக்கரத்தாலநி
கமற்பது, சமலருரையதுபோலவிபரீதஞ்சிறிதுஞ்சாற்றுதேயுள்ளபடி. சாற்
றுஞ்சாற்று, மமலனையுமறுக்கங்களையுமப்பேதமனைத்தினையுமறிவிக்குமாத
லாலே, பவமொருவுநெறிதன்னைப்பாக்கும்போகம்பாலிக்குந் தானமுதற்ப
கர்தலாலே

எ - று மலமில்லாதசிவனருளிச்செய்ததிருவாக்கேசிட்டமானவாக்கியம், அந்தவாக்கியமானதெழுத்தினாற் சுருக்கமும்பொருளினாற்பெருமையுமாயிருக்கும், மஃதன்றிபிராகிருதிவசத்தாலே கூடினவான்மாக்கள்வசனம்போல விபரீதஞ் சிறிதுஞ்சொல்லாமலுள்ளபடியே சொல்லுமஃதன்றிப்பக்குவமான் மாக்களையும்பாசமாகிய வன்பேதமனைத்தினையுமறிவிப்பதினாலுந் தானம்பாகமுதலிய வற்றைச்சொல்லுகையாலே போகத்தையுங்கொடுக்கும். மந்தப்போகம் புசித்துத் தொலைந்தபின்னர்ச்செனனமரணப்படாமற் பரமமானமோக்ஷத்தையுங்கொடுக்குமென்றவாறு.

உள்ளபடியேசொல்லுமதிடமொழியில்-சூ-பா-சுணிதத்து மந்திரத்துங்காண்க

ச்செய்தவான்மாக்களுமந்தவரசனைச்சிவனென்றேபுத் திபண்ணக்கடவர்கள், அப்படிபுத்திபண்ணினோர்களிந்தப் பூமியிலேதானேயறம்பொருளின்பங்களைப்பெறுவர்கள்அரசனுமிந்தமனுநூன்முறையேயொழுகுமவரிடத்தும்பொருளை யாறுகூறுக்கிக் குடிக்கைந்துகூறுந் தனக்கொருகூறுமாகக்கொள்ளக் கடவனறநெறியினொழுகாததீவினையோர்பாற்கொள்ளும் பொருளரசனை நரகில்விழும்படி செலுத்துமாதலாற் பொருளனைத்துங் கொள்ளக்கருதாமலந்தத் தீவினையோர்களைக்குற்றத்துக்குத்தக்கதண்டஞ்செய்துவாங்கியறநெறியினிறுத்துவனாயினவ்வரசனரகினையடையானென்றவாறு. [உச]

குருவானவனிராசாவுக்குத்தன்மபுத்தி வருவிக்குமுபாயமு மந்தக்குரவனுக்கிவன்செய்யுங் கைம்மாறுவேறில்லையென்பதூஉமுணர்த்துகின்றார்

பார்த்திபனுங் காமத்திற்பொருளிற்சாலப் பற்றுடையனெனிற்குரவன் பரிவுகூர்ந்து, நீர்த்திடுகமந்திரத் தாலவுடனாதித்திறத்தினுமே யறத்தினவன் சிந்தைசெல்லப், பார்த்திடுகபரயோகம்பின்புநல்கப் பரயோகமளித்துவினைப்பகைசாராமற், காத்தகுரவனுக்கிவன்செய்கைம் மாறுண்டோ காசினியும் பொருளனைத்துங் கைம்மாறன்றே,

எ-து. இராசாவானவன் காமவிகாரத்திலுந்தனத்தேடுதலிலு மிகுந்தவாசையுடையனாயிற் குருவானவனிராசாவுக்கிப் படிபொல்லாதபுத்தியுண்டாகிறதே யென்றிரங்கியதுபோம்படி மந்திரவாதத்தாலும், மருந்துமுதலியவற்றாலும், சித்தம்வேறன்றுமனமறத்தின்கட்செல்லும்வண்ணமுணர்த்தப்பின்புமேலான ஞானயோகங்களையுபதேசித்திரக்ஷிக்கக்கடவனங்ஙனஞானயோகத்தையளித்துவினைப் பகையொருவண்ணமிரக்ஷித்தவாசிரியனுக் குலகமுழுவதுந் திரண்டானபொருள்களுங்கைம்மாறல்லவேயாதலாலவற்கரையன்செய்யும்பிரத்தியுபகாரமில்லையென்றவாறு ஓகாரம்விகுவின்கண்வந்தது, ஔடதாதியென்பதனுன்மணியுமெனக்கூட்டுக [உரு]

வேதாகமங்களின்முறைமையுமவற்றையுணராதார்பயன்பெறுமையுமுணர்த்துகின்றார்

அப்பாயுநரர்க்கென்றேயமலன்வேதமாதிதனைத்தொகுத்தறைந்தானுயாநூமிவற்றை, நிற்பாருஞ் சிலர்நில்லாக்குரம்பைதன்னை நிலையெனவேகருதியவப்பசுநூறன்னைக், கற்பாருஞ் சிலரமலன்கழறும்வாக்கைக் கருதாதேயவனதடிக்கமலந்தன்னைப், பொற்பாருங்கருணையினுன்மற்றைநூலாற் பொருந்துதலுமரிதுமலம்போக்கருளும்

எ-து நின்மலனாகியசதாசிவதேவநாயனார்பரதகண்டத்திலிருக்குமானிடர்க்குவா னுளற்பமென்றுகருதிவேதாகமங் களைச்சுருக்கித்தமதுபஞ்சவக்திரத்தாற்காமிகா திதிவ்வியாகமங்களையருளிச்செய்தார். இப்படிச்சுருங் கச்சொல்லியிருக்கவுமதனை யோதியதிற்பொருளையறியாமலிருப்பாருஞ்சிலருளர்கீர்க்குமிழிபோலநிலையில்லாத சரீரத் தைநிலையென்றுகருதிப்பிறப்பிறப புக்கேதுவாகியபொல்லாதபசு நூலையே பொருளென்றதனைக்கற்பாருஞ்சிலருளர்அதலாற்சிவன்திருவுளம்பற்றியவேதாகம ங்களைப்பொலிவுபெற்றிருக்கிறதிருவருளினாலேயாராயாததற்கன்னியமானபசு நூல் களையாராயவதனாற்சிவனதுதிருவடித்தாமரைகளையடைதலுமும்மலங்களைநீக்கலுமரி தென்றவாறு [உ௬]

பதிமுதலியபதார்த்தமநாதியென்றுணர்த்துகின்றார்

ஆதியாலச்செம்பிறுக்குக்களிம்புகாலுமநாதியிலதற்க நுமநாதியாரு
மாதியால்மூலமலமணுக் கட்கெல்லாமாணவமுமநாதியாகட்கநாதியாரு
மாதியாலப்பசுபாசமிக் கவல்லவமலனுமநாதியாகளுமநாதியாரு
மாதியாலுலகத்தையடைக்கித்தன்பாலா க்குவதாம்மாயையுமநாதியாகக நாதியா
மே ௬

எ-து செம்பிறுக்குக்களிம்புமாதியல்ல, அதனைவிசாரிக்குமிடத்துமநாதியேயாம்அதுபோ லஆன்மாக்களுக்கெல்லாமாணவமுமொருகாலத்திலுண்டாயதன்றுஅதுவும், வியா பியாயிருக்கிறவுயிர்களுக் கநாதியேபக்குவான்மாக் களுடையபாசத் தைக்குவயிரி யாயுள்ளசிவனுமான்மாக்களுமாதியல்லவநாதியேதன்னிடத் திலேநின்றும்வியாத் தியாத்மிகமாகவுலகத்தையுண்டாக்கிமீளவுஞ்சத்தியாத்மிகமாகத் தன்னிடத்திற்கா ரியவுருவங்களையொடுக்குமிருவிதமாயையுமாதியல் லவநாதியேகன்மமுமாதியல்ல ச்செனனந்தோறுந்தொடர்ந்துதொடர்ந்து வருகையாற் பிரவாகரூபமாயநாதியேயவரு மென்றவாறு

ஆதியென்பதுஒருகாலத்துண்டாயது, அநாதியென்பதுசகசம் [உ௭]

அந்தச்சிவவாக்கியத்தைப்பக்குவான்மாவுக் குணர்த்தாதஅபக் குவர்க்குணர்த்திற் குற்றமுணர்த்துகின்றார்

போதகனும்மலமும்போக்கித்தன்னுட் பொருவரியபரம்பொருளைப் புணரவெண்ணு,மாதவனுக்கறைகவிறையமலன்வாக்கை மற்றையவர்க்கறை யற்கமனத்துக்கெட்டா,வாதியருள்வாக்கியத்தையருத்தந்தன்னை யருந்தியா

ற்புகழ்முதலாலயர்த்துங்கூறிற்,பாதகனேபோதகனுமவர்களோடும் பற்றிடுவெனெரிநிரையமங்கார்பற்றே

எ. து. ஆணவமுதலியமலங்களைநீக்கித்தன்னிடத்திலியாத்தியிருலேயன்னியமாய்நிற்குமொப்பில்லாதசிவனையடைதற்குவிரும்பும்பெரியதவத்தினையுடைய மாணுக்கர்க்காசிரியனானவன்கருத்தாவாகியசிவனது திருவாக்கையுபதேசிக்க,அல்லாதஅபக்குவர்க்குணர்த்தக்கடவனல்லன். அவர்களுக்குமனேவாக்குக்கெட்டாதசிவனருளிச்செய்ததிவ்வியாகமவாக்கியத்தைத்தான் - அதிற்சொல்லும்பொருளைத்தான் ஐசுவரியநிமித்தமாகவும்,புகழ்முதலியநிமித்தமாகவுமறந்து முறைப் படியினந்தப்போதகனுமிருந்தபாவான்மாவையாயந்தமாணுக்கரோடேதானு மெரிவாய்நிரையத்தையடைவன் அதினின்றுமவர்களைக்கரையேற்றுவார்யாருமிலரென்றவாறு.

புகழ்முதலால் - என்பதனால் - மக்கள்சுற்றமென்னுங்காதலாலும் அரசன் முதலியோர்பயத்தாலும்மாறுகோளாலுமெனவறிக. [உஅ]

சிவபூசைக்குவேண்டும்பயோகங்களுக்குட்டலைமையாகியபஞ்சகௌவியத்தின்முறைமையுணர்த்துகின்றார்,

வேறு

அறைந்தனமமலன்வாக்கையாரிடையாறுஞ்சொல்வாற் *
சிறந்தசிவபூசைக்குத்தேடரும்பொருள்களென்றே *
யிறந்தவரின்போடாமையீண்டெழின்மார்பிற்பூண்டு *
புறம்புனத்தாடிபொற்றாள்புரிந்துமாதவபோதத்தில் *

எ - து - வாராய்மிகுந்ததபசினையுடையானேசிவனது திருவாக்கின்மகிமையைச்சொன்னேமேற்பசுவின்கணுளவாகிய கௌவியங்களாறினையுஞ் சொல்லாநின்றேம்,இவற்றைச்சங்காரகாலத்திலிறந்துபோனஅரியயன்முதலினேரொலும்புடனுமையோட்டையுமெழில்பெருகியமார்பின்கண்ணணிந்து சுடலையின்கணுடாநின்றசிவனதுபொற்பாதத்தைவிரும்பிச்செய் யுஞ்சிவார்ச்சனைக் குத்தேடுமரியபொருளென்றுநின்னறிவின்கட்சிறப்பினேடுமறியக்கடவையென்றவாறு. [உகூ]

அந்தக்கௌவியமுண்டாவதற்குக்காரணமுணர்த்துகின்றார்

அமரருமசுரர்தாமுமமிர்துணக்கருதிவெற்பைத் *

தமதுயர்பலத்தாற்றுங்கிக்கடைந்தபாற்கடலிற்றங்கிப் *
பவமுறுமரியதேனுப் * பஞ்சகம்பரமனாலே *
யவன்முடிக்கருகமானவாறுமவ்வைந்திறமே *

எ - து தேவர்களுமசுரர்களுமமிர்தமுண்ணவிரும்பித்தங்களுடையவலி பெலத்தினாலேமகமேருவைமத்தாகவெடுத்து வாசுகியென்னும்பாம்பைக்கயிற்றாக்கடையப்பட்ட திருப்பாற்கடலிலேநின்றுஞ்சிவனருளினாலே, நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை, யெனக்கூறியவைவகைப்பசுவந் தோன்றிப்பின்புபூமியின்கண்ணேசிவபூசைக்கும்யாகாதிகன்மங்களுக்குமாகவுற்பவித்தன, வந்தவைந்துபசுவின்சட்சிவனதுதிருமுடிக்குரிமையான, கோசலங், கோமயம், பால், தயிர், நெய், கோரோசனை, யாகிய ✠ கௌவியங்களாறுமுண்டாமென்றவாறு. [௬௰]

இதவுமது.

உத்தமரோசனைந்தமுறைத்திடுமாறுமோரின் *
வித்தகப்பொருள்கள்வேண்டும்பலத்தினைவிளைக்குமென்று *
மத்தனையமலன்றன்னையாதரிப்பாருமார *
வித்திறத்திசையத்தோன்றும்பொருள்களுமியம்புவாமே. *

எ. து- பான்முதற்கோரோசனையீறாகவுரைத்தவாறுமாராயிற்சுத்தமாகியபொருள்களே, செகத்பிதாவாகியசிவனையர்ச்சிக்குமவர்களுக் குழம்புசிக்கவவரவர்விரும்பியபோகங்களையெக்காலமுமுண்டாக்குமிப்படிக்கூறப்பட்டகௌவியங்களாறினும்பொருந்திநின்றுதோன்றும்பொருள்களையுமேற்சொல்லுவாமென்றவாறு கோரோசனையைரோசனையெனத்தலைக்குறைத்தலாக்கினார், கோசலத்துக்குத்திருவுண்டாகையாலுங், கோமயத்துக்குவியாதிபோகையாலும், பாலுக்குச்சத்துருநாசமாகையாலுந், தயிருக்குப்புத்திரருண்டாகையாலு,நெய்க்கியாவராலுமதிகபூச்சியமுண்டாகையாலுங், கோரோசனைக்குவயதுஅதிகமுண்டாகையாலும்வேண்டும்பலத்தினையெனச்சிறப்பித்தார் [௬௰௧]

மேற்கூறியவற்றைச்சத்காரியவாதமாகவிசாரித்துரைத்தகின்றார்

---

* பஞ்சகம்-ஐந்தின்கூட்டம் ✠ கௌவியம்-பசுவின்கணுண்டாயது

கோமயமதனில் வில்வங்குறுமுறி கூடத்தோன்றும் ❋
பூமகளுந்த வில்வம்புரிந்த நிற்பொருந்துமாற்றாற் ❋
றூமமார் வில்வந்தானுஞ் சீபலமென்றேசாற்று ❋
நாமமும் புனருமீசர் திருமுடிக்கணியெந்நாளும் ❋

எ - து- கோமயத்தினின்றும் வில்வந்தளிருடன்றோன்றும் அந்த வில்வத்தைத் திருமகள் விரும்பிய தன் கண்ணிருக்குமுறையாலே மாலையாகக்கட்டப்படாநின்றவிந்த வில்வஞ் சீபலமென்னும் பெயரைப்பெறும்- சிவனது திருமுடிக்கெக்காலமுமணிதற்குரியதாயும் விளங்குமென்றவாறு,

மற்றுள்ள புட்பசாதிகளைப்போலக் காலகற்பனையின்றி யெக்காலமுஞ்சாத்துதற்குரித்தாகையாலெந்நாளுமெனச் சிறப்பித்தார் [௯௨]

இதுவுமது.

உற்பலகமலமூலம்பின்பு நிலுந்திக்குநீரிற் ❋
பொற்புறுருங்குலியம் பொலிந்தெழும்புரியயாரு ❋
மற்புதன்றனக்குமற்றையவர்க்குமுணவதாகக் ❋
கற்புறுசெந்நெல்பாலிற்கதிரொடுகலந்துதோன்றும் ❋

எ - து வில்வந்தோன்றியபின் நீலோற்பலக்கிழங்குந்தாமரைக்கிழங்குமந்தக் கோமயத்தின்கண்ணுண்டாம், கோசலத்திகண்ணின்றுமெழுந்மிக்கருங்குலியமானதெல்லாரும் விரும்பவிளங்கித்தோன்றும், பாலிலேநின்றுஞ்சிவனுக்குமற்றுள்ளதேவர்கண், மானிடர், முதாலானயாவர்க்குமுணவாகியசெஞ்சாலிமுதலிய சாலிபேதங்கள்கதிரோடுபொருந்திபுற்பவிக்குமென்றவாறு. [௯௩]

இதுவுமது

சந்தனமுதலாயுள்ளமங்கலந்ததியிறெரு ❋
மந்தாத்தமரருண்ணுமமிர்தமுநவநீதத்தாஞ் ❋
சிந்தையார்சித்திபேதஞ்சிறக்கரோசனையுஞ்செய்யபு ❋
மந்திவான்வண்ணன்மேனிக்கருகமிவ்வாறுமாமே ❋

எ - து தயிரினிடத்திலேசந்தனமுதலிய மங்கலபதார்த்தங்கள்தோன்றும், வெண்ணெயினின்றும் விண்ணினுள்ளதேவர்களருந்துமமிர்தமுண்டாம், கோரோச

ணையாவரும்விரும்பியசித்திபேதங்களைத்தலைமைபெறத்தோற்றுவிக்கும், இங்ஙனங் கூறியவாறுஞ்செக்கர் வானம்போன்ற நிறத்தையுடையசிவனது திருமேனியிலாட் டிப்பணிதற்குரியனவாமென்றவாறு.

சந்தனமுதலாமென்பதனால், அகில், குங்குமமுதலியவெனக்கொள்க, நவநீத ம்-வெண்ணை. [௨௪]

நிறுத்தமுறையானேசிவனையவைகளாலருச்சிக்குமுறைபுணர்த்துகின்றார்

ஆதலானெய்யாற்பாலாலாமிலமற் றமற்றுங் ❈
கோதறுதயிரினாலுந் தூயகனன் முடிமேலாட்டிச் ❈
சீதமதகன்றநீராற் றிளைப்புறவாட்டிச்சேர்ந்த ❈
வாதரவதனலாட்டியாமலகாதியாவும் ❈

என்பது. வெளி, இதனுள், ஆமிலமென்பது, புளிப்பு. மற்றுங்கோதறுதயி எ-து பால்காயாமலுறையிழைவது, சீண்டநாறுவது, முதலியகுற்றங்களில்லாததயிர், சீதம கன்றநீர், இளஞ்சூடானவெந்நீர், ஆமலகாதியென்பதனால், நெல்லிக்காப்பு, மாக் காப்பு, மஞ்சட்காப்பு, எனவறிக. யாவுமென்பதனால், இளநீர், பஞ்சாமிர்தமுதலா யினவென்க [௨௫]

இச்செய்யுண்முதலனைத்துந்தியம்புமென்னுஞ் செய்யுளிருகச் ✠ குளகமாக வுணர்த்துகின்றார்.

சீதளநீருமாட்டித் திகழ்திருமேனியீரம் ❈
போதமதாகவாடையினைத்தரிதாகப்பெற்ற ❈
கோதில்கோரோசனைதிருங் குமக்குழம்புங்கூட்டிக் ❈
காதலால்வில்வந்தன்னைக்கசடறக்கண்ணுற்றகண்டே ❈

எ - து - வெளி, கண்ணுறலேபுழுக்கடியறப்பார்த்துஎன்றுகொள்க [௨௬]

உற்பலகமலத்தோடு பூவகையாற்சாத்திநெய்யாற் ❈
குற்குலுவதனற்றூபங்கொடுத்தொளிகொடுத்தானெய்யாற் ❈

---

✠ தண்டியலங்காரம்- ௫- குளகம்பலபாட் டொருவினைகொள்ளும்

பொற்புறுபாயதானம்புரிப்பறுதநியின்போனந் *
சற்கனாதேனெய்கூட்டிச்சமைத்தவோதனமுந்தாமே *

எ - து - வெளி, இதனுள், உற்பலஞ்: செங்கழுநீர், குற்குலு, குங்குலியம் ஒளி, தீபம், பாயதானம் - பாலன்னம் [௩௭]

நிறைந்துறைநேயத்தோடுநிவேதனஞ்செய்கமற்றுஞ் *
சிறந்துளவுபசாரங்கள்செய்துசெய்முறைகடன்னிற் *
குறைந்துளவவையுமீசபொறுத்தருளென்றுகூறித் *
திறம்பலவலமுஞ்செய்துதெண்டனைப்பணிந்துசேர்ந்தே *

எ - து - வெளி, இதனுள், உபசாரமென்றது, பஞ்சோபசாரம், தசோபசாரம்-சோடசோபசாரமெனவறிக. [௩௮]

அண்டங்களனைத்துமாக்குமலர்மிசையயனேபோற்றி *
யண்டங்களனைத்துங்காக்குமரியெனுமநிபபோற்றி *
யண்டங்களனைத்துமாற்றுமதிபெலவரனேபோற்றி *
யண்டத்தின்பேதத்தப்பாலனுதியேயமலபோற்றி *

எ - து - வெளி. [௩௯]

ஆருயிரனைத்துமின்றவன்னையேயத்தாபோற்றி *
யாருயிரனைத்துநீங்காவரும்பெரும்பொருளேபோற்றி *
யாருயிர்ப்பந்தபாசமறுத்தரு * ளதுலபோற்றி *
யாருயிர்க்கமிர்தமானவன்பனேபோற்றிபோற்றி *

எ - து - வெளி, ஈன்றல், ஆன்மாக்களநாதியுமாய் நித்தியமுமாகையாலே விஞ்ஞானகலருட்டிலமையாகிய அணுசதாசிவர்முதலாயினூர்க் குத்தனுவாதிகளைக் கொடுத்தலெனவறிக, அமிர்தமான, அன்பனென்பது, அமிர்தம்போலினிமைசெய் யுமன்பனெனப்பொருள்கொள்க [௪௰]

* அதுலம் - சமானமின்மை

எனத்துதிப்பியமடும்பத்தர்க்கிட்டமிம்மையினுஞ்செய்வன் *
றனக்குயர்ந்தாரொத்தாரையிலன்சிவன்சகளத் தற்று *
னினைத்தருச்சனைசெய்துய்யநேசர்களாதலாலே *
வினைப்பகைவெல்வார்செய்கவருச்சனைவிதியினாலே *

எ - து - வெளி, மேறகூறியவினையெச்சங்களெல்லாமியம்புமென்னும்பெயரெச்சவினையோடுமுடிந்தன, இம்மையினுமென்றவும்மை, மறுமையும் விளக்கிநின்றது, இச்செய்யுள்யாவர்க்குந்தோன்றாது நிட்களமாய்நின்றசிவன், சகளீகரித்தடியவர்பொருட்டுத்தியானத்திக்கெளியனானதலாற்பிறவித்துயரநீங்கவேண்டினோரருச்சனைசெய்துபிழைக்கவெனப்புத்திகூறினதாயிற்று. [சக]

சிவபூசைசெய்வோரும் அதற்குபத்தியுடனேவல்செய்வோரும் பெறும்பயனுணர்த்துகின்றார்.

முற்றவத்தாலேபூசைமுற்றியபத்தர்மூவேழ் *
சுற்றமுஞ்சுவர்க்கமெய்தத் துன்னுதற்கரியதாய *
வற்புதனுலகந்தன்னைத்தாமடைந்திருப்பரன்பாற் *
சொற்பணிசெய்தார்தாமுந்துரிசறுநெறியினாலே *

எ - து - முற்செனனங்களிற்செய்த புண்ணியபலத்தினாலே விருப்பத்துடன் சிவபூசை செய்தவன்பரானோர், தங் குலத்திலுள்ளமூவேழ்சுற்றமுந்தேவலோகத்திற்செல்லத்தாம்பிறராலணுகுதற்கரியசிவலோகந் தைச் சேர்ந்திருப்பர், அதற்கன்பினாலேயவற்றொழில்செய்தோர்களும்; பிறவித் துயர்தீர்க்குநன்னெறியாகியஞானத்தோடுகூடிச்சிவலோகத்தையடைவர்களென்றவாறு.

அடைந்திருப்பரென்பது, இடைநிலைத்தீபகம், மூவேழ்சுற்றம் - எ-து - மாதுர்வர்க்கம் -எ- பிதிர்வர்க்கம் -எ- தன்வர்க்கம் -எ- ஆ. உ௰க [சஉ]

அர்ச்சனைக்குபயோகமான தருக்கண்முதலியவுமருச்சனையைத்தெரிசித்தோர்பெறும்பலனுமுணர்த்துகின்றார்.

அர்ச்சனைக்குபயோகங்களாகியதருக்களாதி *
கற்புறுசிவலோகத்தைக்கலப்பதே திண்ணங்கண்டோ *
ரற்புதன்பூசைதன்னையருவினையறுவரன்பாற் *

றற்பரன்பூசைகண்டோர்சிவபுரமதனைச்சார்வார் *

எ - து - வெளி, [சங]

மேலதனைக்கேட்டோர்விரும்பினோரடையும்பலனுணர்த்துகின்றார்.

கேட்டுளார்மகிழ்ச்சொல்வார்கிடைக்குமோவெமக்குமென்று *
வேட்டுளாருபகாரங்கள்விளைத்துளாரிவருமெய்ய *
ணுட்டுளார்பிறக்கிலிம்மண்ணுயகராவராகித் *
தேட்டுளார்சிவதன்மங்கள்வாதனைநிகழ்தலாலே *

எ - து - சிவார்ச்சனையின்பெருமையைக்கேட்டுளோர், கேட்போருள்ளமகிழ்வதனைச்சொல்வோர், நமக்குமிப்படிசிவார்ச்சனைசெய்யும்பேறுகிடைக்குமோவென்றுவிரும்பினோர், சிவபூசைக்குபகரணங்கள்கொடுத்துள்ளோர், இவர்களெல்லாருஞ்சிவலோகத்திற்சென்றுமவர்களாம்-அங்ஙனஞ்சிவலோகத்திலுள்ளபோகங்களையனுபவித்துமீண்டும்பூமியிலேதோற்றினிந்தலோகமெல்லாந்தானேயாளுநீதிவேந்தராய்த்தோன்றுவர் , தோன்றியுமுற்செனனத்திற்கேட்டல்வேட்டலுபசரித்தலாகியநல்லவாதனைவிளங்குகையினலேசிவதன்மங்களையேவிருப்பத்துடன்றேடிச்செய்வர்களென்றவாறு.

இவருமென்னுமும்மைமிறந்ததுதழீஇயவெச்சம் -பிறக்கில்- என்றமையாற்சிவலோகபோகத்தைவிரும்பாமையாற்பொசித்தவர்களாண்டிருநதுதானேபரிபக்குவராய்ப்பரகதியடைவரென்பது விளக்கிநின்றது. [சச]

இங்கிதையேபரமமானதன்மமென்றுணர்த்துகின்றார்.

தமக்கபராதமேதஞ்சதமுறச்சாதித்தார்க்கு *
மிமைப்பொழுதெனினுந்துன்பமியற்றிடாவினிமைதன்னை *
யமைத்துநாடிதமிதென்றேயறைந்திடுமதனையாடு *
சமைப்பதேதலைமையானதருமமென்றறிகதக்கார் *

எ - து - வேதாகமநூல்கள், தமக்குயாதாமொருவர், வேறுவேறாகவெண்ணிறந்தகுற்றஞ்செய்பினுமவர்களுக்கொருகாற்கண்ணிமைக்கொட்டுமளவாயினுந்துக்கத்தைச்செய்யாமனன்மையேசெய்யுமின்பத்தையே பொருளாகப்படுத்தியிதுவாயிருக்குமிதமாவதென்றுசொல்லாநிற்கும், ஆகையினலேயந்தநன்மையைமுற்படச்செய்தலேமேலான, அறமென்றுதகுதியையுடையோரறியக்கடவரென்றவாறு அமைத்துச்சொல்லுமெனக்கூட்டுக. [சரு]

சிவதன்மத்தின்விசிட்டமுணர்த்துகின்றார்

செப்பியவொப்பிலாதசிவதருமங்கடம்மைத் ※
தப்பறநினைப்போம்யாமுஞ்சந்திகடோறும்யாமு ※
மிப்படியென்னுவார்முன்னிட்டியவிலைகளோட்டி ※
யொப்பிலாவுமையாள்பாகன்புரத்தினிதுறைவர்மே ※

எ - து வாராய், அகத்தியனேயிங்ஙனங்கூறிய நிகரில்லாதசிவதன்மங்களைநா முங்காலை,புச்சி,மாலை,யென்னுஞ்சந்திகண்மூன்றிலுந்தப்பாமனினைப்போம்,எம்போ லிப்படிகருதுவாரியாவருமுற்செனனங்களிலார்ச்சித்தபாவங்களைப்போக்கியிணையி ல்லாதவுமையையொருபாகத்திலேயுடையசிவனது சிவலோகத்தும் போகங்களைப் பொசித்திருப்பார்களென்றவாறு.

யாமுமென்னு மும்மைமற்றுள்ளதேவர்களிருடிகண் முதலாயினருமெனவறிக. [௧௬]

வேதத்துள்ளுதித்தசிவதன்மமேசிறப்பென்றுணர்த்துகின்றார்.

ஒப்பிலியானெருக்கயிலைநிலயன்வேதத் துள்ளுந் ※
செப்பியசிவதன்மங்கள்சிறந்தநேரியவேதேனுந் ※
தப்பிலாப்பலத்தினாலேதடவரைநிகரசான்றோர் ※
வைப்பெனவிற்றைக்கொள்வர்மகற்பலவாஞ்சையாலே ※

எ - து - தனக்கொப் பாருமில்லாதவனாகியுங்கயிலைமலையிலிருக்கிற சிவனருளி ச்செய்த வேதத்துளுதித்தசிவதன்மங் களெல்லாமகிமையுடையனவாயதிசூக்குமங்க ளாயிருப்பனவென் று தெளியப்படும்படியதிசூக்குமங்களாயிருப் பினும்தப்பாமற் றேற்றுவிக்கும்பலத்தினாலே மகமேருவைப்போலப்பெருத்திருப் பன, ஆகையினா லே யறிவுடையோர்மகத்தாயிருக்கிற பலங் களினுள்ளவிருப்பத்தாலேயவை யிற் றைத்தருமிந்தச் சிவதன்மங் களையென்றதனைச்சேமிக்கும்பொருள் போலக்கைக் கொள்வரென்றவாறு.

மகற்பலம்வடமொழித்திரிவு [௧௭]

முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

என்றுபரமானதருமாதிகளிசைத்தான் ※

குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைமைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - து - வேடர்மகளாகிய வள்ளிநாயகிக் குத்தண்ணளிசெய்துமங்குமுருகக்கடவுளானவன், குறைதிதறையிருக்கிறசிவனைத்தியானஞ்செய்து பஞ்சேந்திரியங்களையுஞ்செயித்துக் கொடியகன்மங்கள்கெடும் படிதவத்தின்கணின்றவகத்தியமாவிருடியறியும்வண்ணம்பரமமானசிவதன்மங் களிப்படியென்றருளிச்செய்தானென்றவாறு. [சஅ]

சூ. சருக்கமுடிவினுமிலம்பகமுடிவினும், விருத்தநடையதுவேறிசைப்பாவே, என்னுமிலக்கணத்தாற்சிவத்துதியியமகத்தாலுணர்த்துகின்றார்.

வேறு *

ஆனிடையைந்தினையாடினனேயம்பரமென்றினுமாடினனே *
கானிடைவேடனுமானவனேகாசியென்மாநகரானவனே *
வானிடைமுப்புரமாற்றினனேவார்சடைமேல்வருமாற்றினனே *
யானெனுமாசுமிலாதவனேயேனையமாசுமிலாதவனே *

எ து- பசுவினிடத்துண்டாகிய பான்முதலிய கௌவியங்களைந்தினையுமாடாநின்றவனே, ஞானம்பரமென்னும் பொதுவினிடம்பண்ணினவனே, விசையன்தபோபலத்தையளத்தற்பொருட்டுக் காட்டகத்துவேடவுருவங்கொண் டவனே, காசியென்னுநாமத்தையுடையதிருப் பதியையுடையவனே, பூமி, யந்தரிக்ஷமாகாசமென்னுமூவிடத்துண்டாகியமுப்புரத் தையெரித் தொழித்தவனே, நீண்டசடையின்மேலேயாயிரமுகதோடுவருந திதியுங் கங்கையாறறினையுடையவனே, யானென்பதற்குக்காரணமானவாணவவிருளில்லாதஞானுதித் தனே, மற்றும்முள்ளமாயைகன்மங்களுமில்லாதவனேயென்றவாறு. [சக]

இதுவுமது

அலைகடனஞ்சமருந்தினனேயாணவநோய்க்குமருந்தினனே *
தலைகலனைகத்தரித்தவனேசார்ந்தவர்பாசத்தரித்தவனே *
சிலைசிலையாக்கியதெள்ளியனேதீம்பணைக்காயந்துளதெள்ளியனே *
விலையிலியானவெண்ணீற்றினனேவிபரீதமற்றவெண்ணீற்றினனே

எ-து வாராய்நெஞ்சமே-யிந்திரியங்களை முனியுமவனும்ப்பாவமில்லாதவனுமா யிருக்கிறவகத்தியனது திருவடிகளை நினைக்கக்கடவை. நினைத்தானீயெண்ணிய நல்ல காரியங்களெல்லாமெளிதாகவேமுடியு-மஃதன்றித்தேவர்களுமிருடிகளுநெருங்கிநின்றுவணங்கத்தனத்தனநதனதனதன தனவென்னுமிராகதாளவொத்துக்கேற்ப ஆனந்தநிருத்தத்தைச்செய்யாநின்றதெள்ளிமையினையும்பகைத்தெழாநின்றதீயோரது முப்புரங்களையுமொருகணப்பொழுதின் கணெரித்தழித்தவெற்றியினையுமுடைய சிவனருளிச்செய்ததிவ்வியாகமங்களனைத்தையுமறிவிக்குமென்றவாறு
முடியும் • தரும் . என்பன - முற்றுவினைகள் [௫உ]

முதலாவதுபாமதருமாதியியன்முற்றும்



# இரண்டாவது சிவஞானதானவியல்

மேலிவ்வோத்தெனணபெயர்த்தோவெனினிறுத்தமுறையானேசிவதன்ம முதலியவற்றைமேலையோத்தினுட்கூறி-யச்சிவதன்மத்தையுணர்த்துவிக்கிறசிவஞானதானத்தினைக்கூறுகையாற்சிவஞானதானதி, யியலென்னும் பெயர்த்து,அச்சிவஞானம்பரஞானமெனவும்• அபரஞானமெனவும்இருவிதமாம்.இதனுள்.பரஞானமாவது•சிவமேடிரண்டற்று,அபேதரூபமாயிருப்பது,அபரஞானமாவது,காமிகமுதலியதிவ்வியாகமங்களெனவறிக,இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனினீதலியற்கைகூறுவாமென்றாசிரியன்கருதியவாறுணர்த்துதனுதலிற்று

அரியஞானத்தையைமைமையலும் *
பிரியவேயொளியாகியபெற்றியைப் *
பருவமுற்றவர்பாலுபதேசிக *
னுருகியோரவுரைப்பதுமோதுவாம் *

எ- து- போதகாசாரியனானவனுன் மாக்களிடத்துவைத்தநேசத்தாற்றனதுள்ளமுருகிஐயந்திரிவாகியவிருணீங்குதற்கழகியதீபமாய்விளங்குமியல்பினையுடைத்தாய்ப்பிறருணர்தற்கரிதாயிருக் கிறஞானசாத்திரத்தையுணரும்படிபக்குவரானமாணக்கரிடத்துபதேசிக்குமுறையுஞ்சொல்வாநின்றோமென்றவாறு

ஐயமென்பது, இரட்டுறக்கருதல், மையல் எறு - ஒன்றைவேறென்றாகவுணர் தல், ஐயமுமையலும்பிரிய, என்பது. ஏனொளிக்கடையாக்குக, உரைப்பதுமென்ற வும்மை.கேட்குமுறையுங்கூறுவதுவிளக்கல்வினைச்சவும்மை [௬]

குமாரசுவாமியானவரகத்தியனைவிளித்துச்சிவஞானவிசிட்டமுணர்த்து வதனையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

சிந்தைசெய்கவகத்திய நீவினைப் ※
பந்தமும்பசுபாசமுமாயையு ※
மந்தமாயையினுக்கியவாக்கையு ※
மைந்துபோகநல்லார்க்குநரர்க்கரோ ※

எ - து வாராயகத்தியனேபக்குவான்மாக்களுக்குச்சஞ்சிதமாகாமிய மான கன்மபேதமும், பசுத்துவமென்னும்பெயரினையுடையவாணவபாசமும், மாயாபந்த மும், அந்தமாயையாலுண்டாகியதேகாதிபந்தமுங்கெடும்படிநீசிந்தைசெய்யாயெ ன்றவாறு அரோ அசை [௨]

விதவெனப்படுந்தாதுவின்வித்தையி ※
னுதையமுமுயிர்கட்குயிராகிய ※
பதிதனக்குருவம்மதுபக்குவர் ※
மதிதனக்குவிளக்கெனவாய்த்ததே ※

எ - து - விதக்ஞானேயென்னும்வடமொழித்தாதுவிற் றோற்றியஞானந்தினது பிரகாசமுமந்தஞானந்தானே யான்மாக்களுக்குப்பிராணனாயிருக்குஞ்சிவனுக்குத் திருமேனியு, மந்தஞானந்தானேபரிபாகத்தினையுடையவான்மாக்கள்புத்திக்குத்தீ பம்போலப்பிரகாசிக்குந்தன்மையுடையதுமாதலாலதனையறிவாயாகவென் றவாறு அதுவென்பதனையிருபாலுங்கூட்டுக,பதிதனக்குருவமென்பது. பரஞானத்தை க்கூறியதெனவறிக.ஏகாரம், ஈற்றசை [௩]

ஆசிரியன்மாணாக்கற்குஞானசாத்திரத்
தையுபதேசிக்குமுறைமையுணர்த்துகின்றார்

பருவமுற்றியபாவகமோர்ந்துபின் ※
னுருகியோதுகவோதருமுண்மையை ※
மருவிவாய்வருபாடையின்வல்லவர்க் ※
கரியவாரியத்தானுமறைகவே ※

எ - து ஆசிரியனானவன், நாலுசாதியினுமுள்ளோர்பாற்பருவமுதிர்ச்சியினாலே யுண்டாம்பத்திசிரத்தைமுதலியவற்றையறிந்துபின்புதனதுள்ளங்கசிந்துஅபக்குவர்க்குச்சொல்லப்படாதஞானசாத்திரத்தையுபதேசிக்க. அஃதெவ்வாறாலெனின், பதினெண்பூமியிலுள்ளோரும்பயின்றுவசனித்துவரும்பாஷாபேதங்களுள்யாதொருபாஷைவல்லோர்க் கந்தந்தப்பாஷையினாலும்வடமொழிவல்லோர்க்குப் பெறுதற்கரியவடமொழியினாலு முபதேசிக்கக்கடவனென்றவாறு.

ஆரியத்தானுமென்றவும்மையாற், பிராகிருதம், சவுரசேனி, மாகதம், பைசாசம், சூளிகாபைசாசி, அவப்பிரங்கிசம், தேசி, எனவறிக. [௪]

இப்படியுபதேசஞ்செய்யுமாசிரியனை மாணாக்கன்சிவனெனச்சிந்திக்குமுறைமையுணர்த்துகின்றார்

ஒப்பிலாவொருவன்சிவனேறிய
வொப்பிலாவுரைதன்னையுரைத்தகத்
தொப்பிலாவுணர்வாக்கிடுமுத்தம
னொப்பிலாவரனேயெனவோர்கவே

எ, து, வெளி, இதனுளொப்பிலாவுணர்வாக்கிடுமுத்தமனென்பது. இணையில்லாதஞானத்தையுண்டாக்கியவாசிரியன் [௫]

பக்குவனுக்கும் அபக்குவனுக்கு ஞானநூலுணர்த்தியவாசிரியரடையும்பலமுணர்த்துகின்றார்

பருவமுற்றவர்பாலுபதேசிகன் ※
பரமனுக்குளவெண்குணம்பற்றுவன் ※
பருவமற்றவர்பாலுபதேசிகன் ※
நரகிடைப்படிவானெடுநாளரோ ※

எ - து வெளி, எண்குணமாவன, சருவக்கினனாதல், நிறைந்திருத்தல், அனா

நிராகிருதி, சுதந்திரதை, எப்போதுமிளையாதசத்தி, அளவில்லாதசத்தி, நிராமயனாயிருக்கை, எப்போதுஞ்சுத்தனாயிருத்தல், எனவறிக. அப்பர், மறுமாற்றத்திருத்தாண்டகம், நாவாரம்பனையேபாடப்பெற்றோ நாணற்றார்நள்ளாமேவிள்ளப்பெற்றோ, மாவாவென்றெமையாள்வானமரர்நாதனயனொடுமாற்கறிவரியவனலாய்நீண்ட-தேவாதிதேவன்சிவனென்சிந்தைசேர்ந்திருந்தான்றென்றிசைக்கோன்றானேவந்து-கோவாடிக்குற்றேவல்செய்கென்றாலுங் குணமாகக்கொள்ளோமெண் குணத்துளோமே, அப்பர். தனித்திருக்குறுந்தொகை, எட்டுமூர்த்தியாய்நின்றியலுந்தொழி, லெட்டுவான்குணத்தீசனெம்மானறனை, யெட்டுமூர்த்தியுமெம்மிறையெம்முளே, யெட்டுமூர்த்தியுமெம்முளொடுங்குமே, சுந்தரமூர்த்தி, திருக்காநாட்டுமுள்ளூர் பண்கொல்லிக்கௌவாணம், இரும்புயர்ந்தமூவிலையசூலத்தினனையிறையவனை மறையவனை யெண்குணத்தினனைச், சுரும்புயர்ந்தகொன்றையொடுதூமதியஞ்சூடுஞ்சடையானை விடையானைச்சோதியெனுஞ்சுடரை, யரும்புயர்ந்தவரவிந்தத்தணிமலர்களேறியன்னங்கள்விளையாடுமகன்றுறையினருகே, கரும்புயர்ந்துபெருஞ்செந்நெனெருங்கிவிளைகழனிக் காநாட்டுமுள்ளூரிற்கண்டுதொழுதேனே, என்றார்சமயகுரவர். முடிவிலாற்றலைதன்வயத்தனைமுற்றுணர்ச்சியைப்பேருண், மடிவிலாட்சியைதூயமேனியைமற்றியற்கையுணர்ச்சியைப், படியிலாவியல்பாகநீங்கியபாசமோமையவரம்பிலின்புடைமையையுன்னடியேங் களென்றுமுனக்கடைக்கலமையனே, என்றார்மேலோரும் [௬]

அபக்குவரிலக்கணத்தைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஓதுவார்க்கிடையூறுரைப்பவர் ❊
வாதுபாடணர்வாக்கைமறப்பவர் ❊
வேதமாதியவோதிவிடுப்பவர் ❊
சாதியாற்றணியாரெனச்சாற்றுவார் ❊

எ - து - ஆசிரியனிடத்தாகமமாதிகளையோதுமாணாக் கர்க்கோதுவியாமல்விக்கினஞ்சொல்லுமவரு, மொருவன்சொல்லாதவார்த்தையைச் சொன்னானென்றவருடன்சொல்லுமவரு, மவர்சொன்னபொருளைத்தரியாமலுடனேமறக்குமவரும், வேதாகமபுராணங்களையோதியதனைப்பலகாலும் பயிற்றாதுவிட்டவர்களும், பார்ப்பார்முதலியநாற்குலத்தோரன்றியிழிகுலத்தோரென்றுசொல்லப்படுமவருமென்றவாறு [௭]

தன்னின்மிக்கநற்சாதியிற்றோன்றினர் ※
இன்னதன்மையறியப்படார் ※
பன்னுநூலின்பயன்முறைப்பற்றிலார் ※
சொன்னசொற்பினுஞ்சோர்வுறச்சொல்லுவார் ※

எ - து - தந்தம்வன்னத்துக்குயர்ந்தசாதியிற் பிறந்தவர்களும்,மின்னசாதியெ ன்றறியப்படாதோரும், மாசிரியரிடத்திற்கேட்டநூலின்பயனைத்தரிக்கமாட்டாதோ ரும், மவரிடத்திற்கேட்டபொருளையதன்வழிசொல்லாமற்றவறச் சொல்லுமவருமெ ன்றவாறு [அ]

சந்தபேதமுந்தானறியாரென ※
விந்தவாறிசைத்தாரொழுவாயினர் ※
நிந்தைசெய்துடனீக்கப்படுமவர் ※
மந்தராமவர்தம்மைமதித்துமே ※

எ - து - வடமொழி தமிழ்மொழியாகிய விருவகைச்சந்தபேதத்தையறியா தோரும், அகங்காரத்தாலேதம்மைப்பெருமையாகவெண்ணுவோரும்,மந்தபுத்தியா யுள்ளோருமெனவிந்தமுறையிற் சொல்லப்படுமவர், முதலாயினோரெல்லோரும், அபக்குவரென நிந்தித்தக்கணமேதள்ளப்படுமவரென்றவாறு — எழுவாயின ரென்பதனால், ஆசிரியர்சொன்ன அருத்தமிருக்கத்தானொன்றைக்கற்பித்துக் கொ ண்டுசொல்லுமவன், ஏட்டிலிருந்தபடி சொல்லாமல்வேறொன்றாகச்சொல்லு மவ ன், தன்னுடையசித்தாந்தத்துக்குவிரோதமாகச்சொல்லுமவன்.இவர்கண் முதலா யினோரெனவறிக, சந்தபேதமாவன, பஃறொடைவெண்பா ✠ ஒத்தமைந்தசந்தத் தொடையனாயாய்ந்துரைப்பி னுத்தமத்தியுத்தமேமத்திமமொத்த, நிலையொடுநன் னிலைகாயத்திரியுட, னுட்டிணிக்கனுட்டிப்புடன்பாக்திபந்தி, திருட்டிப்புடன்சகதி சேருமதிசகதி, சக்குவரியதிசக்குவரியட்டியதி, யட்டிதிருதியதிதிருதியாங்கிருதி மேவுபிரகிருதியாகிருதியேவிகுதி, சங்கிருதியபிகிருதியுற்கிருதி, யோடிருபானு றென்றேயோர், என்றார் வீரசோழியமுடையார், இவ்வடமொழிச்சந்தம் வன் னவிருத்தமெனவு மாத்திராவிருத்தமெனவுமிருவிதப்படும்.

---

✠ வீரசோழியத்தில்யாப்புஅதிகாரம் - ௩௰ம் - கவியுள்சந்தம் - உ௬ம்.அவை க்குதாரணமுமுள,அவற்றைத்தெரிந்துணர்க

கலித்துறை

இருவிதஞ்சந்தமிவற்றொன்றெழுத்தாலிலங் குமந்தைப் பொருவிரமாத்திரையா
லேயொளிருமொளிருமிது, பொருவரிதாங்யவாரியத் தொண்டுபொதுவமென்று மருவ
ரைமாதவன்கூறுந்தமிழுக்கருகமன்றே
அருகமருந்தமிழ்க்காரியத்தும்மெழுத்தானுதித்து,வருகின்றசந்தவிசமென்று
ளத்தின்மதித்திடுக, வொருவனையெல்லாவுயிர்க்குமுயிராயொருவமில்லா, நிரும
லன்றன்னைப்பதம்பணிந்தேத்திடுநேசர்களே, என்றோதினர் - மெய்த்துருவர் [க]

அப்பக்குவர்க்குப்பொருண்முதலியவாசையினுள்ளான நூல்கூறிற்
குற்றமென்றுணர்த்துகின்றார்.

ஓதுவிப்பவனைப்பிறிகற்புனை *
பூதலப்பொருளைப்பொருளென்றெண்ணி *
யாதனைப்படுவன்னரகத்திழிந் *
தாதனுக்கவன்மிக்குறவாரன்றே *

எ - து - தனக்கொப்பொருவருமில்லாததிவ்வியாசமமுதலியவற்றைப்பூமியி
ன்கணுண்டாகியதனதானியந்துகின் முதலியபொருள்களைப்பொருளாகக்கருதியப்
பொருளாசையாலோதுவிக்குமாசிரிய னரகத்தின்கண்விழுந்து மிகுந்தவேதனை
யையுறுவன், அப்படிப்பட்ட வறிவில்லாதவனுக் கவ்விடத்துதவுவாரொருவரோ
வென்றவாறு. [௨]

பக்குவர்க்குஅதனைப்போதித்தபோதகன்பெருமையையுணர்த்துகின்றார்

ஆக்கைநோயெனவஞ்சினர்க்கற்புதன் *
வாக்கையோதுமதிதிகழ்மாதவ *
னேக்கமூன்றுடைநோன்மையன்வான்பிணி *
போக்குவாரவனன்றிப்புவியுளார் *

எ - து சரீரத்தைவெறுப்பினாற்பிணியென்றஞ்சியமாணாக்கர்க் கதிசயஞான சி
வனதுவாக்கியத்தையுபதேசியாநின்ற வறிவினால்விளங்கும், பெரியதவத்தினையு
டையபோதகாசிரியன்மூன்று திருநயனத் தையும்ஞானவலியினையுமுடையதெக்ஷி
ணாமூர்த்தி, யவனேயன்றிப்பூமியின்கட்பிறவிப பெரும்பிணியைப்போக்குமவர்

எவர்தானென்றவாறு, ஆர் - எது - வினாவுதல் [௰க]

இதுவுமது

ஈசன்ருனுமிவனிடத்தேய்ந்துயிர்ப் ❊
பாசந்தன்னைப்பறிப்பன்பழுதகல் ❊
வாசகஞ்சொல்வன்மற்றிவன்றன்புகழ் ❊
பேசுவாரெவர்பேசரும்பெற்றியால் ❊

எ - து பரமசிவனுமிந்தஞானசாரியனையதிட்டித்துக்கொண்டான் மாக்களுடையபாசங்களைத்தீக்ஷையிலுலைச்சேதித்துப்பின்பு குற்றமில்லாதஞானத்தையுபதேசிப்பனிந்தஞானசிரியன்புகழான தியாவராலுமளவிட் டுரைதற்கரியமுறைமையயுடைத்தாகையாலெவர்தானதனைச்சொல்லவல்லாரென்றவாறு.

பறிப்பனென்னும், வினைமுற்று ஈண்டு வினையெச்சமாய்த்திரிந்தது, மற்று'

எ-து உரையசை [௰௨]

மேலெய்தியநூலிலக்கிக்கொடுப்போன்முறையுங்கொள்வோன்முறையுங்கூறுகின்றார்.

தடுத்ததண்ணியன்பாற்சொள்கசாத்திரங் ❊
கொடுக்குந்தேசிகன்றங்குலத்தில்லையே ❊
லடுத்தவன்னியனையருகன்றேற் ❊
கொடுக்கொளுபாமாத்தங்கொடுப்பதே ❊

எ - து - அந்தணராரேனுர்ஞானகாண் டத்தையருளிச்செய்யுமாசிரியன்தற்சாதியிலில்லாவிடத்திற்றம்மிற் கிழாகநீக்கியவரையரிடத்திற் கேட்கப்பெறும்அவனுந்தற்சாதியிலில்லாவிடத்துவசியனிடத்திற்கேட்கப்பெறும் அவனுந்தற்சாதியிலில்லாவிடத்துச்சூத்திரனிடத்திற்கேட்கப்பெறுஞ், சூத்திரன்தற்சாதியினுந் தனக்குயர்ந்தசாதியினுங்கேட்கலாம், அரையன்முதன்மூவருமவரவர்க்கடுத் தமேற்குலத்தோருக்குக்கருமோபதேசங்கொடுக்கப் பெறுஞானோபதேசங்கொடுத்தலேயுரித்தாமென்றவாறு.

தங்குலத்தில்லையெலென்பதனுற்றத்தங்குலத்திற்பெறுதலே சிறப்புடைத்து,

எகாரம் தேற்றம், சனகன், அனையனுமிருக்கவுஞ், சுகர்முதலியபிரம்மரிஷிகளுக்குஞானத்தைப்போதிக்கையாலும், விதுரர்; நாலாம்வன்னமாயிருக்க, ஞானத்தைத்துருவாசர்க்குப்போதிக்கையாலுங்கூறியதெனவறிக. [௰௩]

உரைத்தாமென்றலென்னுந்தந்திரவுத்தியாற்சிவஞானத்தையுபதேசிக்குமுறைமைபுணர்த்திமேலதனையெழுதியபுத்தகத்தைத்தானஞ்செய்யுமுறைமைபுணர்த்துகின்றார்

வேறு

ஒப்பரியவரனமலனுரைத்தவுரையுதவுமறை *
செப்பினமெய்த்தவசிறந்தசிவஞானகோசத்தை *
யப்பரிசேயருந்தவர்க்குமடைவிக்குமடைவினையுந் *
செப்புவங்கேளீந்தார்க்குமிரந்தார்க்குஞ்சிறப்புறவே *

எ - று வாராய்சத்தியமானதபசினையுடையவனே, தனக்கொப்பொருவருமில்லாதசிவனருளிச்செய்ததிவ்வியாகமத்தையாசிரியன மாணாக்கர்க்குபதேசிக்குமுறையைச்சொன்னோம், மேற்சிறப்பினையுடையசிவாகமங்களைவரைந்தநூன்முறையைப்பரிபக்குவராயிருக்கிறவரியதவத்தினையுடையோர்க்குமுதவுமுறைமையினையுமீவோர்க்குமிரப்போர்க்குமித்தானமே, சிறப்புடைத்தென்னும் வண்ணஞ்சொல்லாநின்றோமதனைக்கேட்பாயாக, வென்றவாறு.
அருந்தவர்க்குமென் றவும்மை, ஆசிரியர்க்குமென, எச்சவும்மையாயிற்று, அடைவினையுமென்னுமும்மை, யெண்ணின்கண்வந்தது [௰௪]

சிவஞானகோசதானஞ்செய்வோர்சிவன்முதலாயினொரையருச்சிக்குமுறையுணர்த்துகின்றார்

பராபரனைமுதற்பூசைபண்ணிடுகவதன்பின்பு *
பராபரனுக்கொத்தபரஞானத்தைப்பரிவுறவே *
பராபரனைப்போதிக்கும்பரஞானம்பாலிக்கும் *
பராபரனைத்தெசிகனையதன்பின்புபகர்விதியால் *

எ - று சிவஞானகோசத்தைத் தானஞ்செய்வோன்முதற்கட்பராசத்திக்குமேலானசிவனையருச்சனைசெய்யக்கடவன், அதற்குப்பின்பர்தச்சிவனுக்குங்காரணமாகிய, பரகதிஞானமானதிருமுறையையன் பினோடேயருச் சனைசெய்யக் கடவன் அதற்குப்பின்புசிவனையறிவிக் குமேலான சிவஞானத்தையுபதேசிக்கும்பராபரனாயிருநதுள்ளவாசிரியனையாகமத் திற்சொல்லிய குருபூசாப்பிரகாரத்திலேபூசிக்கக் கடவனென்றவாறு.

பூசைபண்ணிடுகவென்பதனையும், விதியால், என்பதனையும், யாண்டும், வருவிக்க. [௰௫]

வித்தியாதானஞ்செய்தற்குமண்டபவிதியுணர்த்துகின்றார்

பூதலத்துளவலங்கள்பொருந்தாதுகுணம்பொருந்து *
மாதலத்துளெண்முழத்தால்வருக்கமுறைமண்டபத்தை *
மீதியற்றவரிதெனினான்முழத்தாலுமியற்றிடுக *
கோதொழித்தநாற்கோணம்வட்டமுமாங்கூறியதே *

எ - து பூமியின்கண் அவலமெனக் கூறியஅதமபூமியைப்பொருந்தாமல்பார்ப்பார்முதலிய நாலுவன்னத்தார்க்கேற் றவன்னகெந்தரசங் களைத்தனித்தனியே யறிந்தந்தப்பூமியின்கண்வித்தியாமண்டபத்தையெட்டுமுழத் திருலேவிதிவழிசெய்கவிங்ஙனஞ்செய்யக்கூடாவிடத் துநான்குமுழத்தினுற் செய்யக்கடவன், இந்தமண்டபஞ்செய்யுமிடத்துக் குற்றமற்றசதுரசிரமாகவும்,வட்டமாகவும், செய்யலாமென்றவாறு.

சதுரசிரம்பிறப்பிக்குமிடத்துநாலுதிக்கிலுநாலுமற்சியமாகக் கவராயங்கொண்டுபிறப்பித்தநிற்சதுரசிரம்பிறப்பியாவிடத்துவாயக்கப்பெருதாதலாற்கோதொழித்ததெனச்சிறப்பித்தார். [௰௬]

இதுவுமது

அதனடுவேபம்புயத்தைவண்சுதையாலமைத்திடுக *
விதனயலேமற்றுமுளவலங்காரமியற்றிடுக *
விதமுறவேயிதன்மீதுவிரித்திடுகவிரைமலருஞ் *
சிதநிறத்தாவவறுவையதன்மீதுசேர்த்துகவே *

எ - து அந்தமண்டபத் தினடுவேயழகியமாப்பொடிமுதலிய வெள்ளையினுலேயெட்டிதழ்த்தாமரையையிடுக, இந்தப்பதுமத்தின்பக்கங்களிலேமற் றுள்ளவல்லிமுதலியவலங்காரங்களைச்செய்க, விப்படியலங்கரித்தபதுமத் தின்மேலேநானுவிதமானசுகந்தபுட்பங்களையும் பரப்பியதன்மேலேவெண் ணிறத்தையுடையகோர்டிப்பரிவட்டம்விரிக்கக்கடவனென்றவாறு [௰௭]

இதுவுமது

தண்டரளநிரைவிரவுதம்பங்களொருநான்கு *
கொண்டதனுனற்றிசையுங்குறிபெறவேநிறுவிடுக *

வெண்டரளவிதானத்தை யிரித்திடுகமீ துறவே *
யொண்டரளமாலைகளுங்கந்துகமுமொழுக்குகவே *

எ - து முத்துக்களையொழுங்குபெறவழுத்திச்செய்தநுண்களு ன்கிளையும், மண்டபத்துக்கேற்பக்கொண்டர்தமண்டபத் திலுற்றிசையுமழகுபெறநாட்டுக,வத ன்மேலேபொருந்தும்படிமுத்துமேற்கட்டியையுங், கட்டியொள்ளியமுத்துமாலை களு, முத்துப்பந்திளையுங், கொடுங்கையிற்கட்டித்தூக்குக, வென்றவாறு [யஅ]

இதுவுமது

கண்டையுடன்சாமரையுங்கட்டிடுகபட்டினையுந் *
துண்ட * மதிபுற்புதம்பொற்றாப்பணங்கடுலக்கிடுக *
திண்டிகழ்கும்போதகத்தைத்திசைநான்குஞ்செறித்திடுக *
புண்டரிகவலரதன்வாய்ப்பொருத்துகவங்குரம்புரிந்தே *

எ - து கண்டையாகியமணி யையுஞ், சாமரையையு, நாலுவிதமானபட் டுப்புடைவையையுங், கொய்சுகட்டுக, அர்த்தசந்திரனைப்போன்றபிறையையு, நீ ர்க்குமிழிபோன்றதட்டையையும், பொலிவினையுடையகண் ணாடிகளையும், விள ங்கும்படிகட்டுக, திண்மைவிளங்கியசலம்பூரிதமானசாந் திகும்பங்களை நாலுதிக் கிலுந்தாபிக்க, முதற்கண் அங்குரார்ப்பணஞ்செய்துபின்பந்தச் சாந்திகும்பங்கண் மேலே தாமரைப்பூக்களைச்சாத்தக்கடவனென்றவாறு [யகூ]

சிவஞானகோசத்துக்குச்சிங்காதனமுமியந்திரபீடமுமியற் றுமுறைமையுணர்த்துகின்றார்

அணியுறவேயரிபரிக்குமாதனத்தையாக்கிடுக *
மணியுறவேமதகரியின்கோட்டாலுமற்றிதுதான் *
பணவரிதேற்சந்தனத்தும்பண்ணிடுகவியந்திரத்தைத் *
திணமருவுமதகரியின்கோட்டாலுஞ்சிறப்புறவே *

எ -து ✠ விசுவகன்மியமுதலியவற்றிற் கூறியபதுமமுதலியவாதனபேதத்திற் சிங்கங்களழகுபெறத்தாங்குமாதனமாகியசிங்காதனத்தை நவரத்தினங்களுமிட் டழுத்திமதம்பொருந் தியயானைக்கொம்பினாலே செய்க, இந்தச்சிங்காதனம் பண்

---

* மதி. புற்புதம், எனபன வுவமவாகுபெயர்
✠ விசுவகன்மியம். சிற்பநூல்

ணக்கூடாதாயிற்சந் தனமரத்தினாலுந்: திண்மைபொருந்தியயானைக்கோட்டினாலு மியந்திரபீடத்தைச்செய்க, வென்றவாறு
மற்று வினைமாற்று,திணம் திண்மை கோட்டாலுமென்றவும்மையாலாதனங்களிர, ண்டும்,பொன்,வெள்ளி,செம்பு, பித்தளைகளினாலும்,சந்தனமுதலிய தேவதாருக்க ளினாலுஞ், செய்யலுமாமென்க, இயந்திரபீடஞ் செய்யுமிடத்து முற்கூறியவற்று ளியன்றதொன்றை ப்பதினெட்டங்குலநீளமும்; மிரண்டங்குலச் சுற்றுப்பருமையு முருண்டதாதல் சதுரசிரமாதல் நாலுதண்டத்தையுண் டாக்கி யதனுனிகளிற்சும ஙாமுகிழமாகப்பண்ணியதனடியே துவாரமிட்டதனடியிற் கயிறுகோத்து இயந்தி ரபீடஞ்செய்க, அல்லதிருபத்துநாலங்குலநீளந்தண்டத்தினுயரமுமதிற் பாதிவிசா லதண்டங்களுங்கொண்டுசெய்க [உ௰]

இங்ஙனங்கூறியவாதனமுந்திருமுறையுமண்டபத்தில்வைக்குமுறை யுணர்த்துகின்றார்

இத்தகையவாதனத்தை யிலங்குமணிப்பந்திடை *
வைத்தறுவைகந்தமலரதன்மீதேமலிவிக்க *
வித்தகன்வேதகனூடு விளம்பியவாய்மொழியெழுதும் *
புத்தகமுமதன்மீதுவைத்திடுக புணர்வுறவே *

எ-து இந்தத்தகைமையோடேகூடியசிங்காசனபீடமாதலியந்திரபீடமாதல்விள ங்காநின்றவழகியபந்தலினடுவேவைத்ததின்மேலேபரிவட்டமும் விரித்துமணவிய பூக்களுநிறைக்கவதன்மேலேகர்த்தனுமாயான்மாக்களுக்கறிவிப் பானுமாயிருக்கிறசி வனருளிச்செய் ததிவ்வியாகமத்தையெழுதும்வெள்ளேட்டுத்திருமுறையைப்பொ ருந்தும்படிவைக்கவென்றவாறு

எழுதும்பொத்தகமுமென்றவும்மையாலெழுதினபுத்தகமுமெனவறிக [உக]

மேலதனைப்பூசைசெய்யுமுறையுணர்த்துகின்றார்

எழுதாதபுத்தகத்தினிருத்தியசொற்புத்தகத்தைப் *
பழுதாகாரோசனையைக்குங்குமத்தைப்பாளிதத்தை *
யழகாகப்பூசிடுகவலர்மாலைதனையணிக *
வழுவாதமகிழ்வுறவேசாத்திடுகவத்திரமும் *

எ-து ✠ அலேகத்தின்மேலேவைத்திருக்கிற சிவாகமங்களெழுதியதிருமுறையி

---

✠ அலேகம்; வெள்ளேடு

லேகுற்றமற்றகோரோசனையையுங்குங் குமத்தையுங் கற்பூரத்தையு மழகுபெறப் பூசிப்பூமாலையணிந்துதவறற்றவன்பினாற்பரிவட்டமுஞ்சாத்துகவென்றவாறு [௨௨]

இதுவுமது

எத்தொகையகரியமிர்தின்விதமுளநல்லினிமையுற *
வத்தொகையவிதத்துடனேநிவேதிக்கவமிர்தினையும் *
பத்திபெறுதீபமுடன்பஞ்சவிததூபத்தை *
யுய்த்திடுகமற்றுமுளவுபசாரமுறையுறவே *

எ - து வெளி - நாழியரிசிக்குஒருபலங்கறி [௨௩]

மேலிருந்தமுறையானேபஞ்சவிததூபத்தைவகுத்
துணர்த்துகின்றார்

ஐவகைய நாமங்களாவனதான் குங்குருக்கஞ் *
சூடாகுங்கற்பூரந்துமணியாகாரகில்வெண்மை *
பெய்தியசந்தனமினியாகுற்குருஞ்சுமெனவடிக *
செய்யதமாற்றிருவிளக்கைக்காபிலத்தாலிகழ்த்துகவே *

எ - து ஐந்துவிதமானதூபங்களாவன- குங்குருக்கமுஞ், சூடன் கற்பூரமும், வயிரமாகமுற்றியகாரகிலும், வெண்மைபொருந்தியசந்தனமும், மினிமைசெய்யுங்கருஞ்சிதாரியு, மெனவறிக, சன்னிதியிலிடுந்திருவிளக்கைக்கபிலைப்பசுவினெய்யினாலேயிடுக, வென்றவாறு

கபிலையைக்காபிலமென்றார் [௨௪]

அதனைவலம்வந்துவணக்கஞ்செய்யுமுறையுணர்த்துகின்றார்

வலஞ்செய்துதண்டதனைமானவிதிவழிதழுவத் *
தலந்தன்னிற்பணிந்தெழுகதலைகரமற்றிருகன்னந் *
துலங்குமுகவாய்ப்புயங்களெனுமெட்டுந்தோயமரி *
ரிலங்குசிரங்கரமுழந்தாளெனுமைந்துமிசைந்திடவே *

எ - து வெளி [௨௫]

குருபூசையுணர்த்துகின்றார்

இந்தவகைசிவஞானபூசையினையியற்றியுடன் *

கந்தமலர்ப்பூங்கோயிலதற்கயலேகடிதமைக்க *
வந்தமலர்ப்பந்தரிடைத்தேசிகனைப்பருச்சிக்க *
பந்தமறுத்தருள்வானைப்பரமனெனபாவித்தே *

எ - து - வெளி-சிவனுஞ்சிவஞானமுங்குருவுந்தம்மிலொக் குமோவென்னிற் சிவனுக் குயாதொருமகிமையுண்டுசிவனிடத்திற்றோன்றியசிவஞானத்துக்குமப்படியே-அந்தச்சிவஞானத்துக்குயாதொருமகிமையுண் டுஅதனையறிவிக்குமாசிரியர்க்குமப்படியே,அஃதெக்காரணத் தாலென்னிற்சிவனுசிரியமூர்த் தியாயிருந்தான்மாக்கள்பாசத்தைத்தகித் துச்சிவஞானத்தைப்பிரகாசிப்பிக்கையாற்சிவன்முதலியமூவருக்கும்பூசைசெய்தபலமொக்குமெனவறிக [உசு]

ஆசிரியனிடத்தனுமதம்பெறுமுறையுமேற்செய்யுங்கன்மமு
மூன்றுசெய்யுளாற்குளகமாகவுணர்த்
துகின்றார்

பூசித்துப்பரமசிவன்பூசனையைப்போலுளத்து *
ளேசற்றுவலஞ்செய்துபணிந்துகுவித்திருகரமுந் *
தேசுற்றதேசிகனேசிவஞானதானவினை *
யாசற்றுநிறைவேறவனுமதஞ்செய்கெனவறைந்தே *

எ - து - வெளி-ஏசறவு-மனமுதலியவிகாரங்களையகற்றுதல்-ஆசு-குற்றம் [உஎ]

அற்புதனுமாரியன்றனனுமதிபெற்றறன்மூழ்கிப் *
பொற்புடையவெண்கலிங்கம்புனைந்தணிந்துவெண்ணீறுந் *
தற்பரனைபுண்ணினைந்துதரணிமிசைப்பணிந்தெழுந்து *
சொற்பதவாசகமுறையைத்துயக்கறவேவிரித்துடனே *

எ - து - வெளி - அற்புதன் - அதிசயன் - விரித்தல் - சேமநீக்குதல் [உஅ]

மற்றைமுறையதுதன்னில்வரைககவியொருநான்கென் *
றுற்றமுறைதனையொடுக்கவுவகையுறவொருமையுட *
னற்புதனைத்தேசிகனையருத்திடுகவன்றதி *
கற்புடையவிரதியர்க்கும்வேதியர்க்குங்களிப்புறவே *

எ - து- வெளி-விரதியர்-பிரமசாரி-யும்மையாற்சன்னியுமெனப்பெறும் [உக]

* பூரிபோசனமுரைக்கின்றார்

விருத்தர் கிருபணர்பாலர் மிடியரடுபிணியாள *
ரொருத்தரையுமற்றோர்களுணத்தாலொறுமிவர்க்கு *
மருத்திடுகவுறவினுடனதன்பின்றானருந்திடுக *
✠ பிருத்தியரையதன்பின்புபேணிடுகபிறரையுமே *

எ - து - அறுபதுவயதுக்குமேற்பட்டகிழவமார் - பேராசையுடையவர்கள் - சிறுபிள்ளைகள் - தரித்திரர் - வியாதியினால்வாதைப்படுவோர்கள் - அருகர் - குருடர் - என்றிங்ஙனங்கூறியவெல்லோர்க்கும் - அன்னதிகளைப்பொசிப்பிக்க - அதற்குப்பின்பு - மாதாபிதாவுறவின்முறையாரைக்கூட்டிக்கொண்டு - தானும்பொசிக்க - அதன்பின்பு - தனதாளடியாரையும் - தற்காலத்திலேவந்தஅதிதியர்களையும் - இன்னுமொன்றுவரையாமற்பொசிப்பிக்கஎன்றவாறு [கூய]

பெலியிடுமுறையுமதிவாதனமுமுணர்த்துகின்றார்

அற்றைநிசிக்கணபலியையமைத்திடுக துயிலினையும் *
பற்றிடுகபிரமசாரியல்லாதார்பற்றொழிக *
மற்றைநாண்முதல்யாமமண்டபத்தையிருபுறத்திற் *
கற்புறவேயமைத்திடுககாண்பார்கண்களித்திடவே *

எ து அன்றிரவுஉருத்திரகணமுதற்கேத்திரபாலனீறாகவுள்ளகணங்களுக்குப் பலியிடுப்பின்புபிரமசாரியாயினுறக்கஞ்செய்க இல்வாழ்வானுகிலுறங்காதொழிக மற்றைநாண்முதற்சாமத்திலிரண்டுமுழநீளத்திலுமவ்வளவகலத்திலு மொருமண்டபத்தைவிதிப்படிகாணுமவர்கண்மகிழ்ச்சியுறும்படிசெய்கவென்றவாறு [கூக]

பின்புமோர்வித்யாற்சரசுபதி பீடவிதியையுஞ்சிவஞானத்தைப்பூசைசெய்யும்விதியையுமுணர்த்துகின்றார்

அழகுறவேசரத்தாலுமமைத்தவியந்திரபீடத் *
தெழிலுடையபுத்தகத்தையிருத்தியருச்சனையியற்றிப் *
பழுதறுநாகரநந்திமுதலிபியைப்பயின்றுவலா *

---

* பூரி - சண்டு - மிகுதி-
✠ பிருத்தியர் - அடிமைகள்-

னெழுதிடுகெபடித்திடினுமருச்சனைதானிகழ்த்தே ※

எ - து முற்கூறியமண்டபத்தின்கண் நாணற்கழிமுதலியவற்றாலெழுதும்பொருந்த விதிப்படிசெய்தசரசுபதிபீடத்திலுறப்பழசினையுடைய✠மாதிருகையாகிய திருமுறையையெழுந்தருளப்பண்ணி ப்பூசைசெய்துகுற்றமில்லாதநந்திநாகரநதேவநாகரமுதலானவெழுத்துக்களை யெழுதித்தீர்ந்தவனே யெழுதக்கடவன், அதனோடோரும்படிக்கும்போதுமிந்தமுறைமையிற்பூசைசெய்துபடிக்கவென்றவாறு

முதலிபியென்றததாலவடமொழிதெலுங்குமுதலாயின படித்திடினுமென்றவும்மையிறாததுதழீஇயவெச்சம் [௬௨]

மேற்செய்யுங்கன்மமுணர்த்துகின்றார்

அந்தமுறினுபவசியாயமலனடியருச்சிக்க ※
செந்தமிழ்லேயோம்பிடுகதிருமுறையையரிச்சிக்க ※
பந்தனையையறுத்தருளைப்பாலிக்குங்குருபரனைச் ※
சிந்தைமகிழ்ந்தரிச்சனையைச்செய்திடுகசிறப்புறவே ※

எ - து - எழுதிமுடிந்தவுள்ளளவின்விசிஷ்டியாதானஞ்செய்வோன்நிராகாரியாயிருந்துசிவபூசையக்கினிகாரியமுஞ்செய்து அங்ஙனமெழுதினதிருமுறையைச் சாந்திகும்பந்தாபித்திருக்குமண்டபத்திற்பூங்கோயிலின்கண்வைத்துப்பூசைசெய்து ஆணவமுதலியபாசபெந்தத்தைவேரறுத்துத்திருவருளைக்கொடுக்குஞானாசாரியனையுள்ளமகிழ்ச்சியினாலேவிசேடபூசைசெய்க,வென்றவாறு [௬௩]

இதுவுமது

அற்றைநிசியவ்விடத்துவேதாகமயரவத்தான் ※
மற்றுமுளபாடலினாடகத்தின்வசியாலுந் ※
செற்றிடுகதுயிலதனைத்தினகரனைத்தெரிசித்தே ※
சிற்பமுறத்தேரதனைச்சிறப்பிக்கவிதிதெருண்டே ※

எ - து அன்றிராத்திரியந்தப்பூங்கோயிலின்முன்னேவேதாகமபுராணவொலிகளினாலும், பிராகிருதம், திராவிடமுதலியபாடல்களினாலும், மான்மாக்களைவசிகரிக்குங்கூத்துக்களாலு - முறக்கத்தினைப்போக்கிவிழித்திருக்கக்கடவன், மற்றை

---

✠ மாதிருகை - மாதா

நாட்காலமேசிற்பநூல்விதியையாராய்ந்துபண்ணப்பட்டதேரினையலங் கரிக்கவெ ன்றவாறு

நாடகமெனப்பொதுப்படக்கூறினமையால், வெண்பா,சங்காஞுடியதாண் டவமுமாங்குமையா, ளிங்கிதத்தாலாடும்லாச்சியமும்பொங்குதிளா,யாழிப்புவிபி லகமும்புறவரியுஞ்,சூழுநடாலென்றுசொல்· எனவறிக [௩௪]

இதுவுமது

இத்தகையவிமானத்துளிறையறையுமொழியெழுநும் *
புத்தகத்தைப்புணர்வித்துப்பூசனையைப்புரிந்திடுக *
பத்தியுடனரராலேபரிப்பிக்கப்பலர்பரவ *
வத்தனமராலயத்துணகர்வலஞ்செய்தாக்குகவே *

எ - து இச்சிறப்பினையுடையபுட்பகவிமானத்திற்சிவனருளிச்செய்தசிவ்வியா கமத்தையெழுந்தருளப்பண்ணிப்பூசைசெய்து அன்பினேடேநராகியசீர்பாதக்கா ரராற்ருங்கச்செய் துமயல்லாருந துதிசெய் யநகரைவலமாகவெழுந் தருளப்பண் ணுவித்துச்சிவனெழுந்தருளியிருக்குந்திருக்கோயிலிற்கொண்டுசென்றந்தவிமானத் தைத்திருமுறையுடனிருத்துக,வென்றவாறு [௩௫]

மேல்வேறுமோர்விதியுணர்த்துகின்ருர்

அல்லதுபுத்தகமதனையானைமுடிமிசையமைத்து *
நல்லநகர்வலம்வருகநகரத்தார்நாட்டாரும் *
வெல்லையறுவையும்வீக்கிவிளைவுடனேபுடைபடைய *
மல்கமிகுமங்கலங்கள்வணங்கிமுனேசெலமன்னன் *

எ து வெளி. வெல்லையறுவை· வெள்ளைப்புடைவை. அறுவையுமென்றவு ம்மையாற், பாகுசீலையாபரணதிகளுமெனவறிக. வீக்குதல்· தரித்தல் [௩௬]

இதுவுமது

பலியதனைத்திசைதோறும்பண்ணிடுகபார்த்திபனு *
நிலவணியுஞ்சடைமுடியார்மாபூசைநிகழ்த்திடுக *
கொலைமுதலுமொழித்திடுகஙிகளாதிகுறைத்திடுக *
மலைவிலிக்குமாபூசைமனைதோறும்வருக்கவரோ *

எ - து அக்காலத்திலேவீதியிற்றிக்குதிக்குக்களிலிர்திராதிபெலியையாசாரிய ராலிடுவிக்க, விராசாவானவனுந்தனதுதிரவியத் தாற்சிவபூசையைவிசேடமாகச் செய்வித்துக்கொலை • களவு . கட் . காம • முதலியதொழில்களையுந் • தவிர்த்துநெறிமுறையினில்லாதோரைத்தண்டிக்கையின்பொருட்டுத்தானிடுவித்தவிலங் குதொழுமுதலியவற்றிற்கிடக்குமவர்களையும் , விட்டுமகமேருவைவில்லாகவுடைய சிவனுக்கில்லங்கடோறும் , விசேடபூசைசெய்யும்படிகற்பிக்க , வென்றவாறு [நுஎ]

இதுவுமது

பருவமறுங்காலத்தின்று நமதனைப்பரமனுக்கு *
மருவுவிக்கவிற்றிருமுறையேவரதனமர்திருவெல்லை *
விரைவுடனேவிரவியமர்விமானத்துட்புத்தகத்தைப் *
பரிவுறவேயருச்சிக்கசயவொலியும்பரந்தெழவே *

எ து திருவிழாநடக்கவிர்த்தகாலமன்றிச்சிவஞானதானங்கமாகச்சிவனுக்குத்திருவுள்ளமகிழவொருநாளெழுந்தருளப் பண்ணிவித்துவேண்டுவார்வேண்டுவதேயீவானானவநதச்சிவனெழுநதருளியிருக்கிறதிருவெல்லையைவிரைவிலேயேடவலம்வந்துசன்னிதியிலிருக்கிறவிமானத்திலெழுநதருளியிருக் குஞ்,சிவஞானகோசத்தைச்சயசயவென்னுமுழக்கந்திசையெங் கும்விரிந்தெழத் தம்முள்ளத் திலன்புண்டாகப்பூசைசெய்க,வென்றவாறு — முதம். சந்தோஷம்•வடமொழி [நுஅ]

இதுவுமது

பரமசிவன்றிருமுன்மேலதேசிகனைப்பணிந்தெழுந்து *
திருமுறையைநிவேதிக்கதிறல்வேந்தன்முதலோர்க்கும் *
வரமுறவேயோரியலையதுதன்னுண்மதித்தறைக *
வுரைவிதியுங்காமரமும்வமுவறவேயுணர்ந்தோனே *

எ து சிவஞானதானஞ்செய்வோன்,முன்னர்அர்ச்சித்ததிருமுறையைமேலானசிவனதுசன்னிதியிலெழுந் தருளபபண்ணிவர் தவாசிரியனை, வணங்கியெழுந்திருந்தவர் , கையிற்றானஞ்செய்யக்கடவன் , பின்புபதச்சேதம் • பதப்பொருள்• விக்கிரகம் . வாக்கியயோசனை சங்கையுத்தரமாகியவுரைகோளந்தினையும், பூபாளிபைரவிமுதலியகானபேதத்தையுங் , குற்றமறவறிந்தவாசாரியரானவரந்தவாகமத்திலொருபடலத்தைபிராசாமுதலாயினோக்குநன்மையுண்டாகையின்பொருட்டுப்ப

டித்ததன்பொருளையுணர்த்துகவென்றவாறு [௩க]

சிவஞானத்தைச்சாதகர்முதலியோர்க்குத்தானஞ்செய்யுமுறையும
தனைவேந்தன்முதலியோருமகளிருஞ்செய்தற்கோர்சி
றப்புவிதியுமுணர்த்துகின்றார்

இத்தகையேயருந்தவர்க்குமீபொழுதியற்றிடுக *
புத்தகத்தின்பூசனையைப்புரவலர்மற்றனைவருந்தம் *
வித்தமதுகொண்டிந்தவிதியதனைவிளைவிக்கப் *
பத்தியினாற்பயில்விக்கதேசிகனாற்பாவையரும் *

எ - து அருந்தவரானசாதகர்க்கும், புத்திரர்க்குஞ், சிவஞானதானஞ்செய்யுங்காலீண்டுக்கூறியபடியேயதனைப்பூசைசெய்துகொடுக்கக்கடவன், வேந்தருமற்றுள்ளோருநெறிமுறையாலீட்டியதத்தம்பொருள் கொண்டேயிந் தச்சிவஞானதானவிதியையன்பினாலேசெய்விக்கக்கடவர்கள், நாலுவன்னத்தின்மகளிராயுள்ளோருந்தானஞ்செய்யாது • ஆசாரியனாலேசெய்விக்க, வென்றவாறு [சய]

சாந்திகும்பப்புரோக்கணமுணர்த்துகின்றார்

சாந்திபெறுதோயத்தைச்சமைத்தகுருபரன்றானும் *
வேந்தனதுமுடிவிரவத்தெளித்திடுகவிழைவுறவே *
சேர்ந்தவர்களனைவர்க்குந்தெளித்திடுகதெளித்தகாற் *
றேய்ந்தழியுமவரவர்தந்தீயவினைத்திறலழிந்தே *

எ - து ஆசாரியன்வித்தியாமண்டபத்திற்றாபித் தசாந்திகும்பசெலந் தைக்கொண்டிராசாவினதுசென்னியிலுமவ்விடத் துவந்துசெவித் தபத்தசனங் களெல்லார்க்கும்விருப்பத்துடனேதெளிக்கக்கடவன், அங்ஙனந்தெளித்தாலன்மையினாலேயவரவர்செய்தகொடியபாவங்களினதுவலியழிந்துகெடுமென்றவாறு [சக]

ஆசாரியர்க்குப்பூசையரசர்முதலாயினோர்செய்யுந்திறமுணர்த்துகின்றார்

ஆசானுக்கருநிதியமுதலளிக்கவடலரசன் *
றாசாதிமற்றையருந்தமக்கியன்றதொகைசெய்க *
நேசாரப்பூசையினைப்பூசுரர்க்குநிகழ்த்திடுக *
வீசானனடியார்க்குமாதுலர்க்குமிரக்கத்தால் *

எ - து வெளி [சுஉ]

இந்தவித்தியாதானத்தாலுலகுபெறும்பயனுணர்த்துகின்றார்

இத்தகையேபுரிந்திடிலோரிடையூறும்புவிக்கில்லை *
வத்தனையேயுளநன்மைவகையனைத்தும்புகழ்மல்குங் *
குத்திரருங்குலைந்தகல்வர்கொடுவினையுமடுபிணியு *
நைத்தழியுமழைபொழியுந்திங்கடொறுநலமுறவே *

எ து வித்தியாதானத்தையிப்படியேசெய்வாராயினுலகத்துக்குவிக்கினங்கள், சிறிதுமில்லையாம், ஆக்கமுமின்பத்திறங்களியாவுமுளவாங், கீர்த்தியும்பெருகுஞ். சோரராயுள்ளோருந்தாமேநடுங்கியொளிப்பர்கள், கொடியபாவமும், வருத்தாநின்றநோயுந், தேய்ந்துகெடும், நன்மைபொருந்தும்படிமாதந்தோறுமழையும், பொழியாநிற்கு, மென்றவாறு [சுந]

மேலதனைத்தானஞ்செய்தோரடையும்பலமுணர்த்துகின்றார்

இத்தகையேபுத்தகத்தையீந்தாருமெழுத்தொன்றற் *
கத்தனமர்புரத்துறைவராயிரமார்கற்பமுற *
முத்தனையமுறுவனகைமுளைத்தபிறைவளைத்தநுதற் *
றத்தையனமொழிமடவார்தங்கியதேர்த்தானத்தே *

எ து இந்தமுறைமையிற்சிவஞானத்தைத்தானஞ்செய்தவர்களு, முத்துப்போன்றநகையினையுமாகாசத்தின்கட்டோன்றியவிளம்பிறையைப்போலவளைந்திருக்குநெற்றியினையுங்கிளியினதுசொல்லைப்போன்றமொழியினையு முடையவமரர்மாதர்கள், சூழ்ந்திருக்கும்விமானத்திலேறிச்சென்றொழுத்துக்காயிரம்பிரமகற்பஞ்சிவலோகத்திலிருப்பார்களென்றவாறு

ஏறிச்செனறு• என்னும்• வினையெச்சம்விரித் துக்கொள்க • ஈந்தாருமென்னுமும்மையிறந்ததுதழீஇயவெச்சம் [சுச]

சிவஞானகோசத்தைச்சேமஞ்செய்தோர்முதலானோர்பலமுணர்த்துகின்றார்

புத்தகத்தைப்புரந்தாருந்தாய்தந்தைபுத்திரருஞ் *
சித்தமகிழ்வுறவேவற்செய்தார்களெனுமிவரு *
மத்தனமர்சிவலோகமடைவார்களமருலக *
முத்தொகையசுற்றத்தார்முற்றினர்முன்னற்றவமே *

எ - து. திவ்வியாகமத்திருமுறையைக்காக்குமவருஞ் - சிவஞானதானஞ்செய்தோருடையமாதாவும்,பிதாவும்,பிள்ளைகளும், முள்ளமகிழ்ச்சிபொருந்தவேவற்செய்தவர்களுமெனக்கூறியவிவர்களெல்லாருஞ், சிவலோகத்தினையடைவர்கள், முற்செனனத்தினல் லதபோபலத் தாலிச்செனனத்திற் சிவஞானதானஞ் செய்தோராதுமேழ்சுற்றத் திலுள்ளோருந், தேவலோகத் தையடைந்திருப் பர்களென்றவாறு [௬௫]

சிறப்புவிதியுணர்த்துகின்றார்

பொருந்துவார் புறப்பகர்ந்தபலம்புகழாடிப்பூரணையிற் ✻
புரிந்தவருஞ்சிவஞானபுத்தகத்தைப்பூசனையைத் ✻
திருந்துமலர்ப்பந்தரிடைச்சிறப்புறவேவைகறையிற் ✻
புரிந்தவரும்பூரணையிற்சிவஞானபூசனையே ✻

எ - து. வெளி [௬௬]

சிவாகமங்களெழுதுகிறதற்குஅலேகங்கள்கொடுப்பார்பெறும்பயனுணர்த்துகின்றார்

வேறு

இறைவளிளையில்வாய்மொழியையொழுதவிதயாலிசைபுறையைப் ✻
பெறுவமென்னுமாதரவுபெற்றார்தமக்குப்பெறுவித்தா ✻
ரறைபுங்கயலானமலனமர்புறத்தினதவிளிதயொன்றற் ✻
குறைவருகமோராயிரமுமுறவேயுவகையாடுபெறவே ✻

எ - து. வெளி - இகழ் - சீதாளிதாலமுதலியன [௬௭]

கம்பைமுதலியவுமியந் திரபீடமுங்கொடுப்போர்பெறும்பயனுணர்த்துகின்றார்

கம்பைகவினுறொழுத்தாணிகாறிறுங்கொடுப்போர்மையினையு ✻
நம்பிக்கொடுப்போர் முன்னவின்றபலத்திற்பாநிலம்பெறுவர் ✻
கொம்பினுலுமதகரியின்கோணுச்சரத்தின்கோலாலுந் ✻
தம்பாலுவகையுறப்பீடஞ் சமைத்தேயளிப்பாரவர்தாமும் ✻

எ - து. தேக்கு - உசிலை - முதலியமரங்களாற்பண்ணியகம்பையும், விதிப்படியழகுநிறைந்தவெழுத்தாணியும், பட்டுநூன்முதலியவற்றாலிருபத்தேழிழையினு

லேசெய்யப்பட்டகயிறுங்கொடுக்குமவரும்,மைக்காப்பிணைவிரும் பிக்கொடுக்குமவரும்,யானைத்தந்தத்தினாலுஞ்செவ்வியநாணற்கழியினாலுமியந்திரபீடத்தைச்செய்து தமதுள்ளமகிழ்ச்சியுற்றுக்கொடுக் குமவருஞ்,சிவஞானதானஞ்செய்வோர்க்குமுற் கூறியபலத்திலேபாதிநலமாகப்பெறுவர்களென்றவாறு

கவினாரொழுத்தாணியெனச்சிறப்பித்ததனால்—எ ஃகினாலேபதினாறங்குலநீளங்கொண்டதினடுவே. எறும்பினிடைபோன்றகணையுமாகச் செய்தநாராசமெனக் கொள்க,நம்பு விரும்பு [சஅ]

திருமுறைக்குவேண்டுமுபயோகங்கள்கொடுப்போரடையும்பலமுணர்த்துகின்றார்

புத்தகாங்கமேதேனும்புரிவோமவார்புரையோர்பா ※
லத்தனமருந் சிவலோகத்தமாவர்போகமனைத்தினெடும் ※
வத்திராதிவிதானந்தமகிழ்ந்தேயீவாரிறைபொன்றற் ※
குய்த்தேயுகமோராயிரமுமுறவேயுறைவருகப்புடனே ※

எ- று. திருமுறையைச்சேர்த்தற்கங் கமானசலாகைதமருசிசிவுளியாதொன்றைப்பெரியோரிடத்தில்விருப்பத்துடன்கொடுக்குமவர்கள், சிவலோகத் திற்சென்றுசகலபோகங்களுடனுங்கூடிவாழ்ந்திருப்பார்கள்,அதற்குச் சாத்துப் பரிவட்டமுதன்மேற்கட்டியீறாகவுள்ளமகிழ்ந்துகொடுக்குமவர்களிறையொன்ற ற்காயிரம்புகமுங்குறையாதேயர்தச்சந்தோஷத்துடன்சிவலோகத்திலிருப்பார்களென்றவாறு
வத்திராதியென்பதனாலங்குரக்காற்பாளந்தூக்கன்முதலியதெனவறிக [சக]

ஒப்பின்முடித்தலாற்சிவாகமத்தையோதுஞாதாக்களுக்குவத்திரதானஞ்செய்யுமவர்பெறும்பயனுணர்த்துகின்றார்

பரமன்றிருவாய்மொழியதனைபபயிற்றும்பரமயோகிதனக் ※
குருகியாடையுகப்புறவேயுதவுமவர்தாமுள்ளளவும் ※
பொருவில்பரமசிவஞானகோசம்புரிவோடைந்தபல ※
மருவுவார்களவரன்றேபத்தராவார்வரதனுக்கே ※

எ று வெளி • கோசம் • எது . பலபண்டமுமிருக்குமிடம் . அதுபோல • அறம்பொருளின் பம்வீடென்னுநாற்பொருளும்விரிந் திருத்தலாற் சிவஞானகோசமென்றுகமத்துக்குப்பெயராயிற்று [ருய]

மேலவர்களுக்கன்னபானுதியுதவினோர். பெறும்பயனுணர்த்துகின்றார்

பரமர்திருவாய்மொழியதனைப்பயிற்றும்பரமயோகருக் ✽
குருகியவர்கட்கன்னதியைந்துவருடமுதவிடுவார் ✽
பொருவில்பரமசிவஞானகோசம்புரிவோராந்தபல ✽
மருவுவார்களவரன்றோபத்தராவார்வரதனுக்கே ✽

எ-து வெளி. ✠ உவப்பினுமுயர்வினுமென்றதனாற்பரமமொனவிவ்வொரு
மைப்பால்பன்மைப்பாலாயிற்று [௫௧]

இவரன்றியெவராயினுஞ்சிவாகமங்களையாராயுமவர்க்கன்னதியுதவினோர்
பெறும்பயனுணர்த்துகின்றார்

மையலறுக்கும்வாக்கியத்தைவாக்காற்பயிற்றிமனத்தாலு ✽
மையமறவேயாராய்ந்தார்க்கன்னமாடையளிப்பார் ✽
செய்யசடையார்சிவபுரத்தைச்செறிவார்சிறுவரிறுமபெரும் ✽
வையமுண்டான்வைகுண்டமூவேழ்சுற்றமருவிடவே ✽

எ-து மாயைமினால்வருமயக்கவிகற்பங்களையொழிக்குஞ் சிவாகமங்களையா
சாரியனிடமாகநாவினாலேபயின்றையந்திரிவுநீங்கமனத்தினாலுமாராயுமவர்க்கன்
னமுந்துகிலுங்கொடுக்குமவர்தங்கூதமுதன் எமந்தரிறுதியாயுள்ளொரு, மிருபத்
தொருசுற்றமுமுலகமுண்டோனதிருமாலெழுந்தருளியிருக்கும்வைகுண்டத்தி
ன்மேலத்தாம்சிவந்தசடையினையுடையதம்பிரானெழுந்தருளியிருக்குஞ்சிவபுரத்
தையடைவரென்றவாறு [௫௨]

சிவாகமங்கள்பயிற்றுமவர்க்கோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்

எற்கவிரண்டுமுழத்தாலுமெல்லைகோலியதனடுவே ✽
கூர்த்தநான்குகோணமலாற்கொள்கவட்டம்வெண்சுதையாற் ✽
சீர்த்தவெண்டாமரையதனிற்சிறக்கவெழுதியதன்மீது ✽
பார்க்கவினியதிருமுறையைப்பரிக்கபீடத்தொடுபரிந்தே ✽

எ-து ஆகமங்களையோதுவோன்இரண்டுமுழத்தினாலேவிதிபொருந்தவொருவெல்

---

✠ உவப்பினுமுயர்வினுஞ்சிறப்பினுஞ்செறலினு • மிழிப்பினும்பாறிணையிழுக்கி
னுமியல்பே . நன்னூற்பொதுவியல் . சூ . ௨௰௮ .

லையவளைந்தநவெல் லையினடிவேநாற்கோணமாதல்,வட்டமாதல்,ஒருவேதிகை, கொண்டதன்கண்வெள்ளியசார் துப்பொடியிஞலேயழகியவெண்டாமரையைப் பொலிவுபெறவெழுதி, யதன்மேலேகாணுர்தோறு, கண்மகிழ்ச்சிதருந்திருமுறை யையொருபீடத்தோடேயன்பிஞலேயெழுந்தருளப்பண்ணுகவென்றவாறு

கோணம் . வட்டமென்பன . ஆகுபெயராய்வேதிகைக்காயிற்று [ருங]

இதுவுமது

மற்றுமுள்ளமங்களங்கள்வருக்கவரதன்றிருவாக்கைக் *
கற்கவளவில்காதலுடன்கற்பார்தமக்குங்கற்பிக்கச் *
சொற்கள்கேட்கவிரும்பினர்க்குஞ்சொல்லிமுடிக்கமுடிவளவிற் *
கற்பார்பரமகாரணர்க்கும்புரிகபூசைகளிப்புடனே *

எ - து அந்தவாகமத்தைச்சூழநாலுபருதியைவைத்தக்கத்தபுட்பத்தாலரு ச்சனைசெய்தாசாரியன் , கிழக்கேமுகமாயிருந்துசிவாகமத் தையளவில்லாதவாஞ் சையிஞலேயோதக்கடவன் , தன்னிடத்தோதுவாரையும் , வடக்கேமுகமாகவை த்தோதுவிக்கக்கடவன் , தாஞேகியவாகமங்களைக்கேட்கவிரும்புமாணவர்க்கும், அத்திசையைநோக்கிவைத்துப்பதச்சேதமுதவியவைந் துறப்புடனந்தநூலுக்குப் பொருளுரைத்துமுடிக்க , இப்படியேயோராகமத்தையோராசிரியரிடத்திலேயோ திமுடிந்துள்ளளவிற்கற்போர்✠உபாதானகாரணங்களுக்கெல்லாமேலாயிருக்கிறசி வனுக்குள்ளமகிழ்ச்சியுடனேபூசைசெய்க,வென்றவாறு [ருச]

இதுவுமது

புரிகபரமசிவஞானபூசைநசையாற்றேசிகர்க்கும் *
பரமஞானயோகர்க்கும்பரிவுபெருகப்பதமுதலு *
முருகியிசையவூட்டிடுகவுவகையவர்க்குமுறவுளத்துட் *
பொருவில்பரமபுத்தகத்தைப்பொருத்தும்வலத் தைப்பொருந்துதற்கே *

எ - து பின்னர்மேலானசிவஞானபூசையையன்பிஞலேசெய்து , ஒப்பிலாத சிவஞானதானஞ்செய்யும்பலந்தனக்கெய்தும்வண்ணமோதுவித்தவாசாரியருக்கு, மேலானஞானயோகிகளுக்கு , மன்புபெருகாநிற்பவுருகிவேண்டினபடியேயன்ஞு திகளையுமவர்க்குள்ளக்களிப்புண்டாம் , படியமுதுசெய்விக்கக்கடவனென்றவாறு - பதம் - உண்டி - [ருரு]

✠ உபாதானகாரணம் . துணைக்காரணம்

மேலதனையோதுமவர்முதலாயினோர், பெறும்பயனையிரண்டு
செய்யுளாற்குளகமாகவுணர்த்துகின்றார்

ஆதியறைந்தவாகமத்திற்சந்தமொன்றேவதன்பாதி *
யோதுவார்களோதுவிப்பாருரையைவிரிப்பாருரைகேட்பார் *
போதமுறவேசிந்திக்கப்புரிவார்துணிவார்பொருளினையும் *
பேதமறவேயெழுதிடுவாரெழுதுவிப்பாரிவரெல்லாம் *

எ - து சிவனருளிச்செய்ததிவ்வியாகமத்திற்சுலோகமொன்றாயினு,மதிற்பாதியாயினு, மோதுவார்களு, மதனைமாணாக்கர்க்குப்படிப்பிக்குமவரு, மதன்பொருளைவிரித்துச்சொல்வோரும்,விரித்தந்தப்பொருளுரைப்பதனைக்கேட்போரு,மங்ஙனங்கேட்டபொருளையறிவிலழுந்தச்சிந்தனைசெய்யுமவரு, மதற்கிதுவேபொருளென்றுறுதியிடுமவரு, மதனைப்பிழைவாராமலெழுதுவோரு, மதனைப்பொருள்கொடுத்தெழுதுவிப்போரு, மிங்ஙனங்கூறியவிவர்களனைவருமென்றவாறு — சந்தம் — சுலோகம் — ஒகாரம் — எதிர்மறை [௫௩]

மணியின்பேதமனைத்தினையுமகிழ்ச்சியுடனேமண்முழுதுந் *
துணிவுபெறவேநால்வேதந்துயக்கமறவேயாறங்க *
மெணியமறையோர்க்கீந்தபலமியைந்தாரியமின்பொருளெல்லாங் *
கணியகருத்தார்பலமதுதான்கற்றோராலுங்கணிப்பரிதே *

எ. து. முற்கூறியவனைவர்களுமுலகிலுள்ளநவரத்நங்களெல்லாவற்றையும்,பூலோகமெல்லாவற்றையுமையந்திரிவறவும்:பொருளறுதிப் பாடுபெறவுநால்வேதமுமாறங்கமுமுணர்ந் தவந்தணர்க்குமகிழ்ச் சியோடுகொடுத்தபலத் தைப்பெற்றவர்களேயாவர்களாதலாலொருபடலத் தின்பொருளெல்லாமுணர்ந் தவுள்ளத் தையுடையோர்பெறும்பலத்தைச்சகலகலையுங்கற்றபெரியோர் களாலுமளவிடற்கரிதென்றவாறு

நால் வேதமாவன- ருக்,இருக்கேளசு வேசாமமதர்வணந்தருக் கிளைப்போங் கும்வேதநான்கே-ஆறங்கமாவன ரூ -சந்தஞ்சோதிடஞ்சீக் கைகற்பநிருத்தம் வியாகரணமென் றிவை-யெண் ணையங் கமாறெனவெஞுக-எண்ணியவென்பதுஎணியவென்றும் -கண்ணியவென்பது-கணியவென்றும்விகாரத்தாலாயிற்று [௫௪]

மேற்✠கடுத்தமுதலாயினதுதவுவோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

பரமன்மொழியையெழுதச்சீபன்னமதனுற்சினத்தா *

---

✠ கடுத்தம்-தோல்முதலியவற்றாற் சேர்த்தபுத்தகம்

லுரியகடித்தஞ்சமைத்தளிப்பாருதவுவாரும்பலகையினை *
யரியவிதழினலேகத்தையளித்தாரனையரவர்தாமும் *
பொருவிலமலன்புரத்துறைவர்போகம்பலவும்புணர்ந்தாங்கே *

எ - து பரமேசுரனருளிச்செய்தசிவாகமங் களையெழுதுதற் குஅசினமாகிய மான்றோலினாற்றான்-சீலையினாற்றான்-கடி த்தத்தையுண்டாக்கியதற்கிரண்டுபுறமுஞ் சிபன்னமாகியகுமிழமரத்தினாற்கம்பையாகச்சேர்த்துப்பசையிட்டொட் டிக்கொடுக்குமவருந்தேக்குமரமுதலியவற்றாற்செய்த✠வட்டிகைப் பலகைகொடுக் குமவரும்,பெறற்கரியபனையோலையாற்சேர்த்தவலேகத் தைககொடுத் தவரோடொப்பர்,இங்ஙனங்கடித்தமுதலியவற்றைக்கொடுத்தோருமொப்பிலாதசிவனெழுந் தருளியிருக்குஞ்சிவபுரத்துண்டாகியநாநாபோகங்களையும்பெற்றுவாழ்வரென்றவாறு

ஆல்-அசை-அவர்தாமுமென் றவும்மை, யிறந் ததுதழீஇயது ஆங்கு-அசைநிலை- எழுதவென்பதினாலெழுத் தாணியாலெழுதப் படாமையினெழுதுதற் பொருட்டுச் செப்புச்சட்டியிலேவேப்பம்பிசினிட்டுநீர்வார்த் தூறவைத்துக்கடுநெல்லி,தான்றி,களிப்பாக்கு,காசுக்கட்டி,யிவைகளையந்நீர்வார்த்தரைத்துலர்த் திப்பின்பதனைவேப் பங்கடனைகொண்டுநீர்வார்த்தரைத் துலர்த்திப்பின்புமவ் வண்ணம்வேப்பங் கடனையாற்செம்பஞ்சுநீர்வார்த்தரைத் துண்டைபண்ணியெழுதும்பொழுதுநீர்வார்த்தரைத்துநாணற்கழியைத்தூரிகைக்கோலாக்கியெழுதுக [௫௮]

சிவஞானகோசதானஞ்செய்தோர், சிவலோகத் திற்போகம்பொசி த்துத்தொலைந்தவாறே பூமியின்கண்வந்துபெறும் பயனுணர்த் துகின்றார்

போகமுடிவின்மனுநீதிபுரக்கும்புவிவேந்தருமாவர் *
மோகமறநால்வேதமுணர்முந்நூன்மார்பரெனமுளைத்துப் *
பாகமுறவேமூலமலம்பரமனடிக்கன்பருமாவர் *
மாகர்பெறுதற்கரியசிவன்மலர்த்தாளிணையைமருவுதற்கே *

எ - து சிவஞானகோசதானஞ்செய்தவர், சிவபுரத்திலிருந்துபோகங்களைப்பொசித்துத்தொலைந்துள்ளளவிற்பூமியின் கண்மனுநூன்முறையேகாக்கு மனா யனுயும்பிறப்பர், பின்னர்த்தேவர்களாலும்பெற ற்கரியபரமேசுரனுடையதாமரை மலர்போன்றவிரண்டுசீபாதங்களையடைதற்பொருட்டையந்திரிவின்றி நாலுவேத

✠ வட்டிகைப்பலகை-சித்திரப்பலகை

ங்களையுமாராயுமந் தனமொனத் தோன் றியாணவமலம்பரிபாகம்பிறக்கும்படி நா டோறுஞ் சிவனதுசீபாதத்தைவணக்கஞ்செய்தற்குநேசமுடைய வருமாவர்கள் என்றவாறு. உம்மை - எண் [ருக]

முற்கூறியசிவஞானகோசமெழுந்தருளப்பண்ணுமதற்காலை யமுதலாயினவுண்டாக்கு முறையுணர்த்துகின்றார்.

கனகமதனுற்பெட்டகத்தைக்கற்போடமைக்ககலக்கமணி *
புனைகவெள்ளிசெம்பாலும்புரிகவேறும்பொருட்கிசைய *
வினைகஞானவாலையநூல்வழியாற்சிலையாதியின்மகிழ்வாற் *
றனையொப்பரியவரிபரிக்கும்பீடமதனுட்சமைக்கவரோ *

எ - து அந்தஞானகோசமெழுந்தருளப் பண்ணுமதற்குச்சிலைமுதலியவற்றா லாலயத்தைவிதிவழியுள்ளமகிழ்ச்சியுடன்செய்தச்சவாலையத் தனக்குவமனக்கு நிகரில்லாதசிங்கங்கள்தாங்குமொருபீடத்தினைப்பண்ணியிருத் தியதன்மேலேபுத்த கமெழுந்தருளப்பண்ணும் பெட்டகத்தைப்பொன்னினாற்செய்து நவரத்னமிட்டி ழைத்ததாதல், வெள்ளி, செம்பு, மற்றுமுள்ளதாதுக்களாலாதல்,தமதுசெல்வத்து க்கேற்பவிதிவழிசெய்கவென்றவாறு

அரோஅசை-விதிவழியாவது-மூன்றுமுழமுதன் முப்பத் துமூன்றுமுழமீறாகவித்தி யாமண்டபத்தின்விசாலங்கொள்க-நீளமைம் பதுமுழமீறாகத்தனக்குப்பொருந்தக் கொண்டதனைப்ஙீபிராசாதமாதல்- மண்டபமாதல்செய்விக்க, சிலையாதியென்பது னாற்செங்கன்மரமுதலாயினவுமாம், சிங்காதனமேழங்குலந்தொடுத் தவ்விரண்ட ங்குலமாகவேற்றியேற்றிமுப்பத்திரண்டங்குலமீறாக-ஓ ஆயாமம் பொருந்தக்கொ ண்டுசதுரசிரமாய்தாசிரமாதற்பொருத்தம்வாய்க்க-அவ்விதிவழிசெய்க ,பெட்டக ஞ்சமைத் தற்கு - பலா - மா - மகிழ் - அத்தி - முருக்கு - இவ்வியன் றதோன்றை மூவிரற்கனப்பலகையாக்கிமுப்பத்தாறங்குலவகலமுமதின்மும்மடங்கு நீளமுமக லத்துக்கொத்தவுயரமுங்கொண்டுபெட்டியாகப்பண்ணியதிலொருபுறத் திலேகத வுந்தாளுமிட்டிசைகளிலிருப்புப்பாளங்கட்டிப்பன்னிரண்டங்குலவுயரத் தின்னாலு கால்பண்ணிப்பெட் டியிற்கிழேதைப்பதென்க, நூல்வழியென்பதுமேலேத்திபக மாக்கிமுற்றுங்கூட்டுக. [சுய]

---

ஙீ பிராசாதம்,கோயில், ஓ ஆயாமம்,உயரம்

இதுவுமது

அணியார்கனகப்பெட்டகத்தையரியாதனத்தின் மிசையமைக்க *
பணியாபரணன்பகர்மொழியைப்பதிக்கவதனுட்பாங்குறவே *
தணியாக்காதலுடன்பூசைசமைக்கவிதியிற்றவறுதே *
யணவுணர்ந்தவுயர்ந்தோர்க்குமுவகையுறவேயுதவுகவே *

எ - து முன்னர்க்கூறியசிங்காதனத்தின்மேலேயழகுநிறைந்தபொன்முதலியவற்றுற்செய்தபெட்டகத்தினைவைத்த தனுள்ளேபாம் பினைப்பூணுகவணிந்தபரமேசுரனருளிச்செய்த சிவாகமத்திருமுறையையெழில்பெறவெழுந்தருளப் பண்ணியமையாதவன்புடனேவிதிமுறைதப்பாமற்பூசைசெய்துகற்றுணர்ந்தபெரியோர்க்குமுள்ளமகிழ்ச்சியுடனுண்டியினைக்கொடுக்கவென்றவாறு.

உயர்ந்தோர்க்குமென்னுமும் மையாலிழிந்தோர்க்குமெனவறிக-அமைக்க-பதிக்க - வெனனுமுற்றுக்களையெச்சமாக்கிப்பொருளுரைக்க [௬௧]

இதுவுமது

என்றுமியற்பிபிடையாகாரிகதியுமிருநிலனும் *
பொன்றுமுடலமெனவுணர்ந்துபொருவிலரியபொருடன்னை *
யொன்றக்கருதுமுளமுடையாருய்யவையமோப்பிலுரை *
நின்றுநிலைமையுடையோர்பானெறியையறியநிகழ்த்திடவே *

எ - து சரீரநிலைநில்லாமலழியுமென்றறிந்திந்தச்சரீரமிருக்கையிற்றனேயொப்பின்றியொருவராலும்பெறற்கரியசிவமாகியபொருளையடையக்கருதுமுள்ளமுடையோருலகமெல்லாம்பிழைக்கும்பொருட்டந்தஞானவாலயத்திலிருக்குஞ்சிவஞானகோசத்துக்கென்றும்பூசைநடத்துதற்குத்திவ்வியாகமங்களையெடுத்ததனிற்கூறுமுத்திமார்க்கங்களையாராய்தற்குமந்தமார்க்கங்களையனுட்டித்தற்குநிகரில்லாதவசனத்தன்வழிநின்றுநிலைபெறுந்தன்மையுடையோரிடத்திற்றனராசியும்பூமியுங்கொடுக்கவென்றவாறு.

ஈண்டுக்கருதுமுளமுடையாரென்பதனை யெழுவாயாக்கிப்பொருளுரைக்க யாகமெனினும் பூசையெனினுமொக்கும். [௬௨]

சிவாகமங்களினதுசீர்ணோத்தாரணவிதியுணர்த்துகின்றார்.

பழகிப்பழுதுபலவிரவிற்பரமர்திருவாய்மொழியிதழும் *
வழுவற்றெழுதவல்லாரால்வரைவித்தெழுதிமையினையு *

மறுகுற்றதனையருச்சிக்கவாசான்பரையவதுதன்னை *
யழலிற்புரிகவாகுதியையானெய்யுடனேயமலனுக்கே *

எ -- து ஆசாரியரானவர்தம்பிரானார்திருவாக்கினாலருளிச்செய்ததிவ்வியாகமத்திருமுறைபழகியேடுகள்பலவுமுரிதனெரிதலெழுத்துத் தெரியாமைமுதலியகுற்றங்கள்பொருந்திற்பிழையறவெழுதவல்லவர்களாலேயெழுதுவித்துமைக்காப்புஞ்சாத்தியழகுபெற்றிருக்கிற வந்தத் திருமுறையையருச்சனைசெய்யக் கடவன்,பின்புபழகிப்போனதிருமுறையைநின்மலனாகியசிவனுக்குப்பசுவினெய் யிற்றோய்த்துச்சிவாக்கினியிலோமஞ்செய்க, வென்றவாறு.

மையெழுதல் - இந்தற்பொருண்மேனின்றது. [௯௩]

மேலதற்குஞானவாலையமுதலாகவிங்ஙனங்கூறியவற்
றைச்செய்தோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

இந்தவிதிப்படியாற்றினர்கண்மூவேழ்சுற்றத்தொடிறைவ *
னந்தவுலகமடைந்தட்டகுணத்தொடமர்வரவ்விடத்துஞ் *
சிந்தைக்கரியசிவனடியைத்திளைத்தேயிருப்பார்சிவமாவர் *
வந்துபிறப்பர்போகத்தின்மகிழ்ச்சியாங்கேவைத்தாரே *

எ - து இங்ஙனங்கூறியபடியேசிவஞானத்துக்காலயமுதலானவிவையிற்றைச்செய்தவர்கள், இருபத்தொருவர்க்கத்திலுள்ளவர்களுடனேசிவனெழுந்தருளியிருக்குமந்தச்சிவலோகத்தையடைந்துமுழுதுணர்ஞானமுதலானவெண்குணங்களுடனுங்கூடியிருப்பார்கள், அவ்விடத்துந்திவ்வியபோகங்களிலழுந்தாதுமனத்துக்கெட்டாத சிவனதுதிருவடியினிட்டைபுரிந்திருக்குமவர்கள், மகாசங்காரகாலத்திலேபரமமானமுத்தியையடைவர்கள், அஃதன்றியாண்டுத்திவ்வியபோகங் களில்விருப்பத்தையுற்றோர்கள்,மீளவும்பூமியின்கண்வந்துபிறப்பர்களென்றவாறு [௯௪]

அங்ஙனம்பூமியின்கண்வந்துபிறந்தோரடையும்பலமி
தென்றுணர்த்துகின்றார்

போகமுடிவிற்புவிதன்னிற்பிறந்துபுரந்துபுவியெல்லா *
மோகமறவேமறைநான்குமுறையிலுணர்ந்துமுனிந்துடல *
மேகவிறைவனிணையடியைப்பிரண்டற்றெளியுமெய்ஞ்ஞான *
யோகமடைந்துசிவமாவரெனமனைத்துமொழிந்திடவே *

எ - து சிவலோகத்திலிருக்குநாள்போகத்தில்விரும்பினோர்,அந்தப்போகம்

பொசித்துத்தொலைந்துள்ளளவிற் பூமியின்கணிராசாவாய்வந் துபிறந் துலகமுழு துங்காக்குந்தலைமைபெற்றுப்பின்புஜயந்திரிவுவிகற்பமறநானுவேதங் கலையுமுள்ள படியேயாராய்ந்துசரீரமும்பொருளல்லவென்றுவெறுத்துத் தனிமுதலாய்நிற்கும் பரமேசுரனதுதிருவடியிணையைவேறறவிளங்குமழகினைபுடையஞானயோகத்தை ப்பொருந்திமலமாயாகன்மங்களெல்லாங்கெடும்படிசிவத்தோடேகலப்ப ரென்ற வாறு.

ஞானம் - என - து - சிவஞானம் அதனைக்கலத்தல், ஞானயோகம், இரண்டற் றெளிருமெழிலென்பதனை, ஞானத்துக்கடையாக்கிப்பொருளுரைக்க, திருவடியே ஞானமாதலாற்றிருவடியையிரண்டற்றெளிரும்ஞானமெனக்கூறினர்,உடலுமென் றவும்மையாற்செலவமுமுனிந்தெனக்கொள்க [௬௫]

இங்ஙனம்ஞானவாலைபஞ்செய்யும்விதிகூறிமேற்சிவாச் சிரமஞ்செ
ய்யும்விதியுணர்த்துகின்றார்

அறைந்தாமமலனருண் மொழியையறையுமுறையுமதன்விதமுஞ் *
சிறந்தவெல்லைச்சிவாச்சிரமஞ்செய்யுமுறையுஞ்செப்பிடுவா *
நிறைந்தபுகழுநிகராதபோகவிதமுநிலன்வாழ்வை *
மறந்துபிறவாவரந்தானுங்கற்பார்தமக்கும்வாய்ப்பதற்கே *

எ - து நின்மலனுகியசிவனருளிச்செய்ததிவ்வியாகமத்தைமாணுக்கர்க்குபதேசிக் குமியல்பினையுடையசிவஞானதானத் தையுமதற்குபயோகங் கொடுத் தாரடையும் பலத்தையுமந்தவியலைக் கற்குமவர்களுக் குலகமெல் லாநிறைந் துநிற்குங்கீர்த்தியு மொப்பில்லாதபோகபேதங்களும்பூமியில்வாழுஞ்செயலையவமதித் துநினையாதொ ழிதலைபெற்றொருகாலுஞ் செனியாதமுத் தியுமிவையுண்டாகையின்பொருட்டுச் சொன்னேம,மேற்சிறந்தவெல்லையினையுடையசிவாச்சிரமஞ்செய்யும்விதியையுமுன க்குச்சொல்வாமென்றவாறு

இதனுளிரண்டெழுவாயுமிரண்டுபயனிலையுங்கூட்டுக. கற்பார்தமக் குமென்ற வும்மையாற்கேட்பார்க்குமெனவறிக [௬௬]

மேலதனைவிரித்துணர்த்துகின்றார்

சிறக்கச்செய்கதிருவெல்லைசெறியப்புடையேதிருமதிலும் *
புறத்தேயெழிலார்பொழிலதனைப்புரிசையதனைப்புடையடைய *
நிறைத்தமலர்ப்பூம்பொழில்புறத்துநிரைநீர்த்தடங்களதன்புடையே *
பிறக்கலனையகோபுரத்தைப்பிரியாப்புரிசைபெறுத்துகவே *

எ - து. அழகியவெல்லையின் கண்டுவேசிவாச்சிரமஞ் செய்தற்கெல்லையைநியமித்ததனைச்சூழவஞ்சுமுழவுயரத்திலொருதிருமதிலுமதனைச்சூழப் புறம்பெல்லையிலேயழகுநிறைந்தபூந்தோப்பினையுமதன்புறத்திலேநீராணிறைந்தபொய்கைகளையுமதைச்சூழமலைபோன்றகோபுரத்தைவிட்டுநீங்காதஅடையவளைஞ் சான்றிருமதிளையுஞ்சிறப்புண்டாம்படிசெய்கவென்றவாறு [௬௭]

இதுவுமது

உரைத்தபுரிசையுண்ணிலாமொப்பிலமலனுரைத்தவுரா *
தரித்தும்விரித்துந்தக்கோர்க்குத்தாபுராநிலைமைதலைமையாவ *
ரிருக்குங்கழகமண்டபமுமியற்றியிடுகவெழிலுறவே *
யரிக்குமரிக்குமயன்றனக்குமரியானடியேயடைவாரே *

எ - து பிறந்திறக் கும்பிரமனுமாலுந், தேடுதற்கரியசிவனதுசீபாதத் தையடையக்கருதுவோர், முன்னர்க்கூறியமுதலாவரணத்துக்குநடுவாகநியமித்தவெல்லையிலேதிருமடத்தினைமூன்றுநிலமாக வெடுத்ததன்மேலேநிகரில்லாதநின்மலனாகியசிவனருளிச்செய்ததிவ்வியாகமங்களைத்தம்முள்ளத் தின்கட் ✠தாரணைபண்ணியுமதன்பொருளைத்தக்கோர்க்குவிரியக்கூறியுமேலானநிலைமையையுடையபெரியோர்களெழுந்தருளியிருக்குங்கல்விபயில்களனாகியநாலாநிலத்தையுமழகுபெறச்செய்கவென்றவாறு — கழகமண்டபமுமென்னுமும்மையால், முதனிலமிரண்டாநிலமூன்றுநிலங்களிலேகுகைகள்செபத்தியானம்பண்ணுந்தலங்களுஞ் செய்கவெனக்கொள்க. [௬௮]

இதுவுமது

அதற்குமீதாம்பஞ்சமத்தையமைக்கவமலர்க்காலயத்தைக் *
குதற்கபேதமனைத்தினையுங்குறைத்தேகுறையாமதிகொடுக்கும் *
பதத்தைப்பகர்ந்தபரமனுக்குப்பாசவினைக்கும்பகைவனுக்கு *
நதத்தைக்கடந்தநம்பனுக்குநாடற்கரியநாதனுக்கே *

எ - து முற்கூறியகல்விபயில்களத்துக்குமேலானஐந்தாவதுநிலத்தினையான்மாக்கள்பாசவினைக்கும்பகைவனுமாய்நாதாதீதனுமாயாவராலுங் காணொணாதகர்த்தாவுமாய்வடவாலின்கீழெழுந்தருளியிருந்துதேவர்களிருடிகளுக்கெல்லாம்அவலத்தருக்கமுதலியகுற்றங்களைநீக்கிநிறைந்தஞானத்தையுதவும்வேதாகமங் களையுபதேசித்ததெக்ஷிணாமூர்த்தமாகியசிவனுக்காலயமாகச்செய்கவென்றவாறு

பாசவினைக்குமென்றவும்மையால்- ஆணவத்துக்குமென- எச்சந்தழீஇநின்றது- நா

✠ தாரணை - தரித்தல்.

தம் - நரமெனக்குறுகியது [௬௧]

இங்ஙனங்கூறியசிவாச்சிரமத்தைச்சூழ ✠ அபிமுகங்களாகப் பாகசாலை
முதலியவெட்டினையும் ◉ விலொமமாக்கட்டுமுறையுணர்த்துகின்றார்

அங்கிமுதற்றென்றிசையந்தத்தடுகைமனைசத்திரசாலை ✽
பொங்குதழலைப்புரிசாலைபூணும்பணியும்பேணுமிடந்
சங்கைதணிக்குங்கொட்டாரஞ்சமைக்கக்குடநீர்சமித்துறையு ✽
ளிங்குவேண்டும்பொருளதிதியேவலோருமெய்திடமும் ✽

எ - து அக்கினிதிக்குமுதற்றென்றிசையீறுகக்கொண்டுஅக்கினிதிக்கிலேதிருமடைப்பள்ளியுங், கிழக்கேசத்திரசாலையு, மீசானதிக்கிலேசிவபூசையக்கினிகாரியஞ்செய்யும்யாகசாலையும், வடக்கேதிருவாபரணமுதலிய சேமிக்கும்பொற்பண்டாரமும், வாயுதிக்கிலேஎண்ணைக்கடந்தபெரியநெற்சேருக்குமேற்கேதிருமஞ்சனம் வைக்குமுறையுளு, நிருதிதிக்கிலேசமித்துத்தெற்பைப்புல்லுவிறகு ஆயுதங்கள் வைக்குமுறையுளுந், தெற்கில்இம்மடத்துக்குவேண்டுமாதனங், கட்டில், பாதுகை, முதலியவைகளிருத்தற்கிடமும், அதிதிகள், பரிசாரகரிருத்தற்கிடமும், செய்கவென்றவாறு.

உறையுள், என்பதனை, குடநீரென்பதற்குமிடமெனக்கூட்டுக, எய்திடமென்பதனைவேண்டும்பொருள்வைத் தற்கிடமுமெனக்கூட்டுக, உம்மையெண்ணின்கண்வந்தது, சமைக்கவென்னும்வியங்கோள்வினைமுற்று, நடுநிலைத்தீபமாயெவற்றிற்கும்பயனிலையாயிற்று [௭ம]

இவ்வண்ணமியற்றியமடத்தின்கண்-தெக்ஷணமூர்த்
தத்தைத்தாபிக்குந்திறமுணர்த்துகின்றார்

விதிநான்முறையேயவொதவினையுமற்றைவினையனைத்தும் ✽
பதியாம்பரமன்றனக்கிசையப்பண்ணியிடுகபரிவுடனே ✽
நிதியுங்கொடுக்கநிலனுடனேநிகழவென்றுநிறைபூசை ✽
துதியுஞ்செய்கதோன்றுதணையைப்பணிகதுகளறவே ✽

எ து தெக்ஷணமூர்த்தத்தைச்சிலைமுதலியவற்றுற்றிருமேனிக்கொண்டுபதியாகியவந்தத்தெக்ஷணமூர்த்தித்தம்பிரானுர்க்கேற்கும்படிசிவாகமங்களில்விதித்த

---

✠ அபிமுகம். நேர்முகம்

◉ விலோமம், முறைபிறழ்தல, அநுலோமம, அப்பிரதக்ஷணம்

பிரகாரத்திலேயதிவாதகன்மமுமற்றுமுள்ளபிரதிட்டாகன்மங்களும்பத்தியினாலே செய்துஐந்தாநிலத்திற்குபித்து எந்தக்காலமுமகாபூசைநடக்கும்வண்ணம்விளைநிலங்களும், பொன்முதலியநிதியங்களுங், கொடுத்துத்தங்களிடத்துண்டாகியவாணவாதிகுற்றமறும்படியாவர்க்குந், தோன்றுமலவரவருள்ளத்துணிற்குந் துதிவசனைத்தோத்திரமுஞ்செய்துவணங்கவென்றவாறு

இசையவென்றுசிறப்பித்ததனாற்சிலாபேதமலலாதவைகளுக்குக்கண்ணுடைய பிலதிவாதனஞ்செய்கவென்றுணர்க [௫௧]

அந்தவாசாரியர்க்குமற்றுமுள்ளோர்க்குமுபகரிக்குந்திறமுணர்த்துகின்றார்

குரவன்றனக்குநிதிமுதலுங்கொடுக்கக்குன்றாக்குலமொழுக்கம் ※
விரதமுடையவேதியர்க்கும்விழைவாற்பதமுமிசைவிக்கப் ※
பரமனடியாரவர்தமக்கும்பங்குகாலர்பாலருடல் ※
விரவுநோயர்விழியிழந்தார்விருத்தர்தமக்கும்விருப்புறவே ※

எ - து பிரதிட்டைசெய்தபலந் தனக்கெய்தும்வண்ணமவ்வாசாரியர்க்குத் தனந், துகில்,முதலாயினதுகொடுத்துஒருகாலுங்குறைவுபடாதகுலமொழுக்கம்விரதமிவைகளையுடையபிராமணர்க்குஞ்சிவனடியாரானமாகேசுரர்க்குமுடவர், சிறுபிள்ளைகள், சரீரத்திலேவியாதியையுடையவர்கள், குருடர், விருத்தரானவிப்பெயர்களுக்குமன னம்விரும்பும் படியாதரவினாலே பொசிப்பிக்கவென்றவாறு [௫௨]

சிவபுரஞ்செய்தார்
பெறும்பயனுணர்த்துகின்றார்

செய்தார்சிறக்கச்சிவபுரத்தைச்சிற்பநூலாயிற்றிகழ்விதியா ※
லெய்தார்பிறப்பிற்சிவலோகமெய்திப்போகமினிதருந்தி ※
வெய்தாம்வினையுமாணவமும்வியாமாயையொடும்விடவே ※
மெய்யாம்பரமவித்தைபுறவிமலன்கமலம்விரவுவரே ※

எ - து - பூமியின்விளங்காநின்றசிற்பசாத்திரத்தின்விதிப்படியேசிவபுரத்தைச் சிறக்கும்வண்ணஞ்செய்தார்கள்மீண்டும்பூமியின்கண்பிறவாமற்சிவலோகத்தையடைந்தினிதாயபோகங்களையருந்திப்பின்கொடிதாமாயையோடுகொடிதாயகன்மமுமாணவமும்விட்டுநீங்கமேலானசத்தியஞானமுண்டாகநின்மலனுடையசீபாதமாகியதிருவடித்தாமரையையடைவர்களென்றவாறு

இச்செய்யுளிற்சிவாச்சிரமத்தைச்சிவபுரமெனக்கூறியதென்னெனிற், சிவாச்சிரமமும், சிவத்தலமும், மடமும், திருக்கோயிலும், மொக்குமென்பதனுலென்றுகொள்க. ஆதலால்மேல்வருஞ்சிவனற்புரியென்னுஞ்செய்யுண்முதலியசெய்யுட்களெல்லாஞ் சிவாச்சிரமத்தோடுசிவத்தலங்களையுங்கூறுகின்றனவாதலின் அவற்றினையுமாண்டாண்டு பிரித்துப்பயன்கொள்க. [எங]

சிவபுரஞ்செய்ததச்சன்முதலாயினோராவுயர்திணையும
தற்குபகரணமானவஃறிணையுமடையும்பலமுணர்த்துகின்றார்.

சிவனற்புரியைச்சென்றடைவர்சிந்தைமகிழச்சிவபுரிசெய் *
தவர்முதலோர்தருமுதலுஞ்சாரும்பூணியொடுமற்றும் *
புவலோகத்தின்மிசைப்புகுவர்பொருள்கொண்டேவற்புரிந்தாருந் *
கவராவொருமைக்கருத்துறினேகணிகையவருங்கரிப்புறமே *

எ - று. கண்டோருள்ளமகிழும்வண்ணஞ்சிவபுரியைச்செய்தசிற்பாசாரிமுதலாயினோருஞ், சிவபுரிசெய்தற்குபகரணமானமரஞ்சிறுசெடிமுதலியனவுஞ்செங்கல் - கல் - முதலியனபூட்டிவருதற்குப்பொருந்திய எருதுகடாவினுடன்மற்றுமுபயோகமானவைகளுநல்லசிவபுரத்தைச்சென்றுபொருந்துவர், மனம்மேவப்படாதேவற்றொழில்செய்பவுஞ்செய்விக்கவும்பெற்றோமென்னுமொருமைபொருந்தியகருத்துண்டாமேயாகிற்கூலிவாங்கியேவல்செய்தவர்களுமுருத்திரகணிகைமார்களுமகிழ்ச்சிபொருந்தப்பூலோகத்துக்குமேலாகியபுவலோகத்தின்கட்சென்றுபோகம்புசித்திருப்பார்களென்றவாறு. தவர்முதலோரென்பதனால் - சிற்பநூல்பிடிப்பார்முதலாயினருமெனவறிக - தருமுதலுமென்பதனாற்சிலைபுமெனக்கொள்க. பூணியொடுமற்றுமென்பதனால், ஒட்டகமுதலியனவுங்கொள்க, கணிகையவருமென்றவும்மையாற்றேவதாசிகளுமெனக்கொள்க, உருத்திரகணிகையைக்கணிகையெனத்தலைக்குறைத்தலாக்கினார் [எச]

அச்சிவபுரத்துட்செனனமுதலியவடைந்தோர்பெ
றும்பயனுணர்த்துகின்றார்.

சிறந்துசெறிவர்சிவபுரத்தைத்தெரிதற்கரியசிவனகருட் *
பிறந்தார்பிறவாநிலைமையினைப்பிரியாதொருமைப்பெருமையுட *
னிறைந்தாருறையுமவர்க்கனமுறுந்தவுவார்கண்முறையுள்ளரு *
மிறந்தாரிறக்கவென்றுநர்களென்றுமிவர்களெல்லோரும் *

மேற்சிறப்புவிதியுணர்த்துகின்றார்

ஆக்கையாலோதனத்தாலுமருநோயதனையருந்தவர்க்குப் ※
போக்குவிப்பாரவர்தாமும்பொருந்திப்போகஞ்சிவபுரியு ※
ளீக்கிப்பிறந்துநிலமிசையேநில்லாதுடலமெனநினைந்து ※
நோக்கற்கரியபரமசிவனேஞென்றுளடைவர்நோயறவே ※

எ - று அரியதபோதனர்களுக்குவந்தநீங்குதற்கரியநோய்களைத் தமதுகாய த்தொழில்களினாலுமன்னத்தினாலுந்தாமாதலொருவராக்கொண்டாதல் போக்கு விக்குமவருஞ், சிவலோகத்திற்சென்றிருந்துபோகங்களையனுபவித்துத் தொலைந்த வாறேபூமியின்கண்வந்துபிறந்துசரீரமனித்தியமென்றறிந்து தம் மையனுதியிலே தொடர்ந்துநிற்குமாணவமுதலியபிணிகணீங்கும்வண்ணம்யாவராலுநாடொணாத பரமசிவனதுவலியினையுடையசிபாதங்களையடைவர்களென்றவாறு

ஓதனத்தினாலுமென்றவும்மையால் - அவுடதத்தினாலுமெனவறிக [எஅ]

வேறு

என்றுசிவஞானவித்தானமுமிசைத்தான் ※
நன்றுமவன்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் ※
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைமாய ※
நின்றுபுரிவன்முவாநிற்குணனினைந்தே ※

எ - று வெளி [எகூ]

வேறு

ஆருயிர்வேரொவாயவனேயாரணமோதியவாயவனே ※
சாரவாங்காயசற்பொருளேதனையொழிந்தின்மையசற்பொருளே ※
பூரணமாகியபொருளிலியேபுரமவைமாளப்பொருவிலியே ※
யாருமெனாறுதவிடத்தினனேயருந்தியவாலவிடத்தினனே ※

எ - று எவ்வுயிர்க்குமூலமாயிருந்தவனேசற்புருடமுதலியநாலுதிருமுகத் தாலுநாலுவேதங்களையுமோதினவனேதிக்கம்பரர்தியானஞ்செய்யப் படாநின்றமல் லமூர்த்தியேதானேயன்றிவேறில்லாமல்விளங்குமுண்மையாகியபொருளேசர்வா ன்மாக்களிடத்தும்பூரணமாயொப்பில்லாதிருப்போனே, தாரகன், தாரகாக்ஷ ன், வித்தியுன்மாலியென்னுமூவர்புரங்களையும்பொருதழிக் கப்படாநின்றவில்லையு

பொருகயல்புணரப்பொதிமலை முனிசொற்புகல்வாமே ※

எ - து திருமாலுநான்முகனுமறியவொண்ணாதவனுமாய்த் தேவர்களுக்கமிர்தங்கொடுக்கும்பொருட்டுக் கருநிறங்கொண்டவிடத்தைமுன்னாட் பானம்பண்ணினவருட்கடலாயுள்ளவனுமாயாவர்க் குமேலானவனுமாய்ப் பாம்பினையுஞ்சங்குமணிவடத்தையுந்திருவரையிலணிபவனுமாயாவராயினுந்தன்னையடைந்தபோதவர்க்கன்புசெய்வானுமானசிவனது. ஓசைசெய் யாநின்றவீரக்கழலினையணிந் தசீபாதங்களையடைதற்குப் பொதியமாமலையின்கண் வாழுமகத்தியமுனிவன்விளக்கியதமிழ்மொழியையாம் நுதிப்போமென்றவாறு [௮௫]

இரண்டாவதுசிவஞானதானவியலுரை முற்றும்



## மூன்றாவதுஐவகையாகவியல்

இவ்வோத்தென்னுதலிற்றோவெனின்ஐவகையாகத்தின்பகுதியையுணர்த்துதனுதலிற்று. இங்ஙனஞ்சிவஞானதானவியலை க்கூறியதன்பின்னரிவ்வியலைக்கூறியதெற்றுக்கெனின்கருமயாகமுதலியஐவகையினுள்ளுஞானயாகமேவிசிட் டமென்றுணர்த்தமையாலதன்பின்னர்வைக்கவேண்டிற்றுஇத்தலை ச்செய்யுளென் னுதலிற்றோவெனின்ஐவகையாகத்தைத்தொகுத்து ணர்த்துதனுதலிற்று

கருமமென்றுதவமென்றுகற்பாற்பாயின்மந்திரமென்று ※
பரிவால்வருபாவனையென்றுபரமஞானமகமென்று ※
தெரியுமகமோரைந்தினையுஞ்சிறந்தவிவற்றின்பலத்தினையும் ※
பரமயோகர்நிலையுடனேபகர்வான் முனிவபகர்வாமே ※

எ - து வாராய்முனிவரனேகன்மயாகமென் றுந்தவோயாகமென்றுமுபதேசிக்கிறமந்திரத்திலுற்பயிலாநின்றசெபயாகமென் றுமாதரவிலுல்வருந்தியானயாகமென் றுமேலானஞானயாகமென்றுமிப் படியாராயுமைவகையாகத்தினையுமிவையிற்றின்விசிட்டமானபலத்தினையுமேலானசிவயோகிகள்நிலையோடுங்ன்மேல்வைத்தவன்பினுல்யாம்சொல்லாநின்றோமதனைக்கேட்பாயாகவென்றவாறு [௧]

மேற்றொகுத்தஐவகையாகத்தினுட்கருமயாகமுதலியமூல்றினைவிரித் துணர்த்துகின்றார்.

செய்நுசிறக்கச்சிவபூசைசெந்தீவளர்க்கைமுதல்கரும ※
மையவுடலம்விரதத்தைநவிற்றலாந்தவமுஞ்செபமும் ※
மையப்பாற்றல்பிறர்செவியிற்படாநுபாற்றன்மந்திரத்தை ※
மையலகலமனத்தாலும்வருக்கையெனமூவகைத்தாமே ※

எ - து. கன்மயாகமாவதுநூல்விதியினாற்பூசாங்கமாகப்புனன்மூழ்கிச்சிறப்புடன்சிவார்ச்சனைபண்ணியக்கினிகாரியமுதலியனசெய்தல், தவயாகமாவதுசரீரம்வாடச்சாந்திராயணமுதலியவிரதங்களையனுட்டித்தல், செபயாகமாவதுமந்திரங்களைப்பிறர்செவிக்குக்கேட்கவுச்சரித்தலும்பிறர்செவிக்குக்கேளாமன்மெள்ளவுச்சரித்தலுமயக்கமொழியும்படிமானதமாகவுச்சரித்தலுமெனமூன்றுவகையினையுடைத்தாமென்றவாறு.

மந்திரயாகமெனினுஞ் - செபயாகமெனினுமொக்கும். [௨]

இங்ஙனங்கூறியசெபயாகஞ்செய்யுமுறையுமவையிற்பின்பல
மிகுதிக்குறைவுமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

செபித்துவடந்தற்சனிமீதேசெபிக்கவொலியைச்சேட்டையாயுறும் ※
செபித்துவடமத்திமைதன்னிற்செபிக்கமந்தருசேட்டையாயுறும் ※
செபித்துவடத்தையநாமிகையிற்செபிக்கமனத்தைச்சேட்டையாயுறும் ※
குறிப்பிற்குறைந்தபலமந்தமதனிலொலியுங்குறைந்தபலம் ※

எ - து. பிறர்க்குக்கேட்கவுச்சரிக்குமந்திரத்தையொலியாகச்செபிக்குங்காற்செபவடத்தைத்தற்சனிமீதேவைத்துப்பெருவிரலாற்றள்ளிச்செபஞ்செய்க, பிறர்க்குக்கேளாமற்றனக்குக்கேட்கவுச்சரிக்குமந்திரத்தைமந்தமாகச்செபிக்குங்காற்செபவடத்தைமத்திமைவிரலின்கட்சேர்த்துப்பெருவிரலாற்றள்ளிச்செபஞ்செய்க, செவிப்புலனாகாதுச்சரிக்குமந்திரத்தைமானதமாகச்செபிக்குங்காற்செபவடத்தையநாமிகையின்கட்சேர்த்துப்பெருவிரலாற்றள்ளிச்செபஞ்செய்க; வாராயுங்கான்மானதமாகவுச்சரிக்குமதைப்பற்றமந்தமாகவுச்சரிக்குமதுதாழ்ந்தபலமதனைப்பற்றவொலியாகவுச்சரிக்குமதுகுறைந்தபலமென்றவாறு. [௩]

கண்டிவிசிட்டங்குசைக்கிரந்திகனிட்டங்கமலமத்திமகனிட்டம் ※
புண்டரீகமணியதனிற்படிகமணிபுத்திரதீபி ※
புண்டைச்சங்கமிறைவிரலுமுணரிலொன்றுக்கொன்றானம் ※
விண்டார்போகவிருப்பங்கைமேலேமுத்திக்கமாலையெல்லாம் ※

எ - து. செபமாலைகளவற்றினுமுருத்திராக்கமேவிசிட்டமதற்குத்தெற்பை

யைப்பவுத்திரமுடிச்சாகமுடிந்தமாலைகீழாமதற்குத்தாமரைமணிவடந்தாழ்ந்தபல மதற்குப்படிகக்கல்லினாற்கடைந்தமணிதாழ்ந்த பலம்புத்திரதீபிவடமுங்கடைந்து ருட்டினசங்குமணிவடமுமிறைபும் விரலுமாராயிலொன்றுக்கொன்றுபலங்குறைய ம்போகத்தின்கண்விருப்புநீங்கியதுறவிகள்கண்டிமாலைமுதன்மாலைகளெல்லாங்கை யினாலேமேனோக்கித்தள்ளிச்செபிக்கவென்றவாறு. [௪]

இயங்கிற்பிராணனிடைநாடியிருமூன்றெழுத்துமியம்பிடுக ❊
நயந்தார்போகமதுகயந்தார்வலதுநாடிதனினவில்க ❊
வியங்கிற்பிராணன்சுழுனைவழியிரண்டுமெடைவாரியம்பிடுக ❊
முயங்கவிலையார்முலையிணையைவலதுநாடிமுளைத்தெழினே ❊

எ - று போகத்தையடையவிரும்பினோர்பிராணவாயுவானதிடையென்னு நாடியிலேநடக்கிற்பிரணவத்தோடுகூடியமூலமந் திரமானஆறெழுத்தையுமுச்சரிக் கக்கடவரதனைவெறுத்தோர்பிங்கலைநாடியின்கட்பிராணவாயுவியங்கிலாறெழுத் தையுமுச்சரிக்கக்கடவர்புத்திமுத்தியிரண்டினையும் விரும்பினோர்சுழுமுனைநாடியி லேபிராணவாயுவானதியங் கிலந்தவாறெழுத் துமுச் சரிக்கக்கடவர் பிராணவாயு வானதுபிங்கலையிலேதோன்றியியங்குகிற காலத்திலிளையாராகியமடவாரதுமுலைத் துணையினையும்புணரக்கடவரென்றவாறு.

மாதரைக்கூடும்விதியீண்டுக்கூறியதுமற்றொன் றுவிரித்தலென்னுங்குற்றமாகா தோவென்னில், ஒப்பின்முடித்தலென்னுந்தந்திரவுத்தியாற்கூறுகையாற்குற்றமின் றெனவறிக. [௫]

மேலிருத்தமுறையானேதியானயாகஞ்செய்யுமுறையு ணர்த்துகின்றார்.

பற்றிப்பரமன்றிருவுருவைப்பரிவாலொருமைப்படவுள்ள ❊
மற்றோர்பொருளின்மனம்பற்றுவண்ணந்திண்ணமுறமயக்க ❊
மற்றேதொடர்ந்தவிச்சின்னமடையாவறிவுபாவனைநீ ❊
ரெற்றேயொழுகுமிறைவன்பாலற்றேயஃதென்றெண்ணுகவே ❊

எ - று தியானயாகமாவது மனம்வேறொருவிடையங்களினும் பொருந்தா வண்ணந்தாரணையினிறுத்தியஞ்ஞானவிகற்பமற்றுள்ளமானதுசதாசிவாதிவிக்கிர கங்களிலொன்றையன்பினாலேநினைந்தத்தியானத் திலேயிடைவிடாதுகலந்துநிற்ற லஃதெத்தன்மைத்தென் னிலாற்றுநீரிடையறாதொழுகுமத்தன்மைத்தென்றுண ர்கவென்றவாறு. [௬]

மேலிருந்தமுறையானேஞானயாகத்தின்சிறப்பு
ணர்த்துகின்றார்.

ஒப்பிலமலன்றனைபுணர்த்துமுறைமையையோதலோதுவித்தல் ※
செப்பும்பொருளைத்திரிவுமறத்தெளிகைபிறரைத்தெளிவிக்கை ※
தப்பாததனைமனத்தகத்தேதரிக்கையெனவுந்தானைந்தாம் ※
வைப்பாயருந்தாமருந்தாகிச்சிறந்தஞானமகவினையே ※

எ - து இணையில்லாதநின்மலனைச்சிவனையறிவிக்குஞ்சிவாகமங்களைத் தானோதுதலும்பிறரையோதுவித்தலுமவையிற்சொல்லும்பொருளைத்திரி வறத்தான்றெளிதலும்பிறரைத்தெளிவிக்கையுமந்தப்பொருளைத்தப்பாமற்றனது மனத்தின்கட்டரிக்கையுமெனவைந்துவிதமாய், இதுவேபக்குவான்மாக்களுக்கு வைப்புமாய், அபக்குவராலருந்தவொண்ணாமருந்துமாய்ச்சிறந்தமைபெற்றஞான யாகத்தொழிலாவதென்றவாறு.

தேவாரம்.

கற்றல்கேட்டலுடையார் பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்பெற்றவர். கல் லாதார்காண்டற்கரியானை, எனவும், கல்லாநெஞ்சினில்லாஈசன்சொல்லாதாரோ டல்லோநாமே, எனவுங்கூறியருளினாராகலினித்தனையேவிசிட்டமாகக்கூறினவா று. [illegible]

ஐவகையாகங்களொன்றுக்கொன்றுசிறப்பென்பதூஉமவை
யும்பலமீத்தகைத்தென்பதூஉமுணர்த்துகின்றார்.

அறைந்தகன்மயாகமுதலைந்துமொன்றுக்கொன்றதிகமாஞ் ※
சிறந்தபலனும்போகவிதந்தருகைசெய்தபாவமெல்லா ※
மறைந்துதீவினைமாய்கைவருதலறுநவமெனவாமே ※
மிறந்தும்பிறந்துமிளையாதேயிருக்கையென்றுமிவையைந்தாம் ※

எ - து முற்கூறியகன்மயாகமுதலியஐவகையாகமுமொன்றுக்கொன்றுபலன்களதிகமாயிருக்கும், அஃதெவ்வாறெனில், கன்மயாகத்துக்குச்[illegible] தமுந்தபோயாகத்துக்குச்சிந்திதமனோரதசித்திகளுமந்திரயாகத்துக்குச்செய்கொடிய ன்மங்களுற்பவியாதுகெடுதலுந்தியானயாகத்துக்குச்சிவனைத்திருவடியுமே[illegible] டிவமுண்டாதலுஞ்ஞானயாகத்துக்குச்சனனமரணங்களையடைந்திளையாமையுமா[illegible]

ச்சியம்பெற்றிருக்கையுமெனக்கூறியவிவைகளைந்துமொன்றுக்கொன்றதிகபலன்களாம் எ - று

அஃதெங்ஙனமென்னிற்கன்மயாகத்தைப்பற்றத்தபோயாகம்பதின்மடங்கதிகமதனைப்பற்றமந்திரயாகம்பதின்மடங்கதிகமதனைப்பற்றத் தியானயாகநூறுமடங்கதிகமதனைப்பற்றஞானயாகமளவில்லாதபலத்தைக்கொடுக்குமாதலால், ஞானயாகமேவிசிட்டமெனவறிக. [அ]

மேனிறுத்தமுறையானேபரமயோகர்நிலையுணர்த்துகின்றார்

அஞ்சியாசைமுதலாயவவலபேதமனைத்தினையுந்
துஞ்சிப்பிறக்குந்தொழிற்கிளைத்துத்தோன்றாத் துணைவனடித்தாங்கும்
விஞ்சைக்குகையுள்வீற்றிருப்பார்பரமயோகவிரதியர்மெய்ந்
நெஞ்சத்திவரைநினைப்பாரைநிரந்தவினையுநீங்கிடுமே

எ - று காமக்குரோதமுதலியதுக்கபேதங்களனைத்தினுக்குநடுங்கியிறந்துபிறக்குந்தொழிலுக்குவருந்தியவைநீங்கும்வண்ணம், அபக்குவர்க்குத்தோன்றாத்துணைவனுனசிவனதுதிருவடியிலேநிலைபெறுதற்குக்காரணமானஞானமாகிறகுகையுள்வீற்றிருப்பார், மேலானயோகநிலைபெற்றதபோதனரிவர்திருமேனியையுள்ளத்தின்கணினைக்குமவரைத்தொடர்ந்தகன்மங்களும்விட்டுநீங்கும் - எ-று

வினையுமென்றவும்மையான்மாயைமுதலாயினவுமெனவறிக, செடிகொணோயின்னடையார்திறம்பார்வருநீமைபும்திருவாஞ்சியத்தடிகள்பாதமடைந்தாரடைந்தாரடியார்களே, எனவறிக [கூ]

மேலவரைவழிபாடுசெய்யில்வரும்பலனுணர்த்துகின்றார்.

புரிந்தார்பரமஞானிதனைப்பூசைநசையாற்புகழுறவே
பிரிந்தானுடலைப்பிரியாதேபெருமானுலகம்பெற்றிருப்பர்
நிரந்தகற்பசதநியுதநிகழுறவதன்பினெடுமால்வாழ்
பரந்தவுலகமதுபற்றியிருப்பர்விருப்பாற்பாங்குறவே

எ - று அன்பினாலேமேலானஞானிகளையருச்சனைசெய்தோர்பூமியின்கட்டமக்குக்கீர்த்திநிலைபெறஆனாற்றுன்னியவுடம்பினைநீங்கிச் சிவலோகத்தினையடைந்ததனைவிட்டுநீங்காமற்கோடிகற்பஞ்செல்லுமளவுமுறைவர்கள், ஆண்டுப்போகம்பொசித்துத்தொலைந்தவாறேநாராணன்வாழும்விரிந்தவுலகின்கணடைந்தன்பினாலேயவனதுசமீபமாகவாழ்வர் - எ-று [ய]

இதுவுமது

உறைந்தேபொருந்துலகத்துமோங் கும்போகமிகநுகர்ந்து *
பிறந்தேபுவியிற்பிறவாதேபெரியோனடியைப்பெறுதலுற்றுச் *
சிறந்தேயவனுஞ்சிவஞானயோகந்தெருட்டத்தெருண்டிட்டு *
மிறந்தேபிணையிலிறைவனுடனிரண்டற்றிருப்பரின்புறவே *

எ - து அங்ஙனம், நாரணனுலகத்திற்போகம்புசித்துத்தொலைந்தவாறேயா தனையல்லாதபிரமலோகம் பிரசாபதிலோகமிந்திரலோகங் கந்தருவலோகமியக்க லோகமிவையிற்றினுமடைவேவதிந்திருந்து அண்டாண்டங்களிற்போகபேதங்களைப் புசித்துத்தொலைந்தவாறேபூமியின்கணுத்தமசாதியிற்றோன்றி முன்விட்ட குறையினாலேயுள் ளம் வேறுபடாமற் பெரியஞானாசாரியனாதி குருவடிமையையடைந்து வழிபாடுசெய்துள்ளவவினைநதவாசாரியனுந்திருவுளமகிழ்ந்து சிவஞானயோகத்தையறி விக்கத்தாமறிந்து ஞானநிட்டையையடைந்து பின்பந்தத்தேகத்தைவிட்டுநீங்கின வாறேதனக்குநிகரில்லாதசிவனுடன்வேறறக் கலந்து சிவானந்தானுபவத்தையநுப வித்திருப்பார்கள். எ-று [௰௧]

ஞானநிட்டையையுடையோர்கள்விடையங்களிலொழுகினுமவையிற்றி லழுந்தாரென்றதன்றோ துசிறப்புணர்த்துகின்றார்

அமலனுருவமறிந்தார்கள்விடையபேதத்தடைந்தாலும் *
கமலத்தமருநீர்போலக்கலப்பநில்லைக்கருதுங்காற் *
றமலத்தினையுந்தடுப்பார்கள்சமைக்கபூசையவர்தமக்கே *
விமலனவனாவிடலின்றிச்செய்தார்சிறப்பைவிரும்புவனே *

எ - து நின்மலனாகியசிவனது சுபாவசொரூபத்தையுணர்ந்த ஞாதாக்கள் விடையவிதங்களைப்பொருந்தினாரேயாயினுமதனையாராயுமிடத்தவர்கள் தாமரையிலையிற் பொருந்தியநீரதிற்றோய்வின்றிநின்றதுபோல, அந்தவிடையங்களிலழுந்தார்கள், தமது, ஆணவமலமுதலியவற்றையும்போக்குவர்களாதலாலதசஞானவான்களுக் கேபூசைசெய்யக்கடவராஃதேதுகாரணத்தினாலெனின், மலரகிதனாகியசிவனாந்தச் சிவஞானிகளைவிட்டு நீங்காதவர்களிடமாகநின்று செய்பூசைசெய்த பூசைகளைத்தா னேவிரும்பியேற்றுக்கொள்ளுதலால் - எ று
அடைந்தாலுமென்னுமும்மையடையாமையைவிளக்கினதாகலின்-எதிர்மறை [௰௨]

பணியறநிற்றலாற்சிவஞானிகளிடத்துவினையேறாமைக்குத்திட்டா
ந்தமுமவரைப்புகழ்தலிகழ்தல்செய்தாரடையும்பலமுமுணர்த்துகின்றார்

மருந்தைச்சிறந்தமந்திரத்தைவல்லார்விடத்தைமாற்றிடினும் ※
வருந்தார்தமதுசெயன்மாளவரதன்பொருவில்வலியுணர்ந்தார் ※
பொருந்தார்பாவபுண்ணியங்கள்புரிந்தேயிவரைப்புகழ்ந்தாரும் ※
பிரிந்தேயிகழ்ந்துபேசுநருமிவர்தம்வினையைப்பெறுவாரே ※

எ - து அவுடதத்தையுமேலானமந்திரத்தையும்வல்லபேர்கள், நஞ்சினைப பொசித்தாராயினுமதனால்வருத்தமுறாததுபோலவொப்பில் லாதசிவனுடையஞானத்தையுணர்ந்தசிவஞானிகளும், எல்லாம், சிவன்செயலென்று, தம்செயன்மாண்டிருக்கையினாலேயவர்கள் புண்ணியபாவங்களைச்செய்துமதனால்வருஞ்சுகதுக்கத்தையடையார்களந்தச்சிவஞானிகளைப்புகழ்ந்தபேரும் வேறுபட்டிகழ்ந்தபேருமாகியவிவர்கள்தமக்குரியவினைப்பயன்களைப்பெறுவர் எ-று [௰௩]

ஓத்துப்புறனடைமுதலியவைந்தினுள்முற்கூறியசெய்யுளைக்குறித்து
ச்சூத்திரப்புறனடையுணர்த்துகின்றார்.

பன்னுறும்பரமசிவஞானிபாவவிதமும்பயிற்றிடினு ※
ந்துன்னான்பலமெனப்பனுவலுரைக்குமதனாலொருதலையே ※
நண்ணேந்துயரமெனப்பெரியோர்நவையுமியற்றினசையாலே ※
மன்னுறுபவவாசனையைமாற்றிவிடவேவல்லாரார் ※

எ - து மேலானசிவஞானிபாவபேதங்களைச்செய்யானதுசெய்யினுமந்தத்தீவினைப்பயன்களையனுபவியானென்று திவ்வியாகமங்கள்சொல்லுமாகையினாலே சிவஞானியானவன்பாவவிதஞ்செய்யாமையுஞ்செய்யினஃதுண்ணாமையுநிச்சயம், அந்தச்சிவஞானிகளானோர்நாம்துயரத்தைப்பொருந்துவதில்லையேயெனக்கருதித் தமதுமனவிருப்பினாலேகாமாதிகுற்றங்களைச் செய்யினதனாலேயவர்க்குத்தீவினையெய்தாதாயினும் பூமியின்கணிறையும்பொல்லாதவசைதோன்றுமதனைப் புறங்கூறுதுமாற்றுதற்குவல்லார்யாவர் எ - று - ஏகாரம்தேற்றம்.
இயற்றினவெனவேயியற்றாமைவிளக்கிற்று [௰௪]

ஞானநிட்டையையுடையோரதனைவிட்டுக்கிரியைகளையனுட்
டிக்கிலவர்பதத்திரயத்தையறிந்தவரல்லவென்றுணர்த்துகின்றார்.

எய்தற்கரியபரம்பரனையிசைந்தார்கருமத்திசையார்கள் ✲
செய்யிற்கருமஞ்சிறந்தபொருள்செறிந்தாரல்லர்செழுங்கனிதங் ✲
கையிற்புகலுங்கனிந்தவலக்காயைங்கவரக்கருதினோரார் ✲
வையத்தொளிகொண்மணியகற்றிவருவாருஞ்சிலையாமதியுடையோர் ✲

எ - று யாவராலும்பொருந்துதற்கரியசிவனைக்கூடிமோக்ஷமுறுவோர்கிரியையினைச்செய்யார்களதனை யனுட்டித்தாராயின்மேலானபொருளான சிவத்துடன்கூடிநிட்டையையடைந்தவராகார்ஞானயோகிகள்கியத்தமூந்துமதனைக்கிரியையுங்கழித்தாரோவெனின்யாதாமொருவர்தங்கையின்கட்கொழுவியவாழைமுதலியவற்றின்கனிகளெய்தினலதனைநுகராதுவிடுத்துச்சுவையில்லாதகாயினைக்கைக்கொண்டுநுகரவிரும்பினர்யாவரஃதன்றிவையத்தின்கண்ணொளிபொருந்தியபதுமராகமுதலியரத்னங்கள்வந்தெய்திலவையிற்றினைக்கைக்கொள்ளாதுவிடுத்துப்புல்லியகல்லினைகைக்கொண்டுமகிழ்வோர்யாவர் எ - று கனிபெற்றோர்காய்விரும்பாததன்மைபோலவுமணிபெற்றோர் சிலைவிரும்பாததன்மைபோலவு ஞானம்பெற்றோர்கிரியைவிரும்பாரெனக்கொள்க. [௰௫]

மோக்ஷத்தைப்பெறவேண்டினர்க்குக்காமாதிகுற்றங்களறு
கொணுதென்பதுணர்த்துகின்றார்

ஆசைமுதலாமாசனைத்துமறுத்தோடலும்வெறுத்தரிய ✲
தேசன்சிவன்பொற்பாதமலர்செறிந்தார்பிறப்பையறுத்தார்கள் ✲
பேசற்கரியபெருமையினைப்பெற்றாரல்லார்கற்றாலும் ✲
மாசுமலிந்தவாசையினான்மயங்கித்துயருமாளிடரோ ✲

எ - று காமமுதலியகுற்றமனைத்தினையுங்கெடுத்துயாக்கையும்வெறுத்துப்பிறராலறிதற்கரியஞானப்பிரகாசனானசிவனதுபொன்போன்றதிருவடிமலர்களைப்பற்றினவர்களேசெனனமரணத்தையொழிந்தோர்களாங்ஙனஞ்செய்யாதமுக்குணமிக்கவிராகத்தினாலேயுள்ளமயங்கிவருந்துநரானவர்கள்பெருநூல்களைக்கற்றாராயினுஞ்சொல்லுதற்கரியபிறவியறுதலைப்பெறார் எ - று

பிறவியறுதலேபெருமைதருவதாகலினதனைப்பெருமையென்றுபசரித்துக்கூறினர் [௰௬]

சருவவியாபியாயிருக்கிறசிவன்பக்குவான்மாக்களாற்கல்லதறிய
ப்படானென்றுணர்த்துகின்றார்

காணார் மலத்தார்கண்ணிழந்தார்கலந்தேயெங்குநிறைந்தானைச் *
சேணாரிரவிதனைக்காணார்சிறந்தவிழியையிழந்தாருங் *
கோணாநினையும்படியானைக்கொண்டானடியைக்கண்டார்கண் *
மாணாமூலமலவலியைமாய்த் தாரவன்றன்வலியாலே *

எ-து கட்புலனையிழந்துநிற்குமவர்களாகாசத்தின்கணின்றெங்கும் பரம்புமாதித்தியனைக் காணமாட்டாதவாறு போலவாணவமலத் திருலேயறிவாகியகண்ணினையிழந்தோர்களெங்குங்கலந்துநிறைந்துநிற்கிறசிவனைக்காணமாட்டாராயினிப்படிக்காணப்படாதசிவனைக்கண்டவர்யாவரெனிலந்தச்சிவனதுசத்தியிருலேதம்மைமறைத்திருக்கும்பொல்லாதமூலமலமாகியவாணவமலசத்தியைக்கெடுத்துஞானக்கண்பெற்றோர்யாவர்சிலரவர்களேவளைந்தாகாசத்தையாபரணமாப் பூண்டசிவனதுதிருவடியைக்கண்டவர்கள் எ-று [௰எ]

அந்தச்சிவஞானிகள் எந்தக்காலமுஞேயத்தைவிட்டுநீங்கார்களென்பதுணர்த்துகின்றார்

வானமதனைநீங்காதுவாயுவிளைந்துமதனைப்போல் *
ஞானமயனைநீங்கார்கண்ஞானத்தவருநடுக்கத்துந் *
தேனின்மொழியாரிணைத்தோளைத்திளைக்கும்பொழுதுஞ்சினஞ்செறிய *
வூனத்தினரையுவர்த்தொறுக்கும்பொழுதும்யாதாமொருபொழுதும் *

எ-து வாயுவானதெங்குமோடியுந்தனக்காதாரமானவாகாசத் தைவிட்டுநீங்காது. அதுபோலச்சிவஞானிகளுந்தமக்கச்சமுண்டானகாலத்துந்தேன்போலுஞ்சொல்லினையுடையமடவார்திரண்டதோளிணையைக்கலந்தனுபவிக்கும் பொழுதுங்கோபமேலிடத்தமக்குக்குற்றஞ்செய்தோரைவெறுத்துத்தண்டிக்கும்பொழுதமற்றுமுள்ளகாலத்தும்ஞானசொரூபியாயிருக்கிறசிவனைவிட்டுநீங்கார்கள் எ-று [௰அ]

சிவஞானிகண்முதலாயினோர்க்குச்சிவன்றோன்றிநிற்குமுறையுணர்த்துகின்றார்

துயக்கந்துடைத்தஞானிகட்குத்தோன்றுமெங்குந்துகளில்லான் *
மயக்கமறுத்தயோகர்க்குமருவுமிதையமலர்மீதே *
பயக்கும்பலத்தைப்பாவகனிற்பார்ப்பார்தமக்குப்பாங்குறவே *
நயக்குமுருவின்மற்றையவர்நாடவுறைவனடோறும் *

எ - து நின்மலஞானசிவன்விடையங்களிலேயறிவுவேறுபடுத்தன்மையை யொழித்தஞானவான்களுக்கெவ்விடத்துந்தோன்றிநிற்பன் அஞ்ஞானத்தைக்கெடு த்தயோகநிலையுடையோர்க் கவருடையவிதையகமலத்துற்றோன்றுவன் அந்தணர்க்கு க்காருகபத்தியமாகவனீயந்தெக் கணைக்கினியமெனக்கூறியமுத்தீமாகியவனல்க ளிற்றோன்றியவர்விரும்பியபலத்தைக்கொடுப்பன் மற்றுமுள்ளவான்மாக்களெல்லா ளுந்தெரிசித் தற்குச்சிவலிங்கமுதலியவாயத்திருவுருக்களிலேயமர்ந்தருளியிருப் பன் எ று [௰௯]

ஞானநிலையுயர்புங்கன்மநிலையிழிபுமுணர்த்துகின்றார்.

ஒளியபதுமராகங்கையுடையார்க்குவகையாலதுண்டோ *
தெளியயோகசித்தர்க்குஞ்சிறப்பேபலதுசெலலுண்டோ *
புளியசிலையைப்பொறுத்தார்க்குப்பொருளோசிறிதுதுயர்பெரிது *
நெளிவுபெரிதுபலஞ்சிறிதுநிரந்தகருமநிலையார்க்கே *

எ து ஒளியினையுடையமாணிக்கத்தைக்கைக்கொண்டார்க்குமகிழ்ச்சியன் றித்துயருளதோ, வதுபோலத் தெளிவினையுடைய ஞானயோகஞ்சித் தித்தோர்க் குமின்பமேயன்றித் துன்பமுளதோ,புல்லியகற்சிலையைச் சுமையுடையவம் மிகச்சுமை யவற்றைச்சுமந்தோர்க்குவிலையாலெய்தும்பொருளோஅற்பம்அதனைச்சுமக்குந்து யரமோமிகுதியாயிருக்குமதுபோலப்பூசைசெய்கிரியான மெனப்படுங்கன்மநிலை யினிற்போர்க்குப்பெறும்பலமற்பம்அடையுந்துயரம்பெரியது எ று

உண்டோ எ-று இல்லையெனவிளக்கிநின் றமையாலெதிர்மறை செல்லலென் பதுசெலலெனவிகாரமாயிற்று புல்லியவென் பதுபுளியவெனலகாரம் ளகாரமாயி ற்று சித்தர் என்றது ஞானவான்களெனக்கொள்க [௨௰]

மேலந்தஞானவான்களமர்ந்தருளியிருக்குமேன்மையின்விசே
டமுணர்த்துகின்றார்

சிறந்தபரமசிவனுருவந்தெருண்டபரமசிவஞானி *
யுறைந்தவெல்லைவிற்கோடியளவும்பாவமொழிந்துவிடு *
நிறைந்தகங்கைநிகழிடத்துணிக்குமபுதமாறளவு *
மறைந்தவளவினருத்தத்துளகலும்பாவமரன்புரிக்கே *

எ - து சிறப்பினையுடையபரமசிவனதுசொரூபத்தை யுணர்ந்த மேலானசிவ ஞானியானவனெழுந் தருளியிருக்குமேல் லக்ஷக்கோடிவிற்கிடையளவும் நீரால் நிறைந்த கங்கைநதிவிளங்குமெல்லைக்கறுபதினாயிரம் விற்கிடையளவுஞ்சிவாலயத் தெல்லைக்கு முப்பதினாயிரம்விற்கிடையளவும்பாவமெய்தாதகலும் எ-று [உக]

சிவஞானிகள்விசிட்டமுணர்த்துகின்றார்.

நீடும்பொருளொன்றுண்டெனவேநெஞ்சமதனுணிச்சயித்தார் ※
ஆடும்புதகமாதீர்த்தமவனிதலத்திலனைவர்க்குங் ※
கூடுமெல்லைசிவபூமிகொடியவினைகள்கெடநினைவார் ※
தேடியவரையருச்சிக்கசிந்தைசெய்கசிறப்புறவே ※

எ - து நிலைபெற்றுநிற்கும் பதியென்னும்பொருளொன்றுண்டென்றேயுளந் தினகணிச் சயித்தபெரியோர் களாடும்புனல்பூமியிலுள்ளோர்யாவர்க்குங்கங்கைமு தலியபெரியதீர்த்தங்களாமன்னோர்பொருந்துமெல்லையேசிவத்தலமாம்,கொடுமை யாகியபாவங்கணீங் கவெண்ணுவோரந் தஞானவான்களைத் தேடிநன்குகப்பூசிக்க வுமவர்கள்திருவுருக்களைத்தியானம்பண்ணவுங்கடவர் எ-று

ஞானந்திரைலோக்கியதுல்லபமென்பதாற்றேடியவரையருச்சிக்கவெனச்சிற ப்பித்தார் [உ௰உ]

ஒருபாயசிட்டையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அகத்திற்புரிவாரருச்சனையையரியபலத்தையடைந்திடுவர் ※
சகத்திற்புரிவார்சங்கரனைச்சார்வரதனிற்றணியபல ※
மகத்துளேவல்புரிவார்க்குமதிகபலமேயனையன்பாற் ※
சகத்தினேவல்புரிவார்க்குமதனிற்சிறுமைசார்ந்திடுமே ※

எ - து வேந்தனதுமனையகத்தின்கண்ணே வல்செய்யுமவர்களுக்கவ்வேந்த னிடத்திலேநின்றுமதிகமானபலன்களெய்துமதற்குப்புறத்திலேயேவல்செய்வோர் க்கதற்குக்கிழாயபயனெய்துமதுபோலச்சிவனைத்தம்மிதையத்தினுள்ளேயருச்சனை செய்வோர்மேலாயபலத் தினை ப்பெறுவர்கள்புறம்பேயருச்சனைசெய்யுமவரதிற்கு ழ்ந் தபலத்னையடைவர்கள் எ-று [உ௩]

பாரியாரும்பரிலாதபக்கமனையுட்பத்தாவைச் ※
சேரவவனுமவடனக்குச்சித்தக்களிப்புஞ்செய்திடுவ ※
னோரிலானைநின்மலனைநெஞ்சுணினைக்கிலவர்க்கவனும் ※

எ - து யாவராகிலுஞ்சிவஞானத்தைப்பெறல்வேண்டுமென்றுவிரும்பினவர்கள், சிவலோகத்திற்சென்றங்குள்ளபோகபேதங்களைப் பொசித்துமுடிந்தவாறே பூமியின்கண்வந்துசெனித்துத்துன்பங்கள்கெடும்படிபுல் லியயாக்கையினைவெறுத்துக்களைகளுகிய சிவனைத்தமதுஞானக்கண்ணாலேதெரிசித்துஞானத் துக்கும்வித்தாயிருக்கிறசிவனதுதிருவடித்தாமரையைவேறறக்கலந்திருப்பர் — எ று

விச்சை - எ-து - ஞானம் விச்சு - எ-து - வித்து [உசு]

அந்தஞானவேட்கைமூவிதமென்றுமவற்றாற்பெறும்பயனிவையென்றுமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

ஆசைதானுமூன்றுவிதமறிபிலவையுங்கனிட்டாந்தம் *
பேசுங்கனிட்டவாதரவுபெற்றார்மூன்றுபிறப்படைந்து *
தேசார்ஞானயோகத்தைச்செறிவர்பரமதேசிகனாற் *
பாசம்பிரியப்பரமானவின்பவெள்ளம்பருகுவரோ *

எ - து அந்தவாசையாராயுமிடத்துஉத்தமம்மத்திமங்கனிட்டமெனமூன்றுவிதப்படும் அதிற்பிற்கனிட்டவாதரவுபெற்றோர்மூன் றுசெனனம்பிறந்துமூன்றுவதுசெனனத்திலேபரமகுருவினருளினாலேயாணவமுதலியபாசங்களொழிந்தவொளிபரம்பியஞானயோகத்தைப்பெற்றுமேலானவானந்தவெள்ளத்தினையனுபவிப்பர் - எ று - தான் - எ ந - அசை [உஎ]

உடையாரிடைமேவுமுளத்தமலனுலகமதனையுகப்புறவே *
யடைவாரவனிதலத்திரண்டுபிறப்புமவலவுடலாசை *
விடுவார்பரமசிவகுருவினினிலைத்தகருணைவெள்ளத்திற் *
படிவார்பரமசிவன்பாதம்பரிப்பார்பசுநோயகிப்பாரே *

எ - து சிவஞானத்திலேமத்திமமானவாதரவு உள்ளத்தின்கணுடையோர் மேன்மையுண்டாகச்சிவலோகத்தின்கணடைந்து பின்பு பூமியின்கணிரண்டுசெனனம்பிறந்திரண்டாவதுசெனனத்திலேதுக்கமான தேகவிருப்பினைவிட்டுப்பரமசிவஞானியானவாசாரியன்வைத்தகிருபைக்கடலிலேபடிந்து மேலான சிவனதுதிருவடிகளைத்தமதுள்ளத்தின்கட்டரித்தாணவநோயை நீக்கி முத்தியடைவர் எ று
வேண் விருப்பு [உஅ]

பெற்றார்பெரியவாதரவு பெருமானுலகமதுபெற்றே *

மற்றோருடலமண் ணுலகிலவாய்க்கமனத்தின்மயக்கிலையா *
மற்றேயலவொளிவெளியையறிந்தேபிறிந்தேயவ்வுடலம் *
பெற்றேபிரியாப்பெரும்பொருளைப் பிரியாரழியாப்பேரின்பம் *

எ - து சிவஞானத்திலே யுத்தமமான வாதரவுபெற்றோர் சிவலோகத்தை யடைந்துமீண்டுபூமியின்கட்பிறிதொருசரீரமெடுத்தங்ஙன மெடுத்தவச்சரீரத்திலே தானேயுள்ளத்தில்விருப்புவெறுப்பினையுமொழித்துநின்மலமானஞானவெளியினை யுணர்ந்துபின்னரந்தச்சரீரத்தையுநீங்கித்தன்னைநீங்காது நிறைந்துநிற்கும்பரமசிவத்தினைப்பெற்றழியாதபேரானந்தத்தைநீங்காதனுபவிப்பர் எ - று [௧௯]

வேறு

என்றுகருமாநியமகத்திறமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைமையா *
நின்றமுனியன்றுணரநிற்குமவினைந்தே *

எ - து வெளி [௨௰]

வேறு

காமுறுவாரையுங்கண்ணினனே காமனைக்காய்தழற்கண்ணினனே *
நாமமுமாயிரம்பெற்றவனே நான்முகன்றன்னையும்பெற்றவனே *
யேமமுமென்றனக்கானவனே யேனமுமெய்பிலைக்கானவனே *
தேமொழியாளொருபாலினனே சிறுவனுக்கன்றருள்பாலினனே *

எ - து தன்னைவிரும்புமவரையுமடிமைக்கொண்டருளுதற்குக் கருதினோனே. காமனையெரித்தநெருப்புக்கண்ணையுடையோனே. ஆயிரந்திருநாமத்தைப்பொருந்தினோனே, நாலுமுகத்தையுடையபிரமாவையுஞ்சிருட்டித்தவனே, யெனக்கின்பமுமாயிருப்போனே, பன்றியையுமெய்யாநின்றவில்லையுடையவேடனாயினோனே தேன்போலுமொழியினையுடையவுமையாளையொருபாகத்திலுடையோனே, சிறிய குழந்தையானவுபமன்னியபகவானுக்குமுன் னூட்டிக்கொடுத்ததிருப்பாற்கடலையுடையோனே எ-று -

காமுறுவாரையுமென்றவும்மை: யுள்ளபடியுணர்வோரையேயன்றி யென்பது, அவாய்நிற்றலினெச்சவும்மை, நாமமுமென் னுமும்மைமுற்றும்மை, நான்முகன்றன்னையுமென் னுமும்மை நாரணனையுமெனவெச்சந்தழீஇயது, ஏமமுமென்

கமலத்தான் முகன்முதலோமாதவன்கருதொணாமலங்களைவாமே ✽

எ - து ஒருவராலுஞ் செயற்கரிய தவத்தினையுடைய விருடிகளாமாதிருந்தியான்
முதலிய முப்பத்துமுக்கோடிதேவர்களுந் தம்முடைய வாணவமலத்தாலறிவழி
யாமைமுதலியநீங்கும்வண்ணநின்றுமலமில்லாதவனே யகமலசத்தியைக்கெடுக்
கும்வலியையுடையவனே யாறுமுகத்தையுடையவனே குகனே ருமகளோமணஞ்
செய்துகானகத்திருப்பவனேநீயே புகலிடமெய்ம்மைக்காப்பாயாகவென்றாதுக்கு
ச்சோத்திரத்தைக்கைக்கொள்ளு மமலனுமாய் வைத்தியனுமுதல்வனுமாயிருக்கிற
சண்முகனுடையதிருவடிமலரைப்பணிந்தெல்லா ப்பொருளையுமறிந்தோனாகிய
யதாமரைத்தவிசினையுடையநான்முகனுக்குப்புத்திரனுமாயிருக்கிற வசத்தியமாமு
னிவனதருளினாலேமலமாயாகன்மங் களைப்போக்குவாம் எ - று

மலமோகமுமென் றவும்மையால் மதமுதலியஆணவகாரியம் ஆ - று
மெனவறிக [௯௪]

மூன்றாவது ஐவகையாகவியலுரை முற்றும்.



## நான்காவதுபலவிசிட்டகாரணவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின்முற்கூறிய கன்மயாகாரப்பலன்களதுக்கமா
தற்குக்காரணமானதேசகாலமுதலியவற்றையுணர்த்தினமையாற் பலவிசிட்டகார
ணவியலென்னும்பெயர்த்து இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின்பொதுவம
யானவறத்தினைச்சொல்வான்றுடங்கியகத்தியனை ச்சுப்புன்விளித்துக்கூறுகின்றது

பிறப்பிலிபேதமில்லிபேறுவார்தம்மையென்று ✽
மறப்பிலிமலர்த்தாண் மன்னுமனத் துறவுறவோனைத்துச் ✽
சிறப்புறுதேசமாதிசெப்புவன் முனிவநேர்க ✽
வறத்தினைப்புரிந்தார்க்காகவரும்பயனதிகமாகும் ✽

எ - து வாராய்முனிவரனே தனக்குற்பத்தியில்லாதவனுயெவற்றிலுமன்னியமின்
றியிருப்பானுய்த்தன்னைவிரும்புமடியவரை யெக்காலுமறப்பில்லாதவனாயிருக்கிறவ
னது தாமரைமலர்போன் றதிருவடிகளைமனத்தின்கணிலைபெறவிருத்தியுத்தமமா
னதேசமுதலியவற்றையுனக்குச்சொல்லாநின்றோம், அதனையறிவாயாகவதன்வ
ழியறஞ்செய்வோர்க்குண்டாம்பயனிவ்வுலகத்தின் கண்ணன்றிச்சுவர்க்கத்தின்கண்

னுமதிகமாகப்பலிக்கும் எ று [க]

மேனிறுத்தமுறையானேதொகுத்தவற்றைத்தலைதடுமாற்றமென்னு
ந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

சிறந்தநற்றேசந்தன்னிற்றேடருங் காலங்கூட *
மறந்திடாவிதியிற்றேலேவாய்த்தவாதரவுகூர *
வறந்தனையறிந்தவாய்மைப்பாத்திரமாவானங்கைச் *
செறிந்திடச்செய்தவற்பமுலகினும்பெருகுந்திண்ணம் *

எ-து உத்தமமாகியகாசிமுதலாகிய புண்ணியதலங்களிலேதேடுதற்கரிதாகி யகிரகணமுதலியபுண்ணியகாலங்கள்பொருந்தவழுவாதவிதியினோடு பொருந்தின வாதரவுபெருக அறமுதலியவற்றையுணர்ந்தசற்பாத்திரமான வன்கையிற்பொருந் தும்வண்ணமுபகரித்தபொருள் சிறிதேயாயினுமஃதுலகினும்பெரிதாமிதுசத்தியம்
எ-று அவ்வுருபை ஒடுவாகக்கொள்க. [உ]

முன்னைச்செய்யுளிற்றொகுத்துக்கூறினாரிச்செய்யுளிலதன்பயன்சிற
ப்பித்துணர்த்துகின்றார்

ஓங்கியவதனைச்செய்தவுத்தமர்சிவலோகத்துட் *
டாங்கியேபோகபேதம்பிறழாயசமையந்தன்னி *
னீங்கரும்பொருளைக்கண்டுநிறைபுறவொருமைநேரத் *
தூங்குவரின்பந்தோன்றத்துகண்மலஞ்சோருமன்றே *

எ-து பயனுலுயர்ந்தஅந்தஅற்பமாயின நன்மையை ஞானவான்கள்பாற்செ ய்தபெரியோர்கள்சிவலோகத்திற்சென்றாங்குள்ள போகவிதங்களையெய்திப்பின் னர்ச்சங்காரகாலந்திற் பொல்லாதமலத்தை நீங்கித்தம்மைவிட்டு நீங்காதசிவத் தைத்தெரிசித்துக்கடல் அலையற்றடங்கினாற் போலவுள்ளத்தின்கண்ணமைவுபிறக் க ஐக்கியபாவத்துடனானந்தானுபவமுண்டாகநிலைபெற்றிருப்பர்கள் எ-று [ங]

ஐவகையாகத்தோர்க்குதவும்பலத்துக்குக்காலவரையறையுணர்த்து
கின்றார்

கருமிகட்கீகைநிற்குங்கலந்தொருபிறப்பிற்கற்ற *
பெரியராந்தவத்தோர்க்கீகைபிறப்பொருநூறுநிற்கும் *
மரியமந்திரத்தார்க்கீகையாயிரம்பிறப்புநிற்கு *

முரியயோகிக்குஞானிக்கூழிபேரூழிக்கும் ※

எ - து கன்மயாகமுதலியஐவகையாகத்தோர்க்குங்கொடுக்கப்படு, அடைவே ஒருசெனனம், நூறுசெனனம், ஆயிரஞ்செனனம், பிரமகற்பம், மகாசங்கார மானகாலமளவும், நின்றுபோகவிதங்களைக்கொடுக்குமென்றவாறு - யோகிக்கூழியெனவும், ஞானிக்குப்பேரூழியெனவும், பதமாற்றுக, போகவிதமென்பது, எஞ்சிற்று [௪]

தேசமுதலியவற்றிற்றானமுதலியகன்மங்கள்செய்யினதற்குபலந் தருமென்பதுணர்த்துகின்றார்.

திருவேலையெழுவாயானகாரணஞ்சிறக்கவிகை ※
யெரியினையோம்பலீசற்காலயமியற்றலென்றும் ※
பரிவுறப்பூசைபண்ணலெனுமிவைநான்கும்பாங்கார் ※
தருமமேயிவற்றால்வேண்டும்பலமெலாந்தழைத்துச்சாரும் ※

எ - து புண்ணியதேசமுதலாகக் காலமுஞ்சிறக்கையும், பாத்திரமுமான பலவிசிட்டகாரணங்கள்சிறப்போடுபொருந்தவவ்விடங்களிற் றானஞ்செய்தலும், அக்கினிகாரியஞ்செய்தலுஞ், சிவனுக்காலயமுண்டாக்கலுமெக்காலமுமன்புடனே பொருந்தவருச்சனைசெய்தலுமென்னுமித்தொழில்களுநான்குஞ்சிவபுண்ணியங்களுட்டலைமையாம், இதனாற்றாம்வேண்டியபோகங்களெல்லாமிகவுமுண்டாம் - எ று [௫]

சற்பாத்திரவிசிட்டமுணர்த்துகின்றார்.

பாத்திரமாவான்பாவப்படுகடற்பட்டார்தம்மைத் ※
தீர்த்தமலேசன்வாழும்புரமெனுந்தீரஞ்சேர்ப்பான் ※
கூர்த்தமெய்ஞ்ஞானமென்னுங்கரத்தினைக்கொடுத்தோமற்றுத் ※
தீர்த்திடவல்லார்கைதானில்லவர்க்குண்டோசெய்கை ※

எ - து சற்பாத்திரமானவன், பாவமாகியவிடப்படுகடலின்முழுகுவோர்க்குச்சத்தியஞானமாகிறகையினைக்கொடுத்துப்பாவப்படுகடலினையொழித்து மலமில்லாதசிவன்வாழுஞ்சிவலோகமென்னுங்கரையையடைவிப்பன், ஞானக்கையுடையோனன்றிப்பாவப்படுகடலையொழித்தெடுத்தற்குமற்றையோர்யார்தான்வல்லார், பிறருமெடுக்கவல்லர்காணுமென்னிற்கையிலாதார்க்குத்தொழிலுளதோ, அதுபோலச்சற்பாத்திரமல்லாதவன், பாவப்படுகடலினின்றுமெடுக்கமாட்டான் எ று - தமக்கு - எ து - தம்மையெனவுருபுமயங்கிற்று. [௬]

ஆன்மாக்களைஞானவான்களேகரையேற்றுவரவொழிந்துஅஞ்ஞானிகள்கரையேற்றமாட்டாரென்பதுணர்த்துகின்றார்

அலைபுனலதனுளாழ்ந்தசிலைமரப்புணையாலன்றிச் ✻
சிலையினாற்றிரந்தன்னைச்சேர்வதூஉமில்லைத்தேரிற் ✻
றொலைவிலாப்பாவப்பௌவச்சுழியிடைச்சுழல்வார்தம்மை ✻
நிலைமையாரன்றித்தீயார்நீக்கிவான்கரையினீட்டார் ✻

எ - து அலையெறியாநின்றபெருநீரினுள்வீழ்ந்தமிழ்ந்தினகல்லானதைக்கரையேற்றவிசாரிக்கின் மரத்தாற்கட்டியதெப்பத்தினாலன்றிக்கல் லின்றயதெப்பத்தினாலாகாதவாறுபோலத்தொலையாதபாவக்கடலிற்சுழியாகியசெனனமரணங் களிற்சுழலுமான்மாக்களைச் சற்பாத்திரமாகியஞானவான்களே, கரையேற்றுவரன்றியசற்பாத்திரமானோர் அக்கடலினின்றுஞ்சுவர்க்கமாகியகரையினேற்றமாட்டார் எ - று

முற்கூறியஞானக்கையென்பதற்கேற்கநீட்டற்றொழில்கொடுத்தாரென்க [எ]

பாத்திரமென்னுஞ்சொல்லுக்குப்பொருளுணர்த்துகின்றார்.

பாவெனும்பதத்தினார்த்தம்பாவமென்கடலிற்பட்டார் ✻
தேவனற்பதமென்றிரத்திருத்துவான்றிரத்தினார்த்தம் ✻
பாவமென்கடற்பட்டாரைப்பரமர்தம்பதமென்பாரத் ✻
தேவியேயிருத்துவானேபாத்திரமென்னப்பட்டான் ✻

எ - து பாவென்னும்பதத்தின்பொருள், பாவமாகியகடலினமிழ்ந்திரென்றொன்றும், திரமென்னும்பதத்தின்பொருள், சிவனதுநல்லதிருவடிமலராகியகரையிலிருத்துவனென்றும், ஆகையாலேபாவமாகியகடலின்கண்விழுந்தோரை, மேலானசிவனதுநல்லதிருவடிமலராகிறகரையிற்பொருந்தும்வண்ணஞ்செலுத்தியிருத்துமவனேபாத்திரமென்றுசொல்லப்பட்டான் - எ று - [அ]

அந்தச்சற்பாத்திரமாயுள்ளோர்க்குப்பிச்சையிட்டார்பெறும்பயனுணர்த்துகின்றார்.

அருமறையாய்ந்தகோடியந்தணர்க்கருத்தவாய்த்த ✻
தருமமுஞ்சிறிதேயென்னத்தழைந்திடுந்தம்மையோர்ந்த ✻
வொருமையயோகர்தங்கையுதவியபிச்சையுள்ளுன் ✻

பிரியவேபெறுவரின்பம்பிச்சையைப்பெறுவித்தாரே *

எ - து நாலுவேதங்களையுமாராய்ந்தகோடிபிராமணர்க்கறுசுவையோடுபொசிப்பித்தபுண்ணியமுமற்பமென்னும்வண்ணமான்மசொரூபத்தைத்தெரிசித்தவொருப்பாட்டினையுடையசிவயோகிகளு க்கிட்டவொருபிடிபிச்சையானது, பெருஞ்சதிகமாம், ஆதலாலவர்க்குப்பிச்சையைப்பெறும்வண்ணமிட்டோருட் குற்றமாகியவாணவாதிகளைநீங்கிப்பேரின்பத்தைப்பெறுவர் - எ.று [௬]

சிவயோகிகளையமுதுசெய்வித்ததுசிவனுக்காமென்பதுணர்த்துகின்றார்

அருத்துகவமலன்றன்னையகத்துணர்ந்தவரையன்னங் *
கருத்திருந்தவர்க்குச்செய்தபூசனைகடவுள்கொள்வ *
னொருத்தனுக்குபசாரங்களுடலிடையுலகர்செய்வர் *
பிரித்துடலுயிரைப்பேணும்பெற்றியையாரேபெற்றார் *

எ - து நின்மலனாகிய சிவனையுள்ளுயிராக த்தம்முள்ளத்தின்கணுணர்ந்த சிவயோகிகளுக்கன்னத்தையருத்துவிக்கக்கடவன ங்ஙனமவர்க்குச்செய்த பூசையைச்சிவன்அவர்களுள்ளத்தின் கணிருந்துகொண்டருளுவன் அஃதெங்ஙனமெனின் இவ்வுலகத்தினுள்ளோர் யாதாமொருவனுக்குச்சந்தனமலர்முதலியவுபசாரங்களையவனதுசரீரத்தின்கட் செய்பவேயவனுயிர்க்குச்செய்ததாம் அதுபோலச்சிவயோகிகளுக்குச்செய்ததுசிவனுக்காம் உடலின்கட்செய்வதொழிந்துயிரின்கட்செய்யாரோவென்னினுலகத்திலேயெவர்தாமுடம்பினைநீக்கியுயிரைக்கண்டுபசரிக்குமுறைமைபெற்றவர் எ - று [௭]

மேலவர்களுக்குப்பிதிர்திவசங்களிலேயருத்துவித்தோரடையும்
பலமுணர்த்துகின்றார்

விடுத்துலகமலன்றன்னைவிரும்பியவிதுலர்க்கன்னங் *
கொடுத்தவரன்புகூரப்பிதிர்க்களைக்குறித்துநாளி *
லெடுத்தெழுமூன்றுசுற்றநிரயக்கிடந்திளையாதென்று *
நடத்தொழினம்பனுட்டிவிருத்தியேயிருப்பர்நம்பால் *

எ - து பிதிர்க்களைநோக்கிய திவசங்களிலேயுலகவாஞ்சையை யொழித்துநின்மலனாகியசிவனைவிரும்பிய வொப்பில்லாததபோதனர்க்கன்புபெருகவமுதுசெ

ய்வித்தோர்தம்முடைய விருபத்தொருசுற்றத்தையுநரகத்தின்கட்கிடந்துவருந்தா மலெடுத்தெக்காலமுந்திருநடத்தொழிலினையுடைய சிவன் வாழுஞ்சிவலோகத்தின்கணிருத்தித்தாமும்விருப்பத்தினாலேசிவசமீபத்திலே யிருப்பரென்றவாறு விதுலம். ஒப்பின்மை நம்பு விருப்பு [௰௧]

அவர்களுக்கிட்டபிச்சையினதுவிசிட்டமுணர்த்துகின்றார்

தம்மனையடைந்தயோகர்தமதடி பணிந்துதாமு *
மெம்மையேயாளுமீசனிவனென விட்ட பிச்சை *
வெம்மையநரகந்தன்னில்வீழ்ந்ததங்குலத்தைமீட்டு *
மெய்ம்மையேசிவலோகத்துளிருத்திடும்வியப் பென்வோறே *

எ து யாதாமொருவர்தம்முடைய மனையின்கணெழுந்தருளிய சிவயோகிகளதுதிருவடிமலர்களை த்தாமுமெதிர்சென்று வணங்கி யெம்மையடிமைகொண்டருளுஞ்சிவனிவரோயென்றிட்டபிச்சை யானது கொடியநரகத்திலேவீழ்ந்த தம்முடையகுலத்துள்ளோரையெல்லாமதனினின்று மீளச்செய்துசிவலோகத்தின்கண் வைக்கும் இதுசத்தியம் வேறுவியந்து கூறுவதென்னையென்றவாறு, தாமுமென்றவும்மையாற்றம்மைந்தர்மனைவியருமெனவறிக [௰௨]

இல்வாழ்வோர்க்குத்தொழிலினாற்பாவங்கள்வருமுறைமையுமவை
தீருமுறைமையுமுணர்த்துகின்றார்

உலகினிற்பாவபேத முண்டுழவாதியைந்தா *
லலகிடன்முதலைந்தாலுமவ்வினையறுமெம்மாதிக் *
கிலகியவெரிக்குநூலையிசைத்தருள்குரவர்க்கென்று *
நிலைமையதவர்க்குப்பூசைநித்தலுநிகழ்த்துவார்க்கே *

எ - து புறம்பேசெய்யுமுழவுமுதலியதொழிலைந்தினாலுமனையகத்திற் செய்யுமலகிடன்முதலியதொழிலைந்தினாலும் பாவபேதங்கள்பூமியின்கணுளதாம் சிவனுக்கும்விளங்காநின்ற வக்கினிக்குஞ்சிவனூலையுபதேசித்தருளு மாசாரியர்க்குமெக்காலமுநிலைபெற்றதபோதனர்க்கும்பூசையை நித்தியமுஞ்செய்வோர்க்குமுற்கூறியபாவங்களொருதுகெடும் எ று [௰௩]

உண்டியால்வருமுயர்பு மிழிபுமுணர்த்துகின்றார்

அட்டவைதன்னைச்சொன்னநால்வருமருந்தவன்பா *

விட்டுமிக்கதனையுண்கையமிர்தமியாதொருவுண்கை *
கட்டமுங்கடுவுமாயிகழிந்தவூன்காயந்தானு *
மொட்டியேயுடலிற்றேன்றும்புழுவுமென்றுரைப்பர்களோர்ந்தே *

எ து யாதாமொருவர்தமக்குச்சமைத்த வன்னத்தைமுறைகூறிய நால்வருமுதலு
ல்வருமமுதுசெய்யும்படியன்பிலுலே கொடுத்தந்தச்சேடத்தைப்பொசிக்கைஆமிர்
தம்பொசித்ததோலொக்கும்இந்நால்வர்க்குமுதவாதுண்கை,மலமும்,விடமுமுயிர்
நீங்கியகாயமானபிணமுமுடலின்கட்பொருந்தித்தோன்றும்புழுவுமுண்டலொக்
குமென்றவையிற்றை யுணர்ந்து அவர்களுக்கிடாமலுண்கையையொழிய க்கடவர்
எ று [௰௪]

முன்னைச்செய்யுளிலுழவாதியைந்தென்றமலகிடன்முதலைந்தென்று
ந்தொகுத்தாரதனைவகுத்துணர்த்துகின்றார்

தலத்துபுல்கூலிவேலைசந்தையிற்கொண்டுவிற்கை *
குலைத்தசொற்கூட்டுங்கோபஞ்சத்தியங்கூறலுள்ளு *
மலக்கிடன்மெழுகலங்கியாக்கனீரரிசியென்றே *
யிலக்கியத்தியம்பும்பத்துந்தமக்கெனிற்பாவமீட்டும் *

எ து புறம்பேசென்றுநிலத்தின்கணுழுதலுங்கூலிகொண்டுவேலைசெய்தலுஞ்
சந்தையிற்கொண்டுவிற்கையுநாய்குலைத்தாற்போன்றசொல்லையுண்டாக்குங்கோப
மும்பொய்யுரைத்தலு மில்லத்தின் கணிருந்தலகிடலு மெழுகலு நெருப்புமூட்டலு
ந்தண்ணீரொடுத்தலு; மரிசிகுற்றலுமென்றநூல்களிற்கூறாதொழிலகள்பத்துந்தம
க்கென்றுகருதிச்செய்யிற்பாவங்கள்வரும் எ று

இத்தொழில்களால்வரும் பாவமியாதெனிற், புருடார்த்தொருபூவுதொழில்செ
ய்யுங்காற்செந்துக்கண்மரிக் கையுமுழுமெருதுக்கு வருத்தமுதலியகுற்றமுமுளதா
ம், கூலிவேலைசெய்யுங்காலவ் வேலைத்தொழிலிருந்தச்செய்யாமையும்வேலைக்குழைப்
பும்வெட்டல்கொத்தலிற் கொலையுமற்றுமுள்ளகுற்றமுமுளதாம், கொண்டுவிற்கு
மிடத்துப்பிறர்பொருளேறக் கோடலுந்தம்பொருள்குறையக்கொடுத்தலும், பொ
ய்யுரைத்தலு, முதலியகுற் றமுமுளவாம்; கோபம்வருமிடத்துப்பிறர்க்கின்னாமை
யுந் தமக்குணர்வுகேடும், வன்சொல்லுமுதலியகுற் றமுளவாம், அசத்தியங்கூ
றுமிடத்துப்பிறர்க் கிடுக்கணும்பகையு, மச்சமும், பழியுமுதலியவற்றமுளவாம்,
மகளிரலகிடன்முதலியவைந் தொழிற்கண்ணுஞ்செந்துக்கண்மரிக்குங்குற்றமுளதா

மௌனவறிச. [௰௫]

அக்குற்றங்கெடுதற்கோர்சிறபபுவிதியுணர்த்துகின்றார்.

தேசுறுசிவாதிபூசைக்கெனவிவைதன்னைச்செய்யி ✻
னாசமாம்பாவபேதந் தம்மையேநாடிச்செய்யிற் ✻
பாசமாய்நரகபேதப்படுகு ழிப்படுத்தியென்று ✻
மூசல்போலுழல்வித் தாக்குந்துயரினுக்களவுமுண்டோ ✻

எ - து இந்தப்பத்துத்தொழிலினையும்புகழான்மிக்கசிவன்முதலியநால்வருடையபூசையின்பொருட்டாகச்செய்வராயின்அத்தொழிலினால்வரும்பாவவிதங்கள்கெடும்அவற்றைத் தம்மையேகுறித்துச்செய்வாராயினவைகள்கன்மபாசமுமாய்நரகவிதங்களானபடுகுழியிலே விழுவித் தங்கோடிங்கோடுழலுமூசலைப்போலவெக்காலமுஞ்செனனமரணங் களிலேசுழன்றுதிரியும்படிசெய்தவற்றினாலுண்டாகுந்துயரினுக்கோரெல்லையுளதோ - எ - று

ஓகாரம், எதிர்மறைக்கண்ணாய்இல்லையெனவிளக்கிநின்றது [௰௬]

மேன்முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத் தியாலுணர்த்துகின்றார்

இந்தவினைகளினாலுமேறியபாவமாறச் ✻
சிந்தனைசெய்தார்மற்றுஞ்செறிந்ததீவினையுந்தீர்க்கப் ✻
புந்திசெய்தார்கடாமுஞ்சிவாதியைப்புரிகபூசை ✻
வந்தறும்பாவம்வாய்க்குநலங்களுநவிற்றுவாமே ✻

எ - து இந்தப்பத்துத்தொழிலினாலுமுண்டாயபாவங்கணீங்கும்வண்ணங் கருதினோர்களுமிவற்றாலன்றிபபிறவாற்றானும்பொருந் தியபாவங்களொழிக்கும்வண்ணங்கருதினோர்களுஞ் சிவன்முதலாயநால்வரையும்பூசைபண்ணக்கடவர்கள் அங்ஙனமவர்களைப்பூசைபண்ணிற்பாவங்களெல்லாநதேய்ந்துகெடுமெனதனாலுண் டாம்பயன்களுஞ்சொல்வாம் - எ - று (௰௭]

சிவன்முதலாயினோர்க்கன்னாதிகொடுத்தோர்சிவலோகத்திலெய்தி
யிருக்குங்காலவரையறையுணர்த்துகின்றார்

அருத்தியவவிழ்தினேகமமலனை முதலோர்க் கன்பா ✻
லிருத்திடுஞ்சிவலோகத்தின்வருடமாயிரமுமேயப் ✻

பொருத்தியவன்பர்தம்மைப்பொருந்திடிற்பருப்புநெய்யு *
முரைத்தவவ்வருடந்தன்னிற்றசகுணமோங்குமாங்கே *

எ - து சிவன்முதலியநால்வரையுமன்பிற்பிலையமுதுசெய்வித்து, அவர்களி லொருவிழ், ஆயிரம்வருடஞ்சிவலோகத்திலிருக்கும்படிவைக்கும், அத்துஅவிழுட னேபருப்பு, நெய்யும், பொருந்துமாயினவ்வனமருத்துவித்தவன்பர்தம்மைமுற் கூறியவருடத்திற்பதின்மடங்காகியபதினாயிரம்வருடஞ்சிவலோகத்திலேயத்தமா கவிருத்துமென்றவாறு அவிழ் அன்னம். [௰௫]

இதுவுமது.

பொரித்தநற்கறியும்புல்நிற்றசதசகுணிதம்போன *
தரித்தசாட்டியமேயென்னிற்சததசகுணமுஞ்சாரும் *
பரித்தநற்கந்தபத்தஞ்சதசதகுணமும்பற்று *
மிரத்தநற்சாலியன்னநியுதமேயென்னிலேன்றும் *

எ - து முற்கூறியபருப்புநெய்களுடனேநல்லபொரிக்கறியுங்கூடுமாயின்மு ன்னோரவிழுக்குக்கூறியவருடத்தினூறுமடங்கான நூறாயிரம்வருடஞ்சிவலோகத்தி லிருத்தும்அவர்களுக்குநிவேதிக்குமன்னமறுபதுநாளின்மேல்விளைந்தநெல் லினதன்ன மாயின், முன்னோரவிழுக்குக்கூறியவருடத்திலாயிரமடங்கானபத்துநூறாயிரம்வ ருடஞ்சிவலோகத்திலேபொருந்தவைக்கும், நன்மைபொருந்திய புழுகுசம்பாநெ ல்லினதன்னமாயின், முன்னோரவிழுக்குக்கூறியவருடத்திற்பதினாயிரமடங்கான கோடிவருடஞ்சிவலோகத்திற்பொருந்துமவன்மையிருத்தும், நல்லசெந்சாலிநெ ல்லினதன்னமாயின், முன்னோரவிழுக்குக்கூறியவருடத்தினூறாயிரமடங்கானபத் துக்கோடிவருடஞ்சிவலோகத்திலிருத்தும் - எ - று

ஏகாரம, தேற்றம், உரைத்தவவ்வருடமென்பதுஞ்சிவலோகமென்பதும் அதிகாரம்பாரித்தமையால், யாண்டும்வருவித்துக்கொள்க, சாட்டியம், அறுபதா ங்குறுவை, கந்தபத்தம், புழுகுசம்பாநெல் [௰௬]

இதுவுமது

சாலியின்விசிட்டராசசாலியாற்சமைத்தவன்னம் *
மேலையபலத்தின்மிக்கதசகுணம்விளைக்குமீண்டிங் *
கோடியபலங்களோடுங்கொழுவியநெய்யுங்கூடி *
லேலவேகறியுங்கூடிலேற்றமுன்னிசைத்தவாற்றும் *

எ - து செஞ்சாலிநெல்லினுமதிகமானவிராசசாலிநெல்லினாற்சமைத்தவமுதாயின். முற்கூறியபலத் தினுமிருநதபதின்மடங்குபலத்தினைவிளைக் குமெனவேமுற்கூறிய பந்துக்கோடியிற்பதின்மடங் கானநூறுகோடிவருடஞ் சிவலோகத்திலேயிருத்துமென்றும் அந்தஅன்னங்களிலே நல்லநெய் யுங் கூடுமாயின்மீளவுமந்தந்தவன்னங்களுக்கு ச்சொன்ன பலனைளவிரட்டிக் கும்அவ்வயிற் றினோடுபொருந் தக்கறியுங் கூடுமாயின் அந்தந்தக்கறிக்குமந்தந்தவன் னங்களுக்குமுற்கூறியபலத்தினைதுவரையறையின்படியே யிரட்டிக்கும் எ று [உ௰]

சிவவிரதரானதபோதனரையருத்துவித்தோர்க்கெய்தும்பலமுணர்த்துகின்றார்

பழுதறுபாயசாதிபலவிதவிரதபாகங் *
கொழுவியகனியின்பேதங்குளகிருதாதிகூடு *
முழுமணமோதகாதிமுன்னையினதிகமுற்றும் *
விழுமியபலத்தைவேண்டிவிரதரையமிசைவித்தார்க்கே *

எ து விசிட்டமானபலன்களைவிரும்பி க்குற்றமற்றபாயசமுதலான குளான்னந்திலான்னம்பருப்புப்போனமிவைகளையுநாளுவிதமானவிராசசாலியன்னமுதலியவிரதபாகங்களையுங்கொழுவியவாழைக் கனிபலாக்கனிமாங்கனி முதலியகனியின்விதங்களையுஞ்சருக்கரைநெய்முதலாயின கூட்டி ச்சமைக்கு நிறைமணத்தையுடையசுகியன்முதலானபணியாரவகைகளையுங் கூட்டி ச்சிவவிரதங்களை ச்செய்யுந்தபோதனர்களையமுது செய்வித்தோர்க்கவைகளே முற்கூறியபலத்தினு மதிகமானபலன்களைவிளைக்கும் எ று

கு செயப்படுபொருளைச்செய்ததுபோல த்தொழிற்படக்கிளத்தலும்வழக்கினுளுரித்தே என்பதனாற்கருமப்பொருளை க்கருத்தாவாகக்கூறிற்று [உக]

சிவயோகிகளையருத்துவித்தோரெய்தும்பலமுணர்த்துகின்றார்

உரைத்தவிப்பாகபேதமுயிர்க்குயிருணர்ந்தார்தம்மை *
யருத்தினர்சிராத்தத்தன்பாலருங்கியமூவேழ்சுற்ற *
மிருத்தினர்சிவலோகத்தினெண்ணியபடியேதாங்கள் *
கருத்தினுட்களிப்பும்பொங்கப்புதல்வனைப்பெற்றேகாண்பர் *

எ து முற்கூறியவிரதப் பாகபேதங்களை யுயிர்க்குயிராகியசிவனைத்தெரிசித்தசிவயோகிகளுக்குச்சிராத் தகாலங்களிலே யன்பினோடுமமுதுசெய்வித்தோர்தாம்

பூமியின்கணிருக்கவுநரகத்தின்கட் டுயருநின்றவிருபத்தொருதலைமுறையையுமெடுத்துச்சிவலோகத்தில்வைத்தோராயவர்களேயன்றித் தங்களுள்ளத்தின் கணினைந்தபடியேசற்புத்திரனையும்பெற்றுமனமகிழ்ச்சியும்பெறுக க்கண்டிருப்பதொன்றவாறு [௨௨]

இதுவுமது

உயிர்க்குயிராகிநின்றவொருவனைப்புணர்ந்தயோகி *
பயிக்கமுங்கொளவென்றெண்ணிப்பரிந்தவர்மனைமுன்பற்ற *
வுயப்பெறுவோமென்றெண்ணியவர்குலத்துள்ளாராங்கே *
பெயர்த்தடிநடமுஞ்செய்வர்பாடுவர்களிப்பும்பெற்றே *

எ - து. உயிர்க்குயிராகிநிற்குஞ்சிவனைத்தெரிசித்தசிவயோகியானவன் பிச்சைகொள்ளக்கடவோமென்றெண்ணிப்பத்தசனங்களுடைய வில்லின்முன்பொழுதவக்கணத்திலேதானேயவர்குலத்திலுள்ளோரான விருபத்தொருவர்க்கும் யாமினிநரகத்தினின்றுங்கரையேறுவோமென நினைந்தவ்விடத்திலேதானே மனமகிழ்ச்சியையும்பெற்றுக்கால்பெயர்த்துக்கூத்துமாடி யதற்கேற்கப்பாடாநிற்பர் எ-று.

நடமுமென்றவும்மையாற்கையாற்றட்டமுமிட்டென்றறிக ௨௩]

அந்தச்சிவயோகிக்குச்செய்யும்பூசையைச்சிவனுமற்றுமுள்ளதேவர்கள்பிதிர்க்களுந்தமக்கெனக்கொள்வரொன்றுணர்த்துகின்றார்

ஒழிவறவுறைந்துநின்றவொருவனைப்புணர்ந்தயோகிக் *
கழகுறச்செய்தபூசையமலனுமயனுமாலு *
மெழில்மிகுதேவர்தாமுமெமக்கெனக்கொள்வரொன்றும் *
பிழைகெடப்பிதிர்க்கடாமுமெமக்கெனக் கொள்வர்பெற்றே *

எ - து. வெளி [௨௪]

சிவயோகிபூசைக்குவினியோகப்படும்பொருள்கள்பெறும்பயனும் மேவல்செய்வோர்நினைப்போர்பெறும்பயனு முணர்த்துகின்றார்

பூசனைக்குபயோகங்கள்பொருவிலிபுரத்தைப்புல்ல *
ஈசனைப்புணர்ந்தயோகர்க்கிறைஞ்சியேயேவல்செய்தார் *
நேசமுநிறையநெஞ்சினினைத்தவர்தாமுநீக்கி *
யாரினைச்சிவலோகத்தினரும்பயனருந்துவாரோ *

எ - து சிவனைத்தெரிசித்தசிவயோகிகளைப் பூசைசெய்தற்கு யோகப்பஞ்ச ந்தனமாமுதலியஎண்வகைக்கந்தமுங்கோட்டுப்பூமுதலியநால்வகைப்பூக்களுநெல்லுமுதலானவைகளுமொப்பில்லாதசிவனது புரத்தைச்சென்றடையுமவர்களைவணங்கியவர்கேரியபணிவிடைசெய்தோருமுள்ளத்திலேயன்புநிறையும்படியவரைத்தியானஞ்செய்தோருந்தம்மைத்துயர்செயுந்தீவினைக்குற்றங்களையொழித்துச்சிவலோகத்திலேசென்றுபெறற்கரியபோகங்களைப்பெற்றநுபவிப்பர் எ - று [உ௫]

தபோதனரையுமதிதிகளையுஞ்சிவனெனக்கண்டுவணங்கு முறைமையுணர்த்துகின்றார்.

அவனியின்மனிதர்செய்கையறிவமென்றமலன்றானே ※
தவனொரு நவந்தன்னைத்தரித்துவந்தானென்றெண்ணி ※
யவர்களுக்ககத்தின்வந் ததிதியர்க்கன்புகூரச் ※
சுவைமொழிசொல்லிப்பூசை துடங்கியே முடிக்கசூழ்ந்தே ※

எ - து பூமியின்கண்மானிடாதுவழிபாட்டினையறியக்கடவோமென்றுநின்மலனாகியசிவன்,றானேதபோதனரொன்றுந்திருமேனியைத்தரித்துக்கொண்டெய்தினனென்றுகருதியந்தத்தபோதனர்க்கு,மற்றுந்தம்மில்லின்கண்வந்தவதிதிகளுக்குமன்பானதுபெருகும்வண்ணமின்சொற்கூறியவர்களுக்குப்பாத்தியாசமனாற்கியமலர்முதலியவற்றாற்பூசையைத்துடங்கிமற்றுமுள்ளவுபசாரங்களும்விதிப்படிசெய்துமுடிககக்கடவன் - எ - று [உ௬]

இதுவுமது.

மலினராய்வந்தாரோனும்வடிவொடுவந் தாரோனு ※
நிலைமையினீங்காரோனுநீங்கியநிலையரோனு ※
மலைவறுமன்பர்க்காதிக்கவர்களுக்கமைக்கபூசை ※
புலையுடற்பொறையைப்போக்கப்பொருந்தியதிருந்தியாரே ※

எ - து ஈனவுடலாகியசுமையையொழித்தற்குவிரும்பியதிருத்தத்தையுடையோரானவர், தம்மில்லின்கணழுக்குமெய்யோடுகூடி யிழிகுலத்தினராய்வந்தாராயினும், பரிசுத்தராய்வேடப்பலிப்பொடுநற்குலத்தினராய்வந்தாராயினுந், தாம்நிற்குநிலைமையினின்றும்வழுவாதோராய்வந்தாராயினு, மந்தநிலைமையினீங்கியவிரதபங்கராய்வந்தாராயினும். அவர்கள்-ஆதியாகியசிவனுக் குநிலைபெற்றஅன்பராயின்அவர்களுக்குப்பூசைசெய்யக்கடவர் எ -று [உ௭]

சிவஞானிகளுக்குக்குற்றஞ்சொல்லுமவர்முதலியோர்க்குவருந்தீமைபுணர்த்துகின்றார்.

காட்டுமுள்ளொளியைக்கண்டகண்ணனைக் குயந்துசொலலைக் *
கேட்டவர்கேட்பித்தார்கள்கெழுமினருடன்பட்டார்முன் *
மூட்டினரென்றவைந்துமூடருங் கூடிமூழ்கி *
மீட்டிடவொருமின்றியெரிநிரையத்துள் * வேவார் *

எ - து ஆன்மாக்களுக்கெல்லாம்அந்தரியாமியாய்நின்றெப்பொருளையுந்தெரிவிக்குந்தீபமாகியசிவனைத்தெரிசித்தஞானக்கண்ணுடையோனை, யாதொருவனிகழ்த்துச்சொல்லுங்காலதனைக்கேட்டிருந்தோரும், பிறனைக்கேட்பித்தோரும், நிந்தைசொன்னவரும், மதற்குடன்பட்டவரும், நிந்திக்கும்படிமுதற்கணெழுப்பினோரும், மானவைந்துமூடரும், மோக்கவேயெரிவாய்நரகத்தின்கண் ஆழ்ந்துமீட்பாருமின்றிவேவுவர் எ - று [௨.௪]

இதுவுமது

மனத்தினாலுடல்வடிவுகளாலவ ரகிதசபக்காரும் *
மினத்தொடுமிணங்கிவேவெரிநிரையத்தையெய்தி *
யெனைத்துளகாலந்தானுமென்றுளத்தேங்கியெய்ப்பர் *
தனக்கயலுறவிலானைத்தவறுவரொன்றேதாமே *

எ - து மனத்தினாலுங் காயத்தினாலுஞ்சிவஞானிக்குத்தவறுசெய்தசிந்தகெட்டருந், தம்மினமாயுள்ளாரோடுங்கூடியெரிவாய்நரகத்தையடைந்துவேவுவர்களா இங்ஙனமனுபவித்துத்தொலையுங்காலமெவ்வளவுளவோவென்றுமனமேங்குவருமாவராதலாற்றனக்குறவும் பகையுமில்லாதசிவஞானிகளையேயன்றுதவறுசெய்பவர்கள். எ-று [௨.௫]

இதுவுமது.

மற்றையநரகபேதமனைத்தினுமயங்கிமூழ்வேர் *
சுற்றமுஞ்சுயலத்தாருங்கூடிபோதுயங்கிவீழ்வ *

* வேவாரென்னும்பொருளினையீண்டுடன்பாட்டினையாக்க.

றொற்றுவரியமதூதரொமக்குறவாருமில்லை ✽
யுற்றவித்துயரந்தன்னையொழிக்கவென்றழிவருள்ளம் ✽

எ - து அந்தத்தீயோர்முற்கூறியவெரிவாய்நரகமேயன்றிமற்றுள்ளநரகபேதங்களெல்லாவற்றினுந்தங்குலத்திலுள்ளோரானவிருபத்தொருசுற்றமுங்கூடியுள்ளம்அலமரக்கலங்கியுணர்வுகெட்டுவீழாநிற்பர், அங்ஙனம்வீழ்ந் தந்தத்துயரம்பொருமனரகத்தினின்றுங்களையேறுந்தோறுமியமதூதர்களின்றடித்தடித்துமீளவுந்தள்ளுவர்கள், அதனாலேயித்துயரத்தையொழிப்பதற்குறவாயுள்ளோரொருவருமிலலையிதற்கென்செய்வோமென்றுமனமுஞ்சலிப்பர் எ-று [கூ௰]

சிவஞானிக்கிடர்செய்யினரகவேதனையெய்துமாதலாலவரைவழிபட்டுய்கவென்றுணர்த்துகின்றார்.

ஆதலான்முனிவர்தம்மையவமதிசெய்யாதஞ்சிப் ✽
பூதலத்தோர்கள்பூவாற்புனலினாற்பரிவுபொங்கப் ✽
பாதபூசனையும்பண்ணிப்பணிந்தவர்பணியுஞ்செய்து ✽
நாதனேயிவர்களென்றுநாடுகவுளத்தெந்நாளும் ✽

எ - து பொறிபுலன்களைமுனிந்தசிவஞானிகளுக் கிடர்செய்யின்நிரயத்துன்பமேவருமாதலாலுலகிலுள் ளோர்கள் அம்முனிவோரைநிந் தியாதுபயந்துஅன்புபெருகநீரினாலும், பூவினாலுமவர்திருவடிகளைப பூசைசெய்தவரேவியபணிவிடையுஞ்செய்தெக்காலமுந்தம்முள்ளத்தின் கட்சிவனேயிவர்களென் றுகிரிந்திக்கக்கடவர் எ-று [கூக]

அசத்பாத்திரமாவாரின்னாரென்பதுணர்த்துகின்றார்.

பகர்ந்தனமுனிவமெய்ம்மைப்பாத்திரவிசிட்டந்தன்னைச் ✽
சகந்தவொன்னக்கோலஞ்சமைந்துதற்பரனைச்சாரா ✽
ரகந்தனிற்பிறப்புமஞ்சாரவரபாத்திரங்களென்றே ✽
யிகழ்ந்திடுமிதுவுங்கேளினியினியுணக்கியம்பயாமே ✽

எ து வாரரயகத்தியமுனிவனே முன்னஞ்சத்பாத்திரவிசிட்டத் தைச்சொன்னோமேல்அசத்பாத்திரமாவதியாதெனி லுலகத்திலுள் ளோரிவர்பெரியதபோதனரொன்றுசொல்லும்வண்ணம்வேடத்தைத்தரித்துச்சுட்டுணர்வுக்கெட் டாதசிவனையடையாதவருமாயுள்ளத் தின்கட்செனனமரணத்துக்கு ப்பயப்படாதவருமானவர்

யாவர்சிலர் அவர்களையசத்பாத்திரங்களென்று வேதாகமங்களி கழாநிற்குமிந்த அசத்பாத்திரத்திலேசெய்ததானம்விளைக்குந் தீமையுமேலுணக்கியாஞ்சொல்லாநின்றேமதனைநீகேட்பாயாக எ று [௯௨]

அவர்களுக்குக்கொடுத்ததானம்பலன்கொடாமலழியுமென்பதுணர்த்துகின்றார்

மெய்யனை விரைந்துபாசப்பகையினைவென்றுயாற *
ருய்யவேவேணுமென்னு முள்ளமதிறந்துநின்ற *
பொய்யனைப்புரிந்தபூசைபலத்தினைப்பொருத்துமோதான் *
செய்தநுமவர்க்குப்பச்சைமட்கலநீரோதேரில் *

எ து சத்தியசொரூபனான சிவனைவிரும்பியாணவமுதலிய பாசப்பகையினைச்செயித்துமுத்தராயாமுங்களையேறவேணுமென்று கருதுங்கருத்தைவிட்டுநின்றவசத்தியற்குச்செய்தபூசை நல்வினைப்பயனைக்கொடுக்கமாட்டாது அதனையாராயின்அந்தவசத்பாத்திரத்துக் குச்செய்ததானம்பசுமட்கலத்தில்விட்டநீர்போலநில்லாதுடனேயழியும் எ று

தான் எ து அசைநிலை [௯௩]

இதுவுமது

பழுதறுவித்தேயேனுமரவிடைப்பாலோராகா *
வழுவிடையன்றித்திறைருதிபலத்தையாக்கா *
பிழைவிலாவழியைமேவுமெல்லியலின்பமேவாள் *
வழுவுறுமவர்க்கேயீகைவரத்தினைச்செயுமோமாட்டா *

எ து குற்றமற்றநல்லவித்தேயாயினு முவர்நிலத்தின்கண்விதைத்தாலதுபயிராகமாட்டாதவாறுபோலவும்அக்கினியின்கண்ணேயன்றிச் சாம்பலின்கட்செய்தவாகுதிபலத்தைக்கொடுக்கமாட்டாத வாறுபோலவும்விரும்புதற்குரியமையில்லாதஅலியினைப்புணரும்பெண்ணானவள் புணர்ச்சியின்பத்தைப்பொருந்தவாறுபோலவுங் குற்றம்பொருந்திய அசத்பாத்திரமாயுள்ளோர்க்கு க்கொடுத்ததானமும் பலத்தினைக்கொடுக்குமோகொடுக்கமாட்டாது எ று [௯௪]

சத்பாத்திரங்களையேற்றுமென்றும சத்பாத்திரங்களையேற்றுமெ ன்றுமுவகைமமுகத்தாலுணர்த்துகின்றார்

பாத்திரமாக்கிக்கட்டிவிரும்பினைப்பண்டைமேற்றி *

யாற்றிடையியக்கவெண்ணுமடைபினையடையுமாங்கே *
பாத்திரமீந்தானேற்றுஞ் சிவபுரப்பாரம்பற்றும் *
பாத்திரமல்லான்கட்டியிரும்பெனப்பாரம்பற்றான் *

எ - து யாதாமொருவரிருப்புக் கட்டியைத்தோணியாகப்பண்ணியதிலேபல பண்டமுமேற்றியாற்றின்கண்விடும் போதுதாமெண்ணியகரையினைச்சேரும், அப்படியேசற்பாத்திரமானதும், தன்பாற்றானஞ் செய்தோனையுங்கொண்டு சிவபுரமாகியகரையைச்சேரும், கட்டியர்யுள்ளவிரும் புடன்பண்டத்தையுங்கட்டியாற்றின்கண்விடில்விட்டவெல்லேயிலேயமிழ்ந்திக் கரையடையமாட்டாதவாறுபோல, அச்சற்பாத்திரமானவனும், தன்பாற்றானஞ்செய்தோனைக்கரையடைவிக்கமாட்டாதது மன்றித்தானுஞ் சிவபுரமாகியகரையடையமாட்டான் எ-று

அடை - எ-து - கரை [௩௫]

பாத்திரம்அபாத்திரமானவிருவரும்நரராயிருக்கவதிலொருவர்க்கொருவருயர்ச்சிதாழ்ச்சியுமாய்நன்மைதீமையைத்தருமாறென்னையெனவினவ, அதற்கோர்விடையுணர்த்துகின்றார்.

கட்டியைக்கனலிற்காய்ச்சிக்கம்மியனலமாக்க் *
கிட்டநற்பண்டமேற்றுப்புனன்மிசையியங்குமெற்றே *
யொட்டியகுரவனோதுமொருபொருளுணர்ந்தாரற்றே *
கட்டியைக்கடுப்பர்காட்டுங்கடவுளையுணராக்கையர் *

ஏ - து கொல்லனானவனிருப்புக்கட்டியையக்கினியிலேகாய்ச்சித்தோணியாக்கச்செய்யவதுதன்கணிட்ட நல்லபண்டங்களையுந்தரித்துக்கொண்டு நீரின்மேலேயோடுமதைத்தன்மைத்துச்சிவஞானேயேகீபாவம்பொருந்திய வாசாரியன்தீக்ஷாசுத்தமூக்கியுபதேசித்த வொப்பிலாதசிவத்தை யுணர்ந்தஞானவான்கள், தமக்கீந்தோனைபபிறவிக்கடலினின்றுங் கரையையடைவிப்பதத்தன்மைத்தாம், ஆசாரியராலேயெப்பொருளையுங்காட்டுஞ்சிவனையுணராத; அஞ்ஞானிகள், பணிப்படாதவிருப்புக்கட்டியையொப்பர் எ-று [௩௬]

மேலுமோர்வகையாற்பாத்திரமென்பாரையுணர்த்துகின்றார்.

பாத்திராபாத்திரத்தைப்பகாதுருகுதலேபற்றிக் *
கூர்த்தவாதரவிறலேகொடுப்பவர்க்கவர்கடாமும் *
பாத்திரங்குருடர்பங்குபாலகர்மிடியர்நோயர் *

முத்தவர்கிருபணர்இவர்களுமிரக்கமுற்றில் ✻

எ - து இவர்பாத்திரம், இவர், அபாத்திரம், என்றிரட்டுறக்கருதாதுள்ள நெகிழ்ச்சிபொருந்திமிகுந்தவாதரவுண்டாகவனாயாதுகொடுப்போர்க்கவரிடத்திலுமிரக்கமேலிடின், முற்கூறியவசத்பாத்திரங்களுங் குருடர், முடவர், சிறுகுழந்தைகள்; தரித்திரர், வியாதியாளர், வயோதிகர், பேராசையுடையோர், முதலானவர்களும்பாத்திரமேயாம் எ - று [௯௭]

இதுவுமது

உச்சியிலிலைவாரொல்லாமுத்தமமொன்றேயெல்லா ✻
யர்ச்சனைபுரிகவன்பாலவலவூணுக்கைதன்னைக் ✻
கைச்சமலேசன்வாபூங்கடிநகரடைவாமென்று ✻
மிச்சையினியந்தீரொல்லர்மெண்ணரியார்வுமோரும் ✻

எ - து துக்கத்தைவிளக்கும்பொல்லாதவுடம்பினைவெறுத்து நின்மலனாகிய சிவனெழுந்தருளியிருக்குஞ் சிறப்பினையுடைய சிவலோகத்தை யடைவோமென்று கருதுமாசையினோடேபொருந்தினோரெல்லோரும் உச்சிக்காலத்திலேயசித்து வந்தோரியாவரையும் பாத்திரங்களென்றேகருதி யவர்களையன்பினோடே யருச்சனை செய்தன்னமுதலியகொடுக்கக்கடவர் அங்ஙனஞ்செய்யிற்றம்மனத்தின்கண்ணினைத்த பலன்களெல்லாங்கைகூடும் எ - று [௯௮]

தாதாவின்இலக்கணமுணர்த்துகின்றார்

பாத்திரமல்லார்செய்கையதனையும்பகர்ந்தாம்பண்பு ✻
வாய்த்ததாதாக்களாவார்தகைமையும்வகுத்துச்சொல்வாம் ✻
மோர்த்துணருதாரந்தாழ்ச்சியுறவனுகம்பங்கோபந் ✻
தீர்த்திடலென்னுமைந்துமுடையரோசிறந்தார்தேரில் ✻

எ - து வாராய் முனிவரனே யசத்பாத்திரமானோரிலக்கணத்தையுஞ் சொன்னோம் மேல்நற்குணம்பொருந்தியதாதாக்கள் மேன்மையும்பிரித்துச்சொல்லாநின்றோம் அதனையாராய்ந்தறியக்கடவை யங்ஙனமவர்கள்முறைமையை யாராயிற்கொடைவணக்கமுறவுகிருபைபொறையென்றுசொல்லுமிந்த ஐந்துகுணமுமுடையார்களேதாதாக்களாவர் எ - று [௯௯

சிவஞானிக்கியுந்தன்மையுணர்த்துகின்றார்

பாத்திரமதனுண்மிக்கபாத்திரம்பரமஞானி ※
நிர்த்தவாசையினுலீயாயெனவவன்செப்பானன்றே ※
கூர்த்தவாதரவினுலேயவன்புடைகுறுகிக்கொண்ணீ ※
தீர்த்தனேயென்றுமீவான்பலத்தினைத்தெரிக்கலாமே ※

எ - து பாத்திரமாவன வற்றுள்விசிட்டமான பாத்திரஞ் சிவஞானியேயவன் பொருள்களினுள்ளவாசையொழித் தபடியினுலே யாதாமொருவர்பாற்சென்றிந்த ப்பொருளையென க்கீயக்கடவையென்று சொல்லானுதலால் ஈன்னமயேமிகவுமு டையசிரத்தையினுலேயந்தசிவ ஞானி யெழுந்தருளியிருக்குமெல்லையிலேசென்று சுத்தனேயடியேன்றரும்பொருளைநீகொள்ளக்கடவையென்றுசொல்லியுங்கொடுக் குந்தாதாவின்பலத்தையளவிடலாமோ எ று [சய]

மெய்ஞ்ஞானியுமஞ்ஞானியுமேற்குந்திறமதனுல் வரும்பயனும்பயனி ன்மையுமுணர்த்துகின்றூர்

மெய்யினையுணர்ந்தஞானிவேணவாவிடுத்தானேனு ※
முய்யவேபிறருமுன்னியவர்கொடையுகப்பனேராக் ※
கையர்கடம்மைத்தாமேகாதலித்திரப்பரந்தப் ※
பொய்யர்கைப்புகுத்தினூர்கள்பொருளினையிழந்தார்போட்டே ※

எ - து உண்மையைத்தெரிசித்தசிவஞானியானவன், பொருண்மேலுள்ளவா சையைவிட்டானுயினுந்தம்போலமற்றுள்ளவர்களும்பரகதியடையவேணுமென்று கருதியந்தத்தாதாக்கள் செய்யுந்தானத்தைவிரும்பிக்கொள்வன் அந்தவுண்மை யைத்தெரிசியாத,அஞ்ஞானிகள், தாதாவானவன்கதியடையவேணுமென்றுவிரும் பாதுதம்முடையபோசனூர்த்தத்தைவிரும்பித்தானத்தினையேற்பராதலாலந்த,அஞ் ஞானிகள்கையிலேதானஞ்செய் தோர்கள்தம் பொருளினையவமேபோட்டிழந்தவ ராவர்எ-று தாம் - எ-து - அசைநிலை [சக]

தாதாவானவன்சுவர்க்கமடைதற்கீண்டோர்சிறப்புவிதி யுணர்த்துகின்றூர்.

காதலித்திவார்வானைக்கலப்பதுமவர்கைகாட்டு ※
மாதலால்வானஞ்சேரவாதரவுடையாரஞ்சிப் ※
பாதபூசனையும்பண்ணிப்பகர்ந்துசற்காரபாடை ※
யோதனமாதியீகவுதிதிகட்குறவினேடே ※

எ - து அறத்தைவிரும்பித்தானஞ்செய்வோர், சுவர்க்கத்தையடையுமுறைமைகாண்பதெங்ஙனமென்னில் அவர்கொடுக்குங்காலத்துமேலாகச்செல்லுங்கைதானேயவர்சுவர்க்கத்தின்மேற்செல்லுமுறைமையைக்காட்டும் ஆகையினாலே சுவர்க்கத்தையடையவேணுமென்னும் விருப்பத்தையுடையோர்ப்போமாலைநிகழாமலதிதிகளுக்குப்பயந்துபாதார்ச்சனையுஞ்செய்து நல்வார்த்தையுஞ்சொல்லியன்னமுதலானவற்றையன்பினோடேகொடுக்கக்கடவர் - எ-று [௬௨]

தரித்திரற்குக்கொடாதான்சிறப்புடையனல்லனென்றுணர்த்துகின்றார்

செறிந்துதாவென்றுநின்றமிடியனைச்சிறியனாக்கி *
யுறைந்துளான்பெரியனெங்ஙனென்றுளத்தாகத்துசெய்வான் *
சிறந்ததாதாவேயல்லன்செட்டிவன்செய்கையெல்லா *
மிறந்திடுந்தருமமேற்குமிடியருமின்றேயெங்கும் *

எ - து தன்னைக்கிட்டியெனக்கீயக்கடவையென்றுசொல்லியிழிவராகிநின்றுநிற்குந்தரித்திரனை, யிவனற்பனென்றெண்ணிச்செல்வத்தையுடையபெரியவனெங்கேயிராநின்றானென்றுகருதியவற்குக்கொடுத்தற்குத்தன்னுள்ளத்தின் கண்விசாரிப்போன், அருளான்மிக்கதாதாவாகான், இவன்கொடுக்குங்கொடையெல்லாம், அவன்பாற்றனக்குமோருதியங்கருதியசெட்டாம், இங்ஙனஞ்செல்வனாயிருந்து மிடியனைச்சிறப்பித்ததென்னெனில், எங்குஞ்சென்றிரக்குமிடியருமில்லையாயின் ஏற்பாரற்றுத்தன்மமானதுலகின்கண் லாதுநாசமாமாதலாற்றரித்திரற்கேதானஞ்செய்யக்கடவன் எ று [௬௩]

அதற்குமேலுமோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்.

பொருளிதாகிற்கேட்பார்க்கின்சொலுமிதோபோந்தால் *
விரைவுடனெழுகையோடல்வியந்தெதிர்கொள்கைபீடத் *
துரிமையினிருத்தல்பாதபூசனையுகப்புச்செய்கை *
பிரிபொழுதுடனேசெல்கையெனுமிவையேழும்பேறே *

எ - து தன்பால்வந்துகேட்குமிரப்போர்க்குக்கொடுக்கும்பொருளில்லையாயினவர்க்குச்சொல்லுநல்லவார்த்தையுமில்லாததோ ஆதலால்நல்வார்த்தையாயினுஞ்சொல்லக்கடவன், தன்பாற்பெரியோர்கள்வந்தகாலத்துவிரைவினோடெழுந்திருக்கை; யோடிச்செல்லல்கண்டவுடனெழுந்தருளப்பெற்றதேயெனக்கொண்டாடியெதிர்கொள்கை, அவரிருக்குமதற்குரிமையுடையவாதனத் திருத்தல், பாத

த்திலருச்சிக்கை, இன்றல்லவோவெனதுகிரகஞ், சுத்தமாயிற்றென்றவனையுயர்த்திப்புகழ்தல், அவர்களெழுந்தருளும்பொழுதுபதினறடிகுறையாமற்சென்றுவழிவிடுகை, யெனக்கூறுமிவைகளேழுமுத்தியடைதற்குக்காரணமாம் எ-று

ஓகாரம் - ஒழியிசைக்கண்வந்தது, போந்தாலென்னும் வினைக்கு எழுவாய்விரிக்க. [சச]

தாதாவுமவன்கையிலேற்றானுமடையும்பலமுணர்த்துகின்றார்.

இரக்கமாதரவுகூரவீபவன்கையிலேற்று *
விருப்பனோடீந்தானேடீசனதுலகமெய்தி *
யிரக்கமாதரவிலான் கையேற்றவனீந்தானேடு *
மிருப்பனேநிரையந்தன்னுளெண்ணிமுன்வினையையெய்த்தே *

எ-து அருளுமாதரவும்பெருகக்கொடுக்குந் தாதாவின்கையிலேயேற்றவன் அந்தத்தாதாவினேடுஞ் சிவலோகத்திலேசென்றிருப்பன்அருளுமாதரவுமில்லாத தாதாவின்கையிலேயேற்றவன், அந்தத்தாதாவினேடுநிரையத்தின்கட்சென்று முன்செய்தபாவத்தைவிசாரித்துவாடியிருப்பன் - எ-று [சரு]

மேற்புண்ணியதலங்களையெடுத்தேழுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு.

கொடுக்குஞ்செய்கையர்தம்மையுங்கூறினம் *
விடுக்குஞ்செய்கையர்தம்மையும்வெண்ணிற *
விடைக்கும்பாகன்விமலன்விரும்பிய *
விடத்தையுமிசைப்பாமினியாமரோ *

எ-து தாதாக்கள்முறைமையும் அதாதாக்கள்முறைமையும் வகுத்துச்சொன்னேம்மேல்வெள்ளைநிறத்தையுடைய விடபத்தைச்செலுத்துவோனுமாய் நின்மலனுமானசிவனைவிரும்பியெழுந்தருளியிருக்கும் புண்ணியதலங்களையுந் தொகுத்துயாம்சொல்லாநின்றேம் எ-று

விடைக்குப்பாகனென்பதனைவிடைக்கும் பாகனெனல்மெலிக்கும் வழிமெலித்தல் அரோ அசை [சசா]

வேறு

தீர்த்தமார்சிவகாசிதிகழ்குருக் *

கேத்திரம்பிரயாகைகிளரலர்
பூத்தபுட்கரஞ்சுதிபுனிதர்க
ளார்த்தகங்கைபலகடலாதியும்

எ-து வெளி

காப்பில்லாநைமிசாரணியங்கவின்
பருப்பதம்வேதபர்ப்பதங்கோகன்னம்
அரத்தமேனியரியரமம்பையும்
விருத்தவேதியர்வெண்ணையும்பெண்ணையும்

எ-து வெளி

ஒற்றியூர்திருவோத்தூர்விளைவய
லுற்றவூறலுயர்புகழ் வான்மியூர்
வெற்றியூர்திருப்பாசூர்விரிஞ்சையுங்
கற்றுமுற்றினர்காரிவனையுமே

எ-து வெளி

கனகமார்முகலிக்கணாகாஞ்சிநல்
லனகராமுதுகுன்றருணாசலம்
முனிவர்சேர்கூடலூக்கிடைமாமரு
துனருமுத்தனூர்புலியூருமே

எ-து வெளி

காழிமூவலையாறுதென்கண்டியூர்
வீழிவேதவனந்திருவிற்குடி
வாரைமல்குவலஞ்சுழிவாஞ்சியந்
தாரைநீடுவெண்காடுசாய்க்காடுமே

எ-து வெளி

எழிலுமார்பரங்குன்றிராமீச்சுரம் *
பொழிலுமார்மதுராபுரிபூவணம் *
அழகுமாருநெல்வேலியஞ்சைக்களங் *
குழகன்புக்கொளியூர்கொலிக்குன்றமே *

எ - து வெளி (ருஉ)

கோதனங்கள்சூழ்விந்தவிடங்களு *
மாதபோதனர்வாழுமடங்களு *
மீதில்வேட்கையர்க்கேய்விடமின்னுமுண் *
டோதுவாங்காலபேதமுமோர்கவே *

எ - து இங்ஙனங்கூறியபுண்ணியதலங்களும்-பசுக் கள்திரண்டவெல்லைகளும் தபோதனர்களெழுந்தருளியிருக்குந்திருமடங்களு-மிதுபோலத்தானஞ்செய்கிறதி லேவிருப்பத்தையுடையோர்க்குப் பலனதிகமாதற்குப் பொருந் தியதலங்களின்ன முமுளதாம்.முறைமையானேயினிக்காலபேதங் களையுஞ்சொல்லாநின்றோமவைக ளையறிவாயாக எ - று (ருங)

காலவிசிட்டமுணர்த்துகின்றார்.

அரவமாதித்தன்றன்னையடர்ந்திட *
விரவும் வேலையும்வெண்மதிதன்னையு *
மிருமையானவயனமுமீபவர்க் *
குரியவேலைகண்மற்றுமுண்டோர்கவே *

எ - து வெளி—இருமையானவயனம் - தைமாதப்பிறப்பு-ஆடிமாதப்பிறப் புமற்றுமுண்டென்பதனால் - சித்திரைவிஷு - ஐப்பசிவிஷு - அமாவாசி - பூரணை - திருவாதிரை -விதிபாதயோகமுதலாயினவென்க (ருச)

ஆதரவின்விசிட்டமுணர்த்துகின்றார்.

உரைத்தனங்காலபேதமுமோர்கவுட் *
சிரத்தைதன்னையுஞ்செப்புவஞ்சிந்தையுட் *
பரித்தமெய்ம்மைப்பரமப்பிரீதியே *
குருத்தபத்தியுமற் றதன்கூற்றரோ *

எ - து இங்ஙனங்காலவிதங்களுஞ்சொன்னோமேலுள்ளத்தின்கணுளவான வாதரவையும் - அதன்பரியாயத்தையுஞ் - சொல்லாநின்றேமதனையறிவாயாக ஆதரவானது - தம்முள்ளத்தின்கணுண்மையோடுகூடினமேலானமகிழ்ச்சியெனவும் - பெருத்தவன்பு - எனவுமற்றுமுளபரியாயப்பெயரினையும்பெறும்- எ று மற்றென்பதுசுட்டியதற்கினமென்பதலலதற்கினமாகியசிவதன்மம்பாவமாதுயென்னுமூன்றுமந்தவாதரவுக்குப்பரியாயப்பெயரெனவறிக அரோ - அசை - [ருரு]

மேன்முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

சிறந்ததேசமுங்காலமுஞ்சிந்தையுட் *
பிறந்தகாதலும்பெற்றவர்நற்றவர்க் *
கறைந்தநூல்விதியர்ச்சனையாக்குக *
நிறைந்துவானெனவேபலநீடுமே *

எ - து உத்தமமாகியகாசிமுதலியதேசமும்-கிரகணங்கண்முதலியபுண்ணியகாலமு - முள்ளத் தின்கட்பொருந் தியமகிழ்ச் சிமுதலானவாதரவும் - எய்தப்பெற்றோர்நல்லதவத்தினையுடையசத்பாத்திரங்களுக்குவேதாகமங்களிற்சொன்ன விதிப்படியேயர்ச்சனைசெய்துதானஞ்செய்யக்கடவர் - அங்ஙனமவர்களுக்குச் செய்ததானபலன்களாகாசம்போலவிசாலமாய்ப்பெருகியழியாமனிலைபெறும் எ - று [ருசு]

வேறு.

என்றுபயன்மேன்மைதருகாரணமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநையா *
நின்றமுனியன்றுணரநிற்றுணவினைந்தே *

எ - து வெளி [ருஎ]

சிவத்துதியுணர்த்துகின்றார்.

வானவர்நாடருமாதவனேமானவிருட்டறுமாதவனே *
கானமர்வேடனுமானவனேகடிதெனவேசெலுமானவனே *
யேனமுமானவனென்னலனேயெம்முளத்தாக்கிடுமென்னலனே *
யூனமர்வெண்டலையுண்டவனேயுத்தமர்நெஞ்சகத்துண்டவனே *

எ - து மாலயன்முதலாயுள்ளதேவர்கள் - அறிதற்கரிட பெரியதபோதனனே, ஆன்மாக்களுக்கியானெனதென்னுமபிமானமாகியவந்தகாரத்தையொழித்தற்குக்காரணமானஞானதித்தியனே, அருச்சுனனுக்கனுக்கிரகஞ்செய்தற்பொருட்டுக்காட்டின்கணுறையும்வேடுவனுய்வந்தோனே, விரைந்துசெல்லுமிடபத்தையுடையோனே, வராகரூபியுமானதிருமாலறியப்படாதோனே, யெம்முடையவுள்ளத்தின்கணுண்டாக்குமுழுதுணர்வுமுதலாகிய வெண்குணத்தையுமுடையோனே, குற்றம்பொருந்தியபிரமகபாலத்திற்பிச்சையேற்றுண்டோனேயுத்தமமானச்சமுதானிகளுள்ளத்திலனவரதமும்விளங்காநின்றவனே - எ-று [ருஅ]

இதுவுமது

புலிமுனிபூசைபுரிந்தவனேபுகழ்நடமன்றுபுரிந்தவனே *
பலிதருவார்க்கிதபாடணனேபாங்கிலர்வாய்க்கிதபாடணனே *
மலமறப்போதகவாரியனேயவிர்சடைத்தாங்கியவாரியனே *
மலைசிலையாக்கியவன்மையனேவந்துமரிப்பனவன்மையனே *

எ - து வியாக்கிரபாதமகாவிருடிசெய்தபூசையைவிரும்பினோனே, யாவரும்புகழாநின்றதிருநடத்தைஞானகாசத்தின்கட்செய்தோனே, தாருகாவனத்திற்பிச்சைகொண்டுவந்திடுமாதர்க்கின்சொலைச்சொல்லுவோனே, உரிமையில்லாத அபசவரிடத்துச்சாருவாகமுதலியகொடுஞ்சொலைச்சொல்லுவோனே, பக்குவான்மாக்களுக்குப்பிறவித்துன்பங்கள்கெடவேதாகமங்களைப்போதிக்குஞானசாரியனே, யொளிவிடாநின்றசடாமகுடத்தின்கட்டரித்தபுனலையுடையோனே, மகமேருவைவில்லாக்கியவலியையுடையோனே, ஆன்மாக்களைப்போலுலகின்கட்பிறந்திறக்குந்தன்மையில்லாதோனே எ - று
கிதபாடணம் - தீயசொல் - இதுவடமொழி [ருக]

வேறு - குமரன்றுதியுணர்த்துகின்றார்.

நினைவார்வினைநனிபோயறுநிலநீள்கதிரவன்முற்
பனிபோலறுமெனவேபசுபதியோதியபனுவன் *
முனிதான்வினவியநாணனிமொழிவாய்மையன்புனியா *
தெனையாளுடையறுமாமுகனெழிலாரடியிணையே *

எ - து பசுபதியாகியசிவனருளிச்செய்தவேதாகமங்களையகத்தியமுனிவன்கேட்டகாலைத் தமிழ்ச்சூத்திரஞ்சொல்லுந்திருவாக்கினையுடையனாய், அபராதி

எ - து வாராய்முனிவரின்மிக்கோனனவகத்தியனே - யுள்ளத்தையீரநின்றவியாதியானதுசரீரத்தின்கட்பொருந்தி முயற்சியையுமொழித்துநிற்குமறிவில்லாதோருந், தவவலிபொருந்தியென்னையடிமையாகவுடையசிவனுளுஞ்சிவலோகத்திற்சென்றுமகிழ்ச்சியோடிருக்கும் வண்ணஞ்சிவனருளிச்செய்த சிவதருமமெல்லாவற்றையு, மிகவுமையந்திரிவறமேற்சொல்லாநின்றோம், அதனைக்கேட்பாயாக - எ - று முனிவு - முயற்சி - யீடு - வலி (க)

முற்கூறியசிவதருமம்நிலைநின்றுபகரிக்குமுறையுணர்த்துகின்றார்.

அற்புதனமலன்கூறுமறம்பலவயிங்கிதாதி *
கற்பொடுங்கலந்துநாளுபலத்தினைக்கருதுவார்க்குத் *
தற்பரனருளினாலேதருவனவனந்தகால *
நிற்பனதொன்றுதொட்டேயன்பனைநீங்காப்பாங்கால் *

எ - று கண்டோர்க்குஅதிசயத்தைவிளைப்பானாய்-நின்மலனாயிருக்கிற - சிவனருளிச்செய்தவறங்கள்பலவுமுளஅவறறுட்கொல்லாமைமுதலியசிவதன்மங்கள்பத்தும் - எல்லாத்தன்மத்துக்குமேலாய்ச்செய்தோனைப்பற்றிநிற்குங்கற்பின்றன்மையோடும்பொருந்திச்சிவனருளினாலேநானாவிதமானபலத்தைவிரும்பினோர்க்குவிரும்பினபடியேகொடுக்கும் - அஃதமன்றித்தம்மையியற்றுமன்பனைநீங்காதவுரிமையினாலேபிரவாகரூபியாகத்தொன்றுதொட்டெண்ணிறந்தகாலமழியுபெறநிலைபெற்றுநிற்பனவாம் எ - று (உ)

அந்தஅயிங்கிதாதியைவகுத்துணர்த்துகின்றார்.

அரிங்கிதைபொறையேமெய்ம்மையறைநலேயரியதானே *
யுபார்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே *
வியந்தவர்ச்சனையேமெய்யுன்வெறுத்துறுதவமேமேனி *
நயந்தபாவனையேயென்னத்தசமிவைநன்றெந்நாளும் *

எ - து கொல்லாமையும்பொறையுஞ் - சத்தியவாக்கும் -பெறற்கரியதானமாகியபழிபாவத்துக்கஞ்சுதலும் - புண்ணியங்களிலேயிருந்த - ஆதரவும் - உள்ளமுதலியவற்றையொடுக்குமடக்கமுடைமையும் - கொடையும்-யாவரும்வியந்துசொல்லுஞ்சிவார்ச்சனையும் - ஊனிறைந்தசரீரத்தைவெறுத்துச்செய்யுந்தவமுஞ்-சதாசிவாதிவிக்கிரகங்களைவிரும்பினதியானமும் - ஆகத்தருமங்கள்பத்து - இந்தத்தருமங்கள் - எக்காலமுநன்மையையுதருவனவாம் - எ - று (௩)

ப்பாட்டிலேடையறிவாயாக எ று

உடையென்னுமையுருபுருவ்வுருபாய்மயங்கிற்று [௬]

குற்றத்தோடுகூடியொருநாண்முதலொன்பதுநாளீருசச்சிவபூசை செய்தோரதற்கதற்குரித்தாகப்பெறும் பயனை யொன்பது செய்யு ளாலுணர்த்துகின்றார்

அழுக்கினையறுக்கவல்லரல்லராயாகந்தன் னி *
லிழுக்குடையவருமீசனிணையடிக்கொருநாளிட்ட *
பழுப்பிலைப்பாங்கினாலேபற்றியேபைசாசத்தை *
யுழுக்குமுன்விதத்தையுண்டுகளிப்புறவுறைவருள்ளே *

எ து சரீரத்தினசுசியை நீராடன்முதலியவற்றாற் போக்கமாட்டாதவருமா யழுக்காடையுடுக்கு மவரானமலினர்களும் ஒருநாட்சிவனது திருவடியிணையின் கட்கொம்பினுமுதிர்ந்த பழுப்பிலை கொண்டருச்சித்த நன்மையினாலே பேயினது தன்மையை யடைந் தூசினமாங்கிசங்களை பொசித்துள்ள மகிழ்ச்சி மேலிடப்பை சாசபுவனத்தின் கணிருப்பரொன்றவாறு

ஈண்டுக்கூறியபைசாசம்புத்தித்தத்துவத்திற்பைசாசயோனியெனவறிக உழு க்குமுன் கழியுமுனென்றுசொல்வாருமுளர் உள் எ து இடம் [௭]

சினத்தினாற்சிவந்தகண்ணர்சிறப்புறுவினையுந்தீர்ந்த *
மனத்தினாரிரண்டுவாரமலர்சிவனடியின்வைக்கிற் *
றனக்கிணையில்லாதாருமவர்தமைச்சாரச்செய்வன் *
றுனைத்தெழுமரக்கர்தொக்கபுரத்தினுட்டுளக்கந்தோயார் *

எ - து கோபத்தினாலே சிவந்தவிழியினையுடையோராய்விசிட்டமானநல்வி னையையுஞ்செய்யாதமனத்தையுடையோருமானவர்கள் - இரண்டுநாட்சிவனதுதி ருவடியின்கண்மலர்களைக்கொண்டுபூசைசெய்யிற்றனக்குநிகரில்லாதசிவனும் - அ வர்களைவிரைவினெழுந்துசஞ்சரிக்குமிராக்கதர்திரண்டிருந்தவுலகத்தின்கணிருக் கும்படிவைப்பன் - அவர்களொன்றுக்கும்பயப்படார்கள் — எ - று [அ]

கயக்கவேதக்கலூனுங்கலந்துணுங்கடியர்தாமும் *
வியக்கவேதக்கவீசன்விரைமலரடியின்மீது *
பயக்கவேபலமூன்றாபகலருச்சனையைப்பண்ணி *

அரிவையர் போகந்தன்னிலாதரவுடையராகிப் ❋
பரமனைப்பரிவாற்பூசையறுதினம்பண்ணினோரும் ❋
விரவியசோமலோகம்வேண்டியபடியேதாங்கண் ❋
முருகவிழ் குழலார்தம்மையின்புறமுயங்குவாரே ❋

எ - து மடவார்களோடுகூடியனுபவிக்கும்போகத்திலேயாசையுடையராய் மேலானசிவனையாறுநாள் அன்பினோடேபூசைசெய்தோருஞ், சோமசம்பந்தமானசௌமியபுவனத்தையடைந்துதாங்கள்விரும்பியபடியேமணம்விரிய நின்ற அளகத்தையுடையமடவார்களையின்பமுறும்படி கூடியாண்டனுபவித்திருப்பர் எ - று [௰௨]

விழைவினராகிப்போகவிதந்தனில்விமலன்றன்னை ❋
யெழுதினமருச்சித்தாருமிருப்பர்கள்விருப்பமெய்தி ❋
வழுவறுபோகபேதமருவிடவொருவமின்றி ❋
பிழையறுபிரசைவேந்தன் பெருமைபதியத்னைப்பெற்றே ❋

எ து பலவிதமானபோகங்களிலே விருப்பத்தையுடையராய் மலரகிதஞான சிவனையேழுநாட் பூசைபண்ணினோருங் குற்றமற்ற ✠ பிராகேசுரமென்னும் பெரியபுவனத்தையடைந்து நல்லபோகவிதங்களுண்டாக விருப்பத்தோடுபொருந்தியதனை நீங்காதிருப்பர் எ று (௰௩)

திருந்தியவேதகாயத் திரியினாற்பினயோவொட்டும் ❋
அரன்பதமருச்சித்தாரு மலரினாலார்வங்கூரப் ❋
பொருந்தியேபிரமலோகம் போகபேதங்களெல்லாம் ❋
அருந்தியேயிருப்பர்தங்க ளாசையுமகலவாங்கே ❋

எ து வேதகாயத்திரியினாலும் பூக்களாலும் சிவனது திருவடியையெட்டுநாளருச்சித்தோர்களும் ஆசைபெருகப் ✠ பிராமிய புவனத்தை யடைந்து ஆங்குள்ளபோகபேதங்களெல்லாந் தங்களிடத்துண்டாகியவாசைதீரப் போசித்திருப்பர்கள் எ - று

ஏகாரங்கள் அசைநிலை இவ்வெட்டும்புத்திதத்துவத்திற் புண்ணியாட்டகமென

---

✠ பிராகேசுரம் பிரசாபதியுலகு ✠ பிராமியம் பிரமலோகம்

வேறு (௰௪)

ஒருவனை மூவனொன்று மொன்பதுந் தினமுமன்பாற் *
பரமனை யருச்சித்தாலும் பாம்பணைப்பள்ளிவள்ளல் *
புரமதுபொருந்திவாழ்வர் போகபேதங்கள்பொங்க *
அரியனயாவுமில்லை யவர்தமக்கமலனாலே *

எ-து மால்பிரமரைப்பசுவர்க்கமென்று பிரியாது பதியாகியசிவனோடு கூட்டிமும்மூர்த்திகளையுமொருகடவுளென்று சம புத்திபண்ணிமேலாய சிவனை யுள்ளன்பினாலே யொன்பதுநாளருச்சனைசெய்வாராயின் அவர்கள் நின்மலனாகிய சிவனருளினாலே யரவணையிலே துயிலுந் திருமாலினது குணதத்துவத்தில் வைகுண்டபுவனத்தையடைந்தாங்குள்ள போகவிதங்கள்பெருகஅவைகளைநுகர்ந்துவாழ்வர்கள், அவ்விடத்தவர்களுக்குப்பெறற் கரியபொருள்களொன்றுமில்லை எ-று

இச்செய்யுளளவுங்குற்றத்தோடு கூடிச்செய்தார் பூசையின்பயனுணர்த்தியவாறுகண்டுகொள்க (௰௫)

மேற்குற்றமறப்பூசைசெய்தோர்க்கே சிவலோகமெய்துமென்பதுணர்த்துகின்றார்

செப்பியவிதற்றரிது சிவபுரமதனைச்சேர்வர் *
ஒப்பிலாவொருவன்றன்னை யொருமையவுணர்ச்சிசோரந் *
தப்பறப்புரிந்தபூசைத் தபோதனர்தாமுமாங்கண் *
எப்பயனரியதாக வியம்புவதெளியதேநாம் *

எ-து இங்ஙனங்கூறியவைகுண்டபுவனத்துக்கு மேலேசிவபுரம்விளங்காநிற்கும், அந்தச்சிவலோகத்தை ச்சிவனேகடவுளென்றொருமைப்பாடுபொருந்தியவறிவுமேலிடத்தனக்குநிகரில்லாத சிவனைநுண்கிகமற வருச்சனைசெய்யுந் தவத்தையுடையோர்களையடைவர், அவர்களுக்கவ்விடத்திலெந்தப்போகந்தான்பெறற்கரியதாகச்சொல்லுவோமாதலாலெல்லாப்போகமுமெளிதாகவேவரும் எ-று (௰௬)

அந்தச்சிவலோகத்தின்சிறப்புணர்த்துகின்றார்

தினகரருதையகோடி தேசெனத்திகழ்ந்ததேர்கள் *
இனையவென்றளக்குமெண்ணை யிகழ்ந்தெழிலிசையநிற்கும் *
மனநினைவதனில்வேண்டு மகிழ்ச்சியும்வாய்க்கச்செய்யுந் *
தனைநிகரில்லிதங்கும் புரிவளஞ்சாற்றலாமே *

எ-து கோடிசூரியருதையஞ்செய்த பிரகாசம்போலவிளங்காநின்றவிமானங் களிவ்வளவென்றளவிடுமளவைக்கடந்தழகு பொருந்தவெங்குநெருங்கி நிற்குஞ்சிவபுரமானது அவ்விடத்திருப்போர்தங்கண்மனநினைவின் கண்விரும்பியசுகபோகங்களையும் வாய்க்கும்வண்ண முண்டாக்கு மாகையிலே தனக்குநிகரில்லாதசிவனெழுந்தருளியிருக்குஞ்சிவபுரத்தின்வளப்பத்தையொருவராலு மளவிட்டுச்சொல்லப்படாது எ-று ஏகாரம் எதிர்மறை (௰எ)

சிவனெழுந்தருளியிருக்குந்திருப்பதியின் மரித்தவான்மவர்க்கங்கள்சிவலோகமடையுமென்றும் சிவனையன்போடுகூடி ப்பூசை செய்தோர்சிவலோகமடைவது சொல்லவேண்டாமே யென்பதுணர்த்துகின்றார்

தெரிப்பருந்தேவதேவன் றிருப்பதிவட்டந்தன்னின் ※
மரித்திடுஞ்சராசரங்கள் சிவபுரமதனுள்வாழு ※
மருச்சனைபுரிந்தமற்றை யன்பர்களடைந்துவாழ்கை ※
தெரித்திடவேண்டுமேயோ தெருண்டநற்சிந்தையார்க்கே ※

எ-று வெளி (௰அ)

கண்டுபாவித்துப்பூசைசெய்தோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

உண்டொரொண்பொருளென்றுள்ள த்தோர்கிலார்தாமுமோர்ந்த ※
பண்டிதர்பணியக்கண்டு பணிந்திடிற்பரமவென்னிற் ※
றண்டரளங்கள்போலுந் தாரகாதேசந்தன்னில் ※
எண்டிகழ்நாலேழ்கோடி யிரதபேதத்துளேய்வார் ※

எ-து சடசித்துக்களெல்லாவற்றினையு மாளுமொரு ஒள்ளிய கடவுளுண்டென்றுதம்முள்ளத்தின்கண்ணறியாதமூடரும் அந்தப்பொருளை யுண்டென்றுணர்ந்தஞாதாக்கள்வணங்கக்கண்டுதாமும்வணங்கினும் பரமவென்று துதிப்பினும் அவர்கள்குளிர்மையுடைய முத்துக்கள் போலுமொளியினையுடைய நக்ஷத்திர பதத்திலே எண்டொகைவிளங்காநின்றவிருபத்தெட்டுக்கோடி விமானங்கள்சூழவதனுடுவேபொருந்திவாழ்வர் எ-று (௰௯)

சிவதன்மங்களைத்தமக்கியன்றமரியாதிசெய்தோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

இயன்றனவியற்றியொரு மற்றையபுரத்திலெய்தி
பயன்றனைப்புசித்துமீண்டு பாரிடைப்பிறந்துபாங்காய்
முயன்றருந்தவத்தைமூவா முதல்வனையகத்துணன்முன்னி
யயன்றனைப்பயந்தவாதி யரன்புரியடைவரன்றே

என்று தமக்கியன்றமரியாதிசிவதன்மங்களைச்செய்தோர்களும் வைகுண்டம் முதலியகீழுள்ளபதங்களிற் போகத்தைக்கிரமத்திலே பொருந்தியங்கங்குள்ளபொசித்துத்தொலைந்தவாறே மீளவும்பூமியின்கண்வந்துதித்து முன்னாமலென்று மொருதன்மையாயிருக்குஞ் சிவனையுள்ளத்துட் கருதிச்செயற்கரியதவத்தையொருமைப்பாட்டுடனேசெய்து பின்பு நான்முகனைப்படைத்தமுதல்வருமாயசிவனதுசிவலோகத்தையடைவர் என்று அன்றே என்றது அசை (௨௰)

இங்ஙனங்கூறியசிவலோகத்தின் மேலுமூன்றுபுவனமுண்டென்று தொகுத்துணர்த்துகின்றார்

உரைத்தசிவபுரத்தின்மீது முப்புரமொருமூன்றுண்டோர்க
தரித்தமீவற்றுமரன்றங்குந் தானமொன்றதற்குமீது
பரித்தபைங்கிள்ளைச்செங்கை ப்பாவைதன்பதியொன்றப்பாற்
றெரிப்பருந்தேசாரீசன் சிவபுரஞ்செப்பாமொப்பே

என்று முற்கூறியவிந்தச்சிவலோகத்தின் மேலுமூன்றுலோகமுளதாம் இதனை யறிவாயாக அஃதியாதெனிற் கையின்கண்வேலையேந்துங் குமாரக்கடவுளெழுந்தருளியிருக்கும் புவனமொன்று, அதற்குமேலே பச்சைக்கிளியைச் சிவந்தகையிலேதாங்குமுமையினது புவனமொன்று அதற்குமேலே யளவிறந்த பிரகாசத்துடனேகூடியிருக்குஞ்சிவனதுமகாசிவலோகம், அதற்குவமையொன்றுமில்லாமையால் வேறொன்றையொப்புச்சொல்லோம் . என்று (௨௧)

அவற்றுண்முற்கூறிய கந்தபுவனஞ் சத்திபுவன மிரண்டினையுமடைவாரின்னாரெனவிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

சத்தியைத்திரிசூலத்தை த்தரித்தபொற்கரத்திறைவனை
வித்தகன்றன்னைப்பொன்னை யொத்தொளிர்மேனியானை

முத்தனை முனோத்தவாறு முகத்தனை முதல்வன்றன்னை ※
மொய்த்தகண்மணியின்மேலே முருகனை முன்னுவாரோ ※

எ-து வெளி (௨௨)

இருப்பர்கள் குமரன்வாழு மெல்லையிலெல்லையில்லா ※
விருப்புறப்போகபேத மேவிடவிதற்குமீதே ※
யிருப்பர்களுமையைத்தங்கள் கருத்தினுளிருத்தினோர்கள் ※
பொருப்பெழுமருக்கர் கோடிநிறமெனப்புந்திசெய்தே ※

எ-து முற்கூறியசிறப்பினையுடைய குமரக்கடவுளைத்தியானஞ்செய்வோர்அந்தக்குமரன்வாழும் புவனத்திலே சென்று தாங்கள்விரும்பிய படியே யளவிறந்த போகங்களெல்லாம்பொருந்த விருப்பார்கள் உமாபரமேசுவரியையுதையகிரியின் கண்ணுதிக்குங்கோடிசூரியப்பிரகாசம்போலத்தியானஞ்செய்து தம்முள்ளத்தின் கண்வைத்தோர்கள் அந்தக்கந்தலோகத்துக்கு மேலானஉமாபுவனத்தின்கணிருந்துவாழ்வர்கள் எ-று (௨௩)

மேனிமுத்தமுறையானை மகாசிவலோகத்தின் கணுறை வாரின்னரெனவுணர்த்துகின்றார்

தெளிபளிங்கனையமேனி திரிநயனங்கைத்தங்கு ※
மொளிவளர்சூலமாலை யுதாரகையபையவங்கை ※
நளிசடையுடையநாதனடியிணை யகத்துணைச்சி ※
யுளினருமவனையொப்பச்சிவபுரத்துறைவருய்ந்தே ※

எ-து அழுக்கற்றுநின்மலமான படிகம்போன்ற திருமேனியையு மூன்றுதிருநயனங்களையுமொளிவளராநின்றசூலமுஞ் செபமாலையும் பொருந்துமேலிற்கைகளிரண்டினையும் வரதமும்அபையமும்பொருந்தியகீழிற்கைகளிரண்டினையு நெருங்கியசடாமகுடத்தினையு முடையசிவனதுதிருவடியிணையை யுள்ளத்தின்கண்விரும்பித்தியானிப்போரு மந்தச்சிவனுக்குநிகராகச்சாரூபம்பெற்றுமகிழ்ச்சியடைந்து மகாசிவலோகத்தின்கணிருப்பர் எ-று
உளினருமென்றவும்மையால்வணங்குவோருமெனவறிக (௨௪)

மகாசிவலோகத்தையடைந்தோர் மீளப்பூமியின்கட் பிறவாமன் முத்தியை யடைவரென்றுணர்த்துகின்றார்

மேலாயசிவலோகத்துள் விரவினோரொருமைமேவி ✽
ஞாலமுமடையார் ஞாலமிறுதியை நாசமாக்குங் ✽
காலமுமனையவுள்ளக் கருப்பினையறுத்துக்காட்டு ✽
மூலபண்டாரந்தன்னை முகந்துகந்திருப்பர் முத்தர் ✽

எ - று. மேலாயவிந்தச்சிவலோகத்தின்கண் அடைந்தோராய்விடத்திலே ஞானயோகத்திலொருமைப்பாட்டைப்பொருந்தி மீண்டு பூமியின்கண்ணும் பிறவாராய்ச் ✠ சிவாத்தபிருதுவியந்தமானவெல்லாற்றினையுஞ் சிப்பிக்குஞ் சங்காரகாலம்வரும் பொழுது தம்முள்ளத்தின்கட்கரியவிருளான ஆணவபாசங்களை யொழித்துச்சிவ ஞானங்காண்பிக்குமூலபண்டாரமாகிய ஞானானந்தசுவரூபமத்தைப் பொருந்தித் தலைமைபெற்றுமுத்தராயிருப்பர் எ - று.

இ மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்துமுந்துமினே என்பது திருவாசகம் [[illegible]]

மேல் மாட்டெனிந்தொழுகலென்னு மநுத்தியுத்தபோதமையமுமுதலாயினோர்க் கத்தியுத்தபதங்களையுணர்த்துகின்றார்

அந்தியாமினுக்குமயலாமியாமின்போக ✽
மந்நினைப்பகர்வாமெட்டுச்சித்தியும் பரிவதூர ✽
விந்தநல்லியலின் மூமெட்டெனப்பட்டசித்தி ✽
முந்தியேமைசாசாதிக் கூறுமுறைமொழிவாமோர்ந்தே ✽

எ - து. ஈற்றினின்ற கோபுரவியலுக்கு முற்கயலாகிய பரிகாரவியலுக்குமய லானசிவஞானயோகவியலிலேயட்டாங்கயோகவொழுங்கினையு மதனாலுண்டாம

---

✠ பூதம் ரு புலன் ரு ஞானேந்திரியம் ரு கருமேந்திரியம் ரு அந்தக்கரணம் ௪ ஆக ஆத்துமதத்துவம் உ௰௪ காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை ஆக வித்தியாதத்துவம் எ சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஆகச் சிவ தத்துவம் ரு

இ திருவாசகம் திருப்பாண்டிப்பதிகம்

காலமுண்டாகவேகாதல்செய்துய்ம்மின்கருதரிய
ஞாலமுண்டானொடுநான்முகன்வானவர்நண்ணரிய
ஆலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான்றன்னடியவர்க்கு
மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே

ட்டமாசித்தியினையும் விருப்பமிகும்வண்ணஞ்சொல்வோம் அஃதன்றி நன்மைமபொருந்தியவிந்தச்சிவதருமவியலுள்ளும்பைசாசமுதலிய புவனங்களிலுள்ளோர்க்கெட்டுசித்திகளுமேறியேறிவருமுறையையாராய்ந்துசொல்லாநின்றேம் எ - று (உ௬)

பைசாசாதிகளுக்குச்சித்திகள் குணங்களேறிக்குறைந்து சீவிக்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

எட்டெனப்பட்டசித்திமிசைந்திடும்பைசாசாதி ※
சிட்டர்கள்சேருமெல்லைசிவபுரமிறுதிதன்னி ※
லொட்டியகுணமுமேன்மேலுயர்ந்துயாந்தொழுருமோரில் ※
விட்டொளிர்குணத்தின்மேன்மைவிளங்கிடவிளம்புவாமே ※

எ - து புத்திதத்துவத்திற்பொருந்தியதேவயோனியாகியபைசாசமுதலிய புவனத்தைப்பொருந்தியுயர்ந்தோர்கள் சேருமேலாயசிவலோகமீறனபதங்களிலேயெட்டுச்சித்தியுமதனோடுகூடியகுணங்களு மொருபுவனத்திலிருப்பாரைபபற்றவொருபுவனத்திலிருப்பார்க்குமேன்மேலுமதிகமதிகமாயுண்டாம், அஃதெங்ஙனமென்னிற, பைசாசபுவனத்திருப்போர்க்கெண்குணமு, மிராக்கதபுவனத்திருப்போர்க்குப்பதினாறுகுணமு, மியக்கபுவனத்திருப்போர்க்கிருபத்திநாலுகுணமுங், கந்தருவபுவனத்திலிருப்போர்க்குமுப்பத்திரண்டுகுணமு, மிந்திரபுவனத்திலிருப்போர்க்குநாற்பதுகுணமும், சௌமியபுவனத்திருப்போர்க்குநாற்பத்தெட்டுக்குணமும், பிராஜேசுரபுவனத்திருப்போர்க்குஅன்பத்தாறுகுணமும்,பிராமியபுவனத்திருப்போர்க்குஅறுபத்துநாலுகுணமும், அவ்வாறுசிவலோகமீறனபதங்களிலிருபபார்க்குமேறியேறிவரும், அதனைவிளங்கவாராயில்விட்டுவிளங்காநின்றகுணத்தின்விசிட்டத்தைமேற்சொல்லாநின்றேம் எ - று [உ௭]

திருமான்முதலாயினோர்க்குக்குணங்களேறிக்குறைந்து சீவிக்குமுறையுணர்த்துகின்றார்.

மண்புனலனல்கால்வானமனமகங்காரம்புத்தி ※
யொண்குணமூலமென்னுமொன்பதும்விசேடித்தோங்கிக் ※
கண்கமலத்தமாலைக்கலந்துளேவிளக்குமெட்டே ※
வண்கமலத்தோனுள்ளேமருவியேவிளக்குமன்றே ※

எ - து பிருதிவிமுதலியவைந்துமனமகங்காரம்புத்தியுமொள்ளியகுணத்து

க்குபாதானமானபிரகிருதியுமெனக்கூறுமித்தவொன்பது தத்துவங்களுஞ்செந்தாமரைக்கண்ணையுடைய நாரணனைப்பொருந்தி யவனிதையத்திருள்ளேமிகவுஞ்செறிந்துநின்றறிவைவிளக்காநிற்கும், குணநீங்கலாகநின்றவெட்டுத்தத்துவங்களோ யழகியதாமரைமலரின்கணிருப்போனானான்முகனுடையவிதையத்திலுள்ளே பொருந்தி நின்றறிவைவிளக்கும் எ - று

அன்று - எ - து - அசை [௨௯]

புத்திமையல்லாவெல்லாம் பொருந்தியபிரசவேந்தன் ※
சித்தையைத்தெருட்டுமிந்த த்திறத்தினிற்கீழுந்தோக ※
முத்தியேபிருந்தார்பேற்றை முற்றியவினைபிறுதிலே ※
பித்தியேசெறிந்தார்தாமு மகிழ்வுறப்பெறுவரன்றோ ※

எ - து புத்திதத்துவமல்லாத கீழ்நின்றவேழுந் தம்மைப்புணர்ந்தபிரசேசனாதிசித்தத்தைப்பொருந்திநின்றறிவைவிளக்கு,மிந்தப்படியேகீழுள்ளபுவனத்தோர்க்குமடைவிலொவ்வொருதத்துவங்குன்றந்தாநின்றறிவை விளக்குமென்றாயகட்டைமிப்பதங்களிலேமுற்காலத்திலேசென்றிருப்போர்பெறும்பயன்களைப்பூமியின்கண்செய்தநல்வினையிருதிலேபின்புசென்றடைவோருமுள்ளமகிழ்ச்சியுண்டாகப்பெறுவர் - எ - று - [௩௰]

சிவனைக்குறித்துச்செய்ததப்பு நபோகாதுபலத்தைவிளைக்குமென்றும்பலத்தைக்கொடுப்பன்சிவனென்றுமுவமைமுகத்தாருணர்த்துகின்றார்.

தனையினையிலக்கதாகவெறிந்தகற்றவருதற்றே ※
யாரணையுங்குறித்துச்செய்தவினைபழுதாகாதற்றே ※
பரமனுஞ்செய்தார்செய்நிப்பலத்தினைக்கொடுப்பன்யாங்காற் ※
குருலகுவென்னும்பேதம்வினைதொறுங்குறித்துக்கொண்டே ※

எ - து வெளி - இதனுள் - குரு - எ - து - அதிகம் - லகு - எ - து அற்பம் [௩௧]

மேன்முடிந்தது முடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

வேறு.

என்றுதருமத்தொடுபலத்திறமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினையை *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - று - வெளி [ரூக]

மேற்சிவத்துதியுணர்த்துகின்றார்

வேறு.

உற்றவர்தீவினையோட்டினனேயுண்பலிதேர்தலையோட்டினனே *
பெற்றுபுனற்சடையேற்றினனேயிடைக்கொல்லைவெள்ளேற்றினனே *
கற்றவருக்கறங்காட்டினனேகடுநடமாடிடுகாட்டினனே *
பற்றியவர்க்கருள்பாட்டினனேபாங்கிலவென்னையும்பாட்டினனே *

எ - று தன்னையடைந்தோரதுகொடியபாவங்களைத் தொடர்ச்சியறக்கெடுத்தோனே, தலையோட்டின்கண்ணுண்ணற்குரியபிச்சையையங்கங்கேசென்றுதேடுவோனே, திரையெறியாநின்றகங்கையாற்றினைத்திருச்சடையின்கணேற்றிமுடித்தோனே, முல்லைநிலத்தின்கணுளதாயவலியினையுடையவெண்மையாகியவிடபத்தையுடையோனே, தன்பாற்கற்றோரானசனகர்முதலியோர்க்கறமுதலியநான்கினையுமறிவித்தோனே, சங்காரநிருத்தத்தைச்செய்யுஞ்சுடலையையுடையோனே, யெப்பொருளையுந்துறந்துதன்னைப்பற்றி நிற்போர்க்குமுத்தியையருளும்பெருமையையுடையோனே, பாடுதற்குரியனல்லாதவென்னையும் பாடுவித்தப்பாட்டினைக்கொண்டருளினோனே என்றவாறு [ரூ௨]

இதுவுமது.

கழலெனநாகமுங்கட்டினனேகண்ணின்விழித்தடுங்கட்டினனே *
மழலைநல்வீணையின்வாசகனேமயலெனக்கற்பிடும்வாசகனே *
தழைமயிற்சாயலோர்பாலினனேசாலத்தழைத்தகொம்பாலினனே *
மிழலையுமூரெனமேவினனேவெம்புரமெய்தடுமேவினனே *

எ - து திருவடிமலரிலேவீரக்கழல்போலப்பாம்பினையுமணிந்தோனே, பகுவான்மாக்களைத்திருக்கடைக்கண்ணோக்கியவர்கள் பாசத்தைச்சேதிப்போனே, தெளியாதசொல்லையுடைய நல்லவீணையினொலியையுடையோனே, யெனக்குமனமயக்கமறுதற்குக்காரணமானசிவாகமவாக்கியங்களையுடையோனே, தோகைமயில்போலுஞ்சாயலையுடையவுமையையொருபாகத்திலுடையோனே, மிகவுந்தழைத்தகோடரங்களையுடையவடதருவினிழலையுடையோனே, திருவீழிமிழலையையுந்தனதுதிருப்பதியாகவுறைந்தோனே, கொடியமுப்புரத்தினையெய்துநீறாக்குமம்பினையுடையோனே எ - று [௧௧

மேற்குமரன்றுதியுணர்த்துகின்றார்

வேறு.

வாடாவனமுலைதோடார்சுரிகுழல்வாளார்விழியினையுமைபாக *
னாடாவயனரிதேடாவடிமுடியோராதயர்வுறவருளீசன் *
காடேயிடமெனநாடாநடநவில்காதார்குழையினனடிசேர்தற் *
கீடாரிருவினைகூடாவகைதருமோராறுமுகனியனூலே *

எ - து அழகுநிறைந்தசண்முகனருளிச்செய்தவிந்நூலானது, தளராதவழகையுடையமுலையினையும்பூக்கணிறைந்தசுருண்டவளகத்தினையும்வாள்போன்ற இரண்டுவிழியினையுமுடையவுமையைத்தன்பாகத்திலே யுடையோனு மயனுமரியுந்தம்மில்மாறுபட்டடியுமுடியுந்தேடிக்காணமாட்டாதமயங்கிநிற்பவர்களுக் கனுக்கிரகஞ்செய்யுமிறைவனுமாய்ச்சங்காரகாலத்தின் கட்சுடுகாடேயிடமாகக்கருதித்திருநடஞ்செய்யுங்காதின்கணணிந்தசங்கக்குழையையுடையோனுமானசிவனதுதிருவடியை, யாமடைதற்கு, வலிபொருந்தியவிருவினையுமேறாவண்ணம்ஞானத்தைத்தரும் எ - று [௧௨]

அகத்தியன்றுதியுணர்த்துகின்றார்.

கயலாரிணைவிழிமையாரிணைமுலைகலவாவவொடுகளியாரோ *
மயலாரவர்வரயலாரலரொனுமறியாமையுநணியறுவாரோ *
வியலார்கயிலைநன்மலைவாழ்விமலனவினையார்மலரடிவிழைவாரோ *
புயலார்வளமுறுபொதிமாமலைமுனிபுகழேவிழைவொடுபுகல்வாரோ *

எ - து எக்காருமேகங்கணிறைந்தவளமைபொருந்திய பொதியமாமலையி ன்கண்வாழும் அகத்தியமுனிவனது கீர்த்தியையாசையாலேதுதிப்போர், கயல் போன்றவிரண்டுகண்ணினையுடையபடைவாராதுமுலைவிலைகளைப்புணர்ந்தவர்களோ டுமனமகிழார், அஃதன்றியவர்நமக்கினியரிவர்நமக்கினியரல்லரென்றுகருதும ருஞானத்தையுமிகவுமொழிப்பார் அஃதன்றிவிசாலம்பொருந்தியநல்லகயிலைமலையி ன்கண்வாழுநின்மலனுஞ்சிவனது மணம்பொருந்தியதிருவடிமலரையும்விரும்புந் தன்மையுடையோராவர் எ - று

விழைவொடுபுகல்வாரென்பதனையெழுவாயாக்கியேனையமூன்றினையும் பய னிலையாகக்கொள்க - ஏகாரங்கள் - அசைநிலை [௯௫]

ஐந்தாவது சிவதருமவியலுரை முற்றும்



## ஆறாவது பாவவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின்ஓத்து நுதலியதூஉமோ த்தினதுபெயருரைப்பவேவிளங்கும் - ஆயினிவ்வோத்தென்ன பெயர்த்தோவெனினிரையமெய்துவோரியற்றும் பாவபேதங்க ளைக்கூறிற்றாகலாற்பாவவியலென்னும்பெயர்த்து, இதனுளித்த லைச்செய்யுளென்னுதலிற்றோவெனினின்னதுரைப்பாமெனமுன் மொழிந்துகோட்லையுணர்த்துதனுதலிற்று.

முனிவரதருமபேதமொழிந்தனம்பலங்கண்முற்று *
மினிநிரயத்தையெய்வாரியற்றிடும்பாவபேத *
முனையுரைசெய்வாமோர்நீயுடலிறுவாயிறைகுந் *
துனிவினைத்துரிசுநீங்கக்கேட்டிடுஞ்சூழ்ச்சியோர்க்கும் *

எ - து வாராயிருடிகளின்மிக்கோனே, முன்னையியலுட் சிவதருமபேதங்க ளையுமவற்றினாலுண்டாம்பலன்களெவற்றினையுஞ்சொன்னோம், மேலிந்தவியலினை யும்பூசித்துக்கேட்குங்கருத்தினையுடையோர்க்கு, மனம்வாக்குக்காயங்களினாலு

ண்டாகும்பொல்லாத தீவினைத்துயரமிகுங்கும்வண்ணநரகமெய்துவோர்செய்யும்பாவபேதங்களையுனக்குச்சொல்லாநின்றோம், அதனைக்கேட்பாயாக எ-று உன்னை யென்னுமிரண்டாமுருபு நான்காவதாய்மயங்கிற்று [க]

பாவஞ்செய்வோரின்னரென்பதூஉமப்பாவபேதமிஃதென்பதூஉமுணர்த்துகின்றார்

புரிந்துளார்பாவமுன்னும் புக்குமாநிரயமீண்டு *
மிருந்தவாதனையினாலே யியற்றுவர்பாவம்பின்னும் *
விரிந்திடுமனேககோடி விதமுறப்பாவமெல்லாந் *
தெரிந்திடிற்றூலமாதித் திரிவிதமாகிச்சேரும் *

எ-து முற்செனனத்திலும் பாவத்தைச்செய்தோர்கள் நரகத்தின்கட்புகுந்தனுபவித்துத்திரும்பவுமந்தவாசனாபலத்தினாலேபூமியின்கட்செனித்துப்பின்னும்பாவத்தையேசெய்வர்கள் அந்தப்பாவவிதங்களைவிரிக்கினனேககோடிவிதமாகவிரியுமதனைத்தொகுத்தறியிற்றூலமுதன் மூவிதமாகிப்பொருந்தும் எ-று [உ]

தூலமாதியிவையென்பதூஉமவற்றுட்டூலகன்மமேயீண்டுக்கூறுவதூஉமென்பதுமுணர்த்துகின்றார்

தூலமேசூக்கந்தானே சூக்குமதரமேயென்றிங் *
கேலவேமூன்றுகூறா மிவற்றினுட்டூலந்தன்னைக் *
கோலியேதொகுத்திந்நூலிற் கூறுவமதுதான்கூறின் *
மாலுறுமன்மேவாக்கே வடிவமேயெனவுமூன்றாம் *

எ-து முற்கூறியபாவவிதந்தூலமென்றுஞ்சூக்குமமென்றுஞ் சூக்குமதரமென்றுமிவ்விடத்து மூன்றுபேதமாய்ப்பொருந்துமிந் நமூன்றினுள்ளுந்தூலபேதத்தையேயமைத்துத்தொகுத்திந்தநூலின்கட் சொல்லாநின்றோம் அதனையறியுமிடத்துமயக்கம்பொருந்தியமனத்தாலும் வாக்காலுங் காயத்தாலும்வருவனவென மூவிதமாம் எ-று
ஏகாரங்கள் எண்ணின்கண்ணும்அசைநிலைக்கண்ணும்வந்தன [௩]

முதற்கட்டொகுத்துப்போந்தமனாதிகண்மூன்றுமொவ்வொன்றுநான்குபேதமாமென்பதூஉமவை கொடுக்கும்பயனிஃதென்பதூஉமுணர்த்துகின்றார்

பேசியதூலபேதந் தனித்தனிநான்குபேத *
மூசமூந்நான்குபேத முற்றுமம்மூன்றுமின்னு *
மாசிலோரறியும்வேலை விரிந்திடுமனேகமாக *
நாசமாநரகபேதத்துயரினை க்கொடுக்குநாளின் *

எ து முன்னர்க்கூறியதூலபேதமென்னு மனோவாக்குக்காயங்களொவ்வொன்றானுவிதமாம் அவையிற்றைத் தொகைகூண ப்பன்னிரண்டு விதமாக முடியு மந்தமனுதிகண்மூன்றுங்குற்றமற்றபெரியோர்களராயுங் காலின்னமுமனேகவிதமாகவிரியு மங்ஙனம்விரியும்பாவபலம் நரகவிதங்களிலேயான்மாக்களுக்குத்துக்கத்தைவிளைத்தனுபவித்துத்தொலைந்தவாறேதாம்நசிக்கும் எ று [௪]

நிறுத்தமுறையானே மனத்தினாலுண்டாம் பாவவிதங்க ணான்குமி
வையென்பதுணர்த்துகின்றார்

அன்னியன்மனையாடன்னை யணையுமாதரவுகூர *
வுன்னுதலயலார்தங்களுடைமையுங் கொள்ளவுன்னல் *
பின்னையுமவர்தம்பண்டம் பிழையுறவிக்கப்பேண *
லென்னுமிம்மூன்றுங்கொல்ல வெண்ணலுமனத்தினீட்டம் *

எ து பிறனொருவனுடையமனைவியை க்கூடவேணுமென்னுமாசையாலேயதற்கேற்றசெயல்களைநினைத்தலும் பிறருடையவுடைமையை த்தாமெடுத்துக்கொள்ளுதற்குவிசாரித்தலும் அவர்களுடையவுடைமையை ச்சேதமாக்கவிசாரித்தலும் பிறிதொருயிரைக்கொல்லநினைத்தலும் ஆகநான்குமனத்தினாலுண்டாம் பாவவிதங்களாம் எ று [௫]

வாக்காலியற்றும் பாவங்கணான்குங்காயத்தினாலியற்றும் பாவங்கணா
ன்குமிவையென்பதூஉம் பின்னருமனுதிகளாலதிபாதகமுதலாயுள்ள
னவிரியுமென்பதூஉமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அழுகையுங்கோளும்பொய்யு மயலபவாதந்தானும் *
வழுவியவாக்கின்பேத மற்றையன்மனையாடோளைத் *
தழுவுதறமித்துக்கோறல் சராசரபேதந்தன்னைப் *
பழிபடுபண்டமுண்கை பார்பொருளதனைப்பற்றல் *

எ - று அகாரணத்தாலழுகையுங் கோட்சொல்லும் பொய்யுரைத்தலும் பிறன்பழிகூறலுமான விந்நான்கும் வாக்கினால்வரும்பாவ விதமாம் பிறனொருவன் மனைவியைப்புணர்தலு நடப்பனவுநிற்பனவுமான வுயிரின் விதங்களையடித்துக்கொல்லுதலும்நல்லோராணிற்றிக்கப்படுமுணவுகளையுண்டலும் பிறர்பொருளைக்கவர்தலும் எ - று [௬]

என்னுமிந்நான்குங்காயத் திட்டியபாவபேதம் *
பன்னிருபேதமாக மனுநிலைப்பகர்ந்தாமின்னு *
மன்னியமனுநிமூன்று மலினதிபாதகாதி *
யென்னவேயிரியுநொய்தி னவற்றையுமியம்புவாமே *

எ - து இப்படிமுற்கூறியகன்மநான்குங் காயத்தினால்வரும்பாவவிதமாமிப்படியேமனவாக்குக்காயங்களால் வருந்துலபாவவிதங்களைப்பன்னிரண்டுவிதமாகச்சொன்னோம், அஃதன்றியின்னமுநிலைபெற்றமனுநிகள் கூறியத்தாலுமமுக்கிலையுடையவதிபாதகமுதலிய பாவங்களுண்டாகும்வண்ணம்விரிவனவாயவற்றையுஞ்சுருக்கமாகச்சொல்லாநின்றோம் எ - று

ஆதியென்பதனால் மகாபாதகமு முபபாதகங்களுமவையிற்றின துல்லியங்களுமெனக்கொள்க [எ]

முதற்கட்டொகுத்தவற்றுளதிபாதகமீதென்பதுணர்த்துகின்றார்

தாரகன்றன்னைச்சாதத் தடங்கடற்றளர்வார்தம்மைப் *
பாரகன்றனையும்பாரும் படைத்தவன்றனையும்பாங்காற் *
காரகன்றன்னைவாங்குங் கடவுளைக்காய்ந்தநெஞ்சர் *
நாரகர்மீளுநாளும் பிறிதியனவிற்றுவாமே *

எ - து பிறவியாகியபெரியகடலின்கணமிழ்ந்தி வருந்துமவரை யக்கடலினின்றுங்கடப்பிக்குமவனுமுலகத்தைத்தாங்குமவனுமான மாயனையும் யோனிப்பதங்களையுமன்றிப்பிருதிவிமுதலிய பஞ்சபூததூலகாரியங்களையுஞ் சிருட்டிக்குமவனுனான்முகனையு முறைவழுவாமலுண்டாக்குங் காரணசொரூபனுமாயவர்களிருவரையுமீளத்தன்னிடத்திலொடுக்குஞ் சங்காரகருத்தாவாயிருக்கிற சிவனைத்தூஷணஞ்செய்திகழ்ந்தமனத்தையுடையவதிபாதகர் நரகத்தின்கண்வெகுநாங்காலங்கிடப்பர்க

ன், அதினின்றுமவர்கள் திரும்புங்காலத்தை வரையறுத்திந்தவியலுக்கயலானஅ வர்க்காரகவியலின்கட்சொல்லாநின்றோம் எ று

தாரகன் கடப்பிப்போன், பாரகண் தாங்குமவன், காரகனை பண்ணுமவன் நாரகர் நரகத்திற்கிடக்குமவர்கள் [அ]

இதுவுமது

ஒப்பிலியனாதிமுத்த னோதியவேதமாதிக் *
கொப்புயர்புரைப்பார்நிந்தையுரைப்பவருன்னுவாரும் *
வெப்பரிநிரையந்தன்னுள்வீழ்ந்துவெந்துருகிவீயா *
தெப்பொழுதேறுவாமென்றிளைத்திளைத்தேங்குவாரே *

எ - று தனக்குநிகரில்லாதுயனாதிமலமுத்தனானசிவனருளிச்செய்தவேதாகமங்களுக்கொப்பாகவுமதற்கதிகமாகவும் பிறிதொருநூலைச் சொல்லுமவரும், அந்தவேதாகமங்களை நிந்தைசொல்லுமவரு, நிந்தையைமனத்திலேநினைக்குமவரும், வெம்மையையுடையவெரிவாய்நரகத்தின்கண்வீழ்ந்துடம்பெல்லாம்வெந்தனெலாமுருகியிங்ஙனந்துயருறவுமந்தயாதனாசரீரத்தினின்று நீங்காராயிந்நரகத்தினின்றுமெக்காலங்களையேறுவோமென்றுவாடிவாடியேக்கமுமடைவர் - எ-று வீயாமை - யுயிர்விடாமை [௯]

இதுவும து.

ஒப்பிலியனாதிமுத்தனோதியபனுவலோர்ந்து *
தப்பறச்சாற்றுமாசான்றன்னையுமிகழ்ந்துசாற்றில் *
வெப்பெரிநிரையந்தன்னில்வீழ்ந்துவெந்துருகிவீயா *
தெப்பொழுதேறுவாமென்றிளைத்திளைத்தேங்குவாரே *

எ து தனக்குநிகரில்லாதவனாதிமலமுத்தனாகிய சிவனருளிச்செய்தவேதாகமங்களையாராய்ந்தையந்திரிவறவுபதேசிக்குமாசாரியனையுமவமதித்துநிந்தைசொல்லுவாராயினவர்களும் வெம்மையுடைய வெரிவாய் நிரையத்தின் கண்வீழ்ந்து முன்னர்க்கூறியதுயரினையுறுவர்கள் எ று

ஆசான்றன்னையுமென்னுமும்மை, சாதகனையும்விளக்கிநின்றது ௰

எ து சிவத்திரவியத்தையபகரித்தவனைத் தலையைச்சேதிக்கக்கடவர் அவனைத் தன்னாற்செய்யவலியில்லையாயின் வேதனங்கொடுத்தாயினும் பலவான்களாலே சேதிப்பிக்கக்கடவர் அதுவுங்கூடாதாயி னந்தத்தலத்தைவிட்டு வேறொருதேசத்தின்கட்செல்லக்கடவர் அங்ஙனமறுதேசத்திற் செல்லாமலவ்வூரிலதற்கனுமதித்திருப்பார்களாயின் அவர்களையிந்த வதிபாதகஞ்செய்தோனுக்கொத்தற்குரியராய்நரகத்தின்கணமிழ்ந்தியிளைப்பார் எ று

சிரமுமென்றவும்மையாற்கரமுதலியவுறுப்புக்களுமெனவறிக (யக)

சிவனையிகழுஞ்சிறியாரை யனையர்சிவனைப்பூசனையை *
யுவகையுறவேகண்களிக்க வுருகிப்பரவாதுபுல்வாரும் *
அவனைச்சிவன்றாளருச்சகனை யன்புசெய்யாதகல்வாரும் *
புவனத்ததிபன்பவனத்துணியமத்தலநுபுகுவாரும் *

எ து சிவனையும் அவனது அருச்சனையையுமுள்ள மகிழ்ச்சிபொருந்தும்வண்ணங்கண்களிப்பக்கண்டதனான் மனநெகிழ்ந்து துதிசெய்யாதிருப்போரும் அந்தச்சிவனையுமவனை யருச்சிக்கும் பூசகனையும் பத்திபண்ணுதுவிட்டுநீங்குவோரும் இருநூற்றிருபத்துநாலுபுவனத்துக்கு மதிபனானசிவனெழுந்தருளியிருக்குந்திருக்கோயிலினுசாரநியமங்களோடுசெல்லுமதன்றி யனுசாரங்களோடே புகுவோருஞ் சிவனைநிந்திக்குமற்பரானவதிபாதகரையொப்பர் எ று (யச)

பரமன்றிருமுன்னமுன்முன்னும் பரமகுரவன்றிருமுன்னும் *
ஒருமையுறவேவறுமையினு முதவாதவருஞ்சிறிதேனும் *
அரிதுபொருடான்பச்சிலையு மரிதாவதுமரிதாகிற் *
றிரணமதனைத்திருமுன்னை மாற்றலரிதோசெயலாலே *

எ து சிவசன்னிதியிலுஞ் சிவாக்கினியின்முன்னு மேலானஞானாசாரியனது சன்னிதியினுந்தமக்குவறுமையெய்தின காலத்தினுமேதேனுஞ் சிறிதுதமக்கியன்றமரியாதியொருப்பாடுபொருந்த க்கொடாதோரும் அங்ஙனங்கொடுத்தற்குப்பொருளரிதாகிற் பச்சிலையுங்கிடையாததோ வதுவுங்கூடாதாயிலவர்கள்சன்னிதியிற்கிடக்குஞ்செற்றையைக்கருத்துடனேதிருவலகுமுதலியவற்றாற்போக்குதலுமரிதோவரிதன்றேயாதலா லிதனுளொன்றைச்செய்யாதோருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ று

ஓகாரம் எதிர்மறை (யரு)

பொருவில்பொருளைப்புணர்ந்தாரை யல்லாரொல்லாம்பூரணையி *

விரவியுடனேயிளமதியமிசையும்பொழுதுமிணையிலியு *
மெரியுமியலுங்குருபரனு மிருக்குமிடத்தையலகிட்டு *
வினையின்விதத்தான்மெழுகிட்டு விதியாற்பூசைபுரியாரும் *

எ - து தனக்குநிகரில்லாதசிவத்தைக் கூடிவிட்டடைபுரியுஞ் சிவஞானிகளல்லா தோரெல்லாரும் பூரணையிலுமாதித்தியனோடு கலைதேய்ந்த விளம்பிறைபொருந்து ங்காலமான அமாவாசையிலுமொப்பிலாதசிவனுஞ் சிவாக்கினியுஞ் சிவாகமமுமே லானவாசாரியனுமெழுந்தருளியிருக்குந் தலங்களைத் திருவலகிட்டுமெழுகிச் சந்த னமுதலியசுகந்தவர்க்கங்களினாலே விதிப்படியருச்சனை செய்யாதோருஞ் சிவநிந் தகருக்கொப்பர் எ - று (௰௬)

இந்தமுறைமையியற்றாரு மரியபற்றிநியதியிழந்தாரும் *
பந்தமானபசுபாசப் பகையைக்கெடுக்கும்பரம்பரனைச *
சிந்தைக்கரியசிவமுதலைத் துயக்கமறவேதெருண்டாரை *
நிந்தைநிகழ்த்துநிறையில்லாக் கல்லாப்பொல்லாநீசருமே *

எ - து இங்ஙனங்கூறிப்போந்த திறத்தோரன்றி யாசாரியராலே சங்கற்பித்த னுட்டித்துவரும் விரதங்களைவிட்டோரும் ஆன்மாக்களிடத்தநாதிசம்பந்தமானவா ணவபாசமானபகையைப்போக்கும் பரம்பரனாயவர்க்கு மனத்துக்கெட்டாதசிவ மாகியமுதலைத் தம்முடையவஞ்ஞான நீங்கும்படியுணர்ந்த ஞானவான்களை நிந் தைசொல்லுநிறையில்லாத அறநூல்கல்லாத பொல்லாதவற்பருஞ் சிவநிந்தகருக் கொப்பர் எ - று

சிவனையிகழுஞ்சிறியாரையனையாரென்பதனையெவ்விடத்தும்வருவிக்க [௰௭]

நிந்தைநிகரின்ஞானத்தை நிகழ்த்துமவரை நிகர்ப்பார்தஞ் *
சிந்தைநிகழவருச்சனையைச் செய்யாதறநூற்கொப்பாரு *
மிந்தவியலையெழுதினரு மிதனைப்பிறருக்கிசைப்பாரும் *
வந்துபொருவில்வாய்மொழியை மதிப்பாரவருமனத்தாலே *

எ - து தம்முடையஅறிவு விளங்கும்வண்ணம் ஒப்பில்லாத சிவவாக்கியமான அறநூல்களைமலர்முதலியவற்றாற் பூசைசெய்யாது படிப்போரும் எழுதுவோரும் பிறருக்குப்பாடஞ்சொல்லுவோரும் மனத்தாற்சிந்தனைபண்ணுவோருஞ்சிவஞான நிந்தகருக்கொப்பர் எ - று

அருச்சனைசெய்யாதென்பதனைமுற்றுங்கூட்டுக [௰௮]

காயசுத்திபண்ணாது கற்பிப்பாருங் கற்பாருந் *
தேயசுத்திசெய்யாது சிவஞானத்தை சிந்தனைசெய் *
தாயுமவருமவர்தம்மையடைந்து தயக்கமறவெண்ணி *
வாய்மைப்பொருளைமதிப்பாருங்கற்பார்தாழும்வரமுறவே *

எ - து சிவஞானத்தைநீராடல்முதலியவற்றாற்சரீரசுத்திசெய்யாதுபடிப்பிப்பாரும் படிப்பாரும், அதனைத்திருமெழுக்குமுதலியவற்றாற்சுத்திசெய்யாததலத்திருந்துசிந்தித்தாராய்வோரும், அங்ஙனமாராய்வோரைச்சேர்ந்து தனக்கையந்திரிவுறும்படி கருதியுண்மையாகியதிவ்வியாகமப்பொருளைக்கேட்போரும் நன்றாகப்படிப்போருஞ், சிவஞானநிந்தகருக்கோப்பர் - எ - று

தேசத்தைத்தேயமென்றார் [௰௧]

ஆசையாதலாற்சிவகோச மதனைப்பொருளுக்களிப்போரும் *
தேசிலவலதேசத்திற் சிறந்த முறையைச்செறிப்பாரும் *
பாசப்பகைவன்பகர்மொழியைப் பயிலாதபனூல்பயில்வாரும் *
ஏசற்றரன்வாக்கியற்றாரு மேதையகத்திலிருக்கவுமே *

எ - து திரவியத்தின்கணுள்ளவாஞ்சையினாலே திவ்வியாகமத்திருமுறையை விற்குமவரும் பரிசுத்தமில்லாத வசுத்தபூமியிலேயதனைவைக்குமவரும் மாண்மாக்கள்பாசத்துக்குச்சத்துருவானசிவன்அருளிச்செய்தவாகமங்களைக்கல்லாமலன்னியமானபசுநூல்களைகற்போருந்தம்முள்ளத்தின்கண்மிகுந்த புத்தியுண்டாயிருக்கவுங்குற்றமற்றசிவநூலைமேன்மேலும்விரியக்கல்லாதிருப்போருஞ் சிவஞானநிந்தகருக்கொப்பர் எ - று

ஏசற்ற என்னுஞ்சொல் ஏசற்று என்விகாரமாயிற்று நிந்தைநிகரின் ஞானத்தை நிகழ்த்துமவனைநிகர்ப்பானென்பதனை யெவ்விடத்தும்வருவிக்க [௰௨]

பொருவில்குரவனிந்தனையைப் புரிந்தாரவனைப்புனைவார்கள் *
பரிவாலவனையருச்சனையைப் பண்ணாதறநூல்பயில்வாரு *
முருகிப்பணியைபுரிந்தாரு முனிந்துமவனைமொழிப்பாருந் *
திருவாய்மொழியைத்தினைத்திறைஞ்சி சிறந்ததுதிகள்செய்யாரும் *

எ - து தேசத்தினுலேயாசாரியனைப்பூசைசெய்யாமற் புண்ணியநூலைப்படிப்பாரு முள்ளமுருகியவர்பணிவிடையைச்செய்யாதோருமங்ஙனம்பணிவிடைசெய்வோரைக்கலைத்துவிலக்குவோரு மந்தவாசாரியர்திருவாக்கினாற் கூறுமாகமவசன

சென்றேபிறர்செம்பொனைக்கொண்டான் றிளைத்தான்குரவன்றேவிதனை *
நின்றுசிவரோடெனவைவர் மாபாதகரோகினையத்துட் *
சென்றார்வினையச்செல்லலுற மீளுநாளுஞ்சிலவலவே *

எ - து பிராமணனைவதைத்தோனும், மதுபானம்பண்ணியபிராமணனும் பிறருடையதிரவியத்தைக்களவினாற்சென்றெடுத்துக்கொண்டோனும், ஆசாரியன்மனைவியைப்புணர்ந்தோனும், இங்ஙனங்கூறினநால்வரோடிணங்கித்திரிவோனுமாகவிவர்கள், ஐவருமகாபாதகர்களாம், அவர்களைவருத்தமுறும்படி சடுதியிலேநரகத்தின்கட்சென்றடைந்தோராவர்களதினின்றுகரையேறுநாளுஞ்சிறிதுநாளுமல்லநெடுங்காலஞ்செல்லும் எ - று [உ௪]

மேன்மகாபாதகதுல்லியமையுணர்த்துகின்றார்

அறைந்தமகாபாதகமதனுக்கணியதணியபாதகமூன்று *
சிறந்தபொதியிற்சிவமுனிவதெரிப்பாம்வினையத்தெளிந்திடுக *
மறந்துபுரிந்தவல்வினையுமறவாதியன்றவல்வினையு *
மிறந்துபிறக்கவியலியவினையிதனையுணரவிசைந்தார்க்கே *

எ - து மேலானபொதியமாமலையிலிருக்கு நன்மைபொருந்தியமுனிவனே மகாபாதகரைச்சொன்னேம்,மேலிதற்கடுத்த துல்லியபாவவிதங்களையுஞ்சொல்லாநின்றேம், இதனையறியவிரும்பினோர்க்கறிந்துசெய்ததீவினையுமறியாதுசெய்ததீவினையுங்கெட்டுநல்வினையுண்டாம்படிக்குநீயிதனைச்சடுதியிலேகேட்டுத்தெளியக்கடவை எ - று [உ௫]

மகாபாதகத்துல்லியருட்பிரமகத்திபண்ணினோர்க்
கொத்தாரைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

வெறுப்பான்மிகுத்தகோபத்தால்வேட்கைமிகையால்வெருட்சியினால் *
ஒறுப்பாமறையந்தணர்க்குரைப்பாரொப்பான்பிரமக்கொலையர்க்கே *
யறப்பேரறிவேயுளமெனவேதன்னைமதிக்குமதியிலியுஞ் *
சிறப்பாங்குரவரொடுவிருத்தஞ்செய்யுமறியாச்சிறுவனுமே

எ - து வேண்டாமையாலாதல், அதிகோபத்தாலாதல், திரவியமுதலியவாசைமிகுதியாலாதல், அச்சத்தாலாதல்- பிராமணரைப்பொறுத்தற்கரியகொடுஞ்சொற்களைச்சொல்லுவோனும் மிகவும்பேரறிவுடையோம்யாமென்றுதன்னை

யுயர்வாகவெண்ணுமறிவில்லாதவனும்- மேலானவாசாரியரோடுவிரோதம்பண்ணிக்கொள்ளுமறிவில்லாத- அற்பனும்-பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் எ-று [உ.௬]

உண்ணவறன்மேற்செலுமாக்களினையுந்தடுத்தேயொறுப்பானு ௸
நண்ணியிரப்பத்தருவலெனநயந்துகூறியவர்வரவி ௸
லெண்ணமிழந்ததநம்பொருளுமிலமேயெனவுரைப்பானுந் ௸
தண்மையுரைத்தகுருநியனைச்சாற்றுமவனுந்தசைநடுமே ௸

எ-று தண்ணீருள்ளவிடத்திற்குடிக்கச்செல்லும்பசுக்களையுமறித்துத்தண்ணீர்குடியாவண்ணம்வாதைபண்ணுவோனும்- தம்பால்வந்தொருபொருளையிரந்தபோதுதருகின்றேனென்றுநேர்ந்துகூறிப்பின்பவர்தம்மில்லின்கண்வந்தபோதக்கருத்தைவிட்டிம்மத்தருந்தப்பொருளும்யாமுடையோமல்லவென்றுசொல்வோனும்- அறிவான்மிக்கோனைச்சபைநடுவேயிழிவானவசனங்களைச்சொல்வோனும்பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் — எ-று

ஆக்களினையுமென்றவும்மைமற்றுள்ளவிலங்குபட்சிகளையுமென- எச்சத்தின்கண்வந்தது- மேல்வருஞ்செய்யுளிற்பிரமகொலையர்க்கிணையென்பதையிச்செய்யுளோடுங்கூட்டியுரைக்க [உ௭]

அரசன்செவியிற்பிறர்குறையையறிவிப்பவனுமந்தணர்க்கும் ௸
பரசுபாணிமுதலோர்க்கும்பாங்காநிலனைப்பறிப்பானு ௸
மொருவும்வகையையுரைப்பானுமதனுள்விளைவையுண்பானும் ௸
பிரமகொலையர்க்கிணைமதுவைப்பீதற்றினோனும்பேசுவமே ௸

எ-து பிறர்குற்றங்களையிராசாவின்செவியிற்சொல்லியறிவிப்போனும்- பிராமணர்க்கும்- மழுவைக்கையிலேந்துஞ்சிவன்முதலாயுள்ளகடவுளர்க்கு- முரிமையானபூமியைக்கட்டிக்கொள்வோனு- மந்நிலமவர்களுக்காகாமற்போம்வண்ணஞ்சூட்சிசொல்லுவோனு- மந்நிலத்திற்போகங்களையெடுத்துக்கொண்டுண்போனும்- பிரமகத்திபண்ணினோர்க்கொப்பாவர்கள்- மதுபானம்பண்ணினோர்க்கொப்பானவரையுமேற்சொல்லாநின்றோம் - எ-று [உ௮]

மகாபாதகத்துல்லியருண்மதுபானம்பண்ணினோர்
க்கொப்பானவரும்பொன்றிருடினோர்க்கொப்பா
னவருநான்குசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஆகியமலனருளானனகனருள்செயாகமத்தை *
யோதியதனையொழிப்பானுமொளிசேரழலையோம்பானு *
மாதாவுடனும்பிதாவுடனுமாறுயவர்சொன்மறுப்பானு *
மோதாவுரையையுரைத்தானென்றுற்றேநடுவாயுரைப்பானும் *

எ - து எவற்றிற்குமுதல்வனுமாய்நின்மலனுமாயான்மாக்களிடத்திலேயிரக்கத்தையுடையனுமாயப்பாவமில்லாதவனுமாயிருக்கிறசிவனருளிச்செய்ததிவ்வியாகமத்தையோதியதனையிடையிலேவிட்டவனும் - மொளிபொருந்தியவக்கினிகாரியகாரியஞ்செய்துவந்துபின்பதனைவிழுந்தோனும் - மாதாபிதாவுடனும்விரோதித்தவர்கூறிய - சொற்களைமறுப்போனும் - மொருவன்சொல்லாதவார்த்தையைச்சொன்னானென்றுசபைக்கண்வந்துநடுச்சொல்லுவோனுமென்றவாறு [உக]

தோமுன்மனக்குத்துயரத்தைத்துய்ப்பிப்பவனுந்துர்சனுக்கு *
மேமைபாகனடியாரையிடரைச்செயவுமிசைந்தானும் *
பாமுன்றநூல்பழித்தபொருள் பண்டமெனக்கொண்டுண்டானும் *
வாழும்வனத்தாமாக்களையும் வருத்துமவனுமயனுறவே *

எ து வெளி

ஆமாக்கள் பசு மான் மனைமுதலியவிலங்கினங்கள் ஆமாக்களையுமென்னுமும்மைபறவைகளையுமெனவிளக்கிற்று (௩௰)

ஆக்களனையுமார்க்கத்தி லடவியதனுளரும்பதியுட் *
பார்க்குண்மதித்தபட்டினத்தும் பழுதேயழலைப்படுப்பானு *
நீக்குமதுவைபுண்டானை நிகரோவறியார்நிதிமுதலுங் *
காக்குமனையோகரிபரிதேர் கவினார்மணியுங்கவர்ந்தானும் *

எ து பசுக்கணிற்குங் கொட்டகைவாசலினும் வனங்களினுமரிய சிவத்தானங்களினும்பூமியுண்மதித்துச்சொல்லப்பட்ட பட்டினங்களினு மொருகாரணமின்றித்தீவைப்போனு மிவர்களெல்லாம் அறநூலிலாகாதென்று நீக்கு மதுபானம் பண்ணினோர்க்குநிகராவர்கள் மிடியராயுள்ளோருடைமைமுதலாயினதுங் காவல்பெற்றிருக்குமில்லமட்டோயானை குதிரைதேரிவைகளையுமழகு நிறைந்தரத்னத்தையுங்கரந்துகொண்டானும் எ று

வறியோர்நிதிமுதலுமென்னுமும்மையாற்பெரியோர்நிதிமுதலுமெனவறிக (௩௫)

கதலியெழுவாய்கரும்பிறுவாய் கந்தமலிசந்தன முயர்ந்த ※
பொதியிலகில் குங்குமமாதி புனையவிளரியதுகிலாதி ※
பதமேபாணிபாயில்வனவும் பற்றியோனும்ப ழுதுறவே ※
பிதமாங்கனகந்தனைச்சோர்விற் பெற்றோனியையே பகருங்கால் ※

எ - து வாழைமுதல்கரும்பீறுயுள்ள வுண்டிப்பொருள்களு மணமிக்க சந்தன மும்பொதியத்தின்கணோங்கிவளர்ந்த அகில்குங்குமமுதலிய சுகந்தப்பொருள்களு முடுத்தற்கினியவாடைமுதலிய னவுங்காலினுங்கையிலுமணியப்பட்டவாபரணமா யுதங்களுமான வினைவயிற்றையுடையோர் வருந்தும்வண்ணம் அபகரித்தோனுஞ் சொல்லுமிடத்துச்சிவந்தநிறத்தையுடையபொன் னைகளவுசெய்தோனுமேபெருந்தோனுக் குநிகராவன் எ - று

பீதம் பிதமெனக்குறுகிற்று (௩௨)

மகாபாதகதுல்லியருட் குருதேவியைப் புணர்ந்தோர்க்கொப்பாரை யிரண்டு செய்யுளாலுணர்த்துகின்றார்

பெறுதற்கரியபாத்திரத்தை ப்பெற்றும்பெற்ற கன்னிகையைச் ※
செறிவித்திடுதல்செய்யானுஞ் சிறந்தபுதல்வன்மனைவியொடு ※
மறிவிற்பரிந்தானகத்தெறிடும் பகினியுடனும்மணைந்தானும் ※
பொறையிற்பயந்தபுதல்வியொடும் புலைச்சியுடனும்புணர்ந்தானும் ※

எ - து வெளி

அறிவிற்பரிந்தான், தோழன் பகினி, உடன்பிறந்தாள் (௩௩)

அறிந்துமனையாளவலத்தை யவலோத் துறவாதமனைவானுஞ் ※
சிறந்தகுரவன்மனைவியொடுஞ் செறிந்தார்க்கினையேசெப்பியவித் ※
திறந்தான்மகபாதகமதனிற் சிறுமைத்ததறைற்பாதகமென் ※
றறைந்தாமிதனுக்கணித்தான வுபபாதகமுமினியறைவாம் ※

எ - து தன்மனவியானவள்பிறர்முகம்பார்க்குங்குற்றத்தை க்கண்டு மலைத்த ள்ளிவையாதுகூடுவோனு மிவர்களெல்லாருமேலானகுருவினதுபாரியோடுகூடின வர்களுக்குநிகராவர்கள், இங்ஙனஞ்சொல்லிய கூறுபாடுகளெல்லாமகாபாதகத்து க்குத்துல்லியமாயிருக்கும், ஆகையினாலேயிவற்றிற்கு ப்பாதகமெனவும்பெயர்சொல்லத்

துச்சொன்னோம்,மேலிதற்கடுத்தவுபபாதகத்தையுஞ்சொல்லாநின்றோம் எ று (௩௪

முற்கூறியவுபபாதகத்தைவிரித்துணர்த்துகின்றார்

இச்செய்யுண்முதல்எனவே யிசைத்தவென்னுஞ் செய்யுளீறாக விருபத்தொரு செய்யுளுமொருதொடர்க்குளகம்

மறையோர்க்கெனவேவைத்தபொருண் மதியாததனைவௌவினனு *
நிறையாற்பெரியோர்நிதியதனை நிரந்துகவர்ந்தநிலைபிலியும் *
பிறராலதனுக்கிடையூறு பேணுமவனும்பெருங்குலமு *
மறிவுமருளுமுடையமெனு மகந்தையுடையவவலனுமே *

எ து பிராமணர்க்கென்றுநியமித்துவைத்த பொருளை யவமதித்தெடுத்துக்கொண்டவனும் வேதாகமங்களின் வழியேற்றச் குறைச்சலின்றி நின்றநிலைமையான்மிக்கோரான நல்லோர்கள்திரவியத்தைக்கலந்தபகரித்த நிலையில்லாதோனும்,பிறராலேயவருடைய திரவியத்துக்கிடையூறுவிளைப்போனு மெல்லாரினும்பற்றப்பெரியசாதியுமறிவுமிரக்கமும்யாமே யுடையோமென்னு மாங்காரத்தை யுடையபொல்லாதவனும் எ று (௩௫)

விடைத்துத்தவரைவெருள்வானும் விடம்பமுளத்துள்விரவினனு *
மிடுக்கண்கெடுத்தவினியாரை யெண்ணுவவலத்திண்ணியனுந் *
தடுக்கத்தரியாவாசையுடன் போகவிதத்தைத்தரிப்பானுங் *
கொடுக்கச்சிறிதுங்குறியாது கொள்ளுங்கருத்தேயுள்ளானும் *

எ து தபோதனரைக்கண்டிக்கோபிக்குமவனுமுள்ளம்பிறி தொன்றாயிருக்கப்பிறர்மதிக்கவிரதமுதலியவற்றை ச்செய்யவிரும்பினோனுந்தனக்கு வந்தவிடையூறுகளைநீக்கினநல்லோரை யவமதித்தபொல்லாத கன்னெஞ்சனுந்தடைபடாத வாசைமிகுதியாலேபோகவிதங்களையனுபவிப்போனு மறபமுமொருவர்க்குக்கொடுக்கக்கருதாதுபிறர்கையிலுள்ளவற்றைவாங்குங்கருத்தேயுடையோனும் எ று

விடம்பம் உள்ளொன்று புறம்பொன்று (௩௬)

மாணுவுளத்தவஞ்சகனும் வயிரமுடையமனத்தினனும் *
பூணார்முலையைமணஞ்செய்து புணர்ந்தாணிருக்கப்புலனிழந்த *
பாணார்மொழியைப்பைங்கிளியை ப்பணைத்தோளிணையைப்பயின்றதனு *
லேணுணென்னுமிரண்டினையுங் கண்ணுவெண்ணுவெஃகியனுமே *

எ - து உள்ளத்தின்கணமைவுபடாதவஞ்சனையையுடையோனு மொருவனொருகுற்றஞ்செய்யி லதனையக்கணமேமறவாம லெந்நாளு நினைத்திருக்குமாச்சரியத்தையுடையவுள்ளத்தையுடையோனு மொருத்தியைக் கலியாணஞ்செய்தவளுடையவாபரணமணிந்தமுலைகளைக்கூடிய கணவனிருக்கவுமந்தவிசைபொருந்திய மொழியினையுடையாளான பசுங்கிளிக்கொப்பாளதுவேய்போன்றதோளினையின்கணறிவின்றிப்புணர்ந்து பெருமைநானென்னுமிரண்டினையுந்தனக்குக்கண்ணாகவிசாரித்தறியாதவேழையும் எ - று [௩௰௭]

கொழுநன்றனையேதெய்வமெனக் குறித்துத்தருமநெறிகோரு *
தொழுகும்விரதவுத்தமியை நொய்யளெனவேயுளத்துன்னு *
மிழுதைதானுமிவ்வளரியளென்றே யவடனிலைத்தோளைத் *
தழுவக்கருதுந்தண்ணியனுங் கண்ணுற்புணர்ச்சிதரிப்பானும் *

எ - து வெளி [௩௰௮]

கசிவுசிறிதுங்கருதாத கவினார்மரபிற்கன்னிகையைத் *
தசிசுமுடையளிவளென்று சொல்லுமவலத்துர்ச்சனனு *
மொருவன்சிவனுண்டென்றுணர்ந்த பனவன்றனைத்தேர்ந்துதவாதே *
பரிவுமறிவுமுடையனை மற்றொருவற்குதவும்பழியினனும் *

எ - து வெளி பனவன் பிரமசாரி (௩௰௯)

தருமமணமேபிரமாதிநான்குந் தலைமையிடைமணந்தா *
மொருவனொருத்தியெனுமிவாத மொப்பிற்பரிவுற்றுறும்புணர்ச்சி *
கருநிற்கடைமூன்றசுரமுன் கடையென்றவற்றைக்கழியாதே *
விளைபவிழைந்துபுணர்ந்தறத்தைத விதித்தமொழியைவிடுத்தாரும் *

எ - து பிரமம், பிராசாபத்தியம், அரிடந், தைவமாகிய, இல்லறத்திற்குரியமணநான்குமுத்தமம், காந்தனுங்கன்னிகையுமானவிருவருநதம்மனப்பொருத்தத்தாலன்புற்றுப்புணருங்காந்தருவப்புணர்ச்சியிடையாயமணமாம், ஆசுரம் இராக்கதம் பைசாசம்,ஆகியமூன்றுமாராயிற்கடையாயமணமாம்,இவற்றுட்கடையென்றுகூறிய, ஆசுரமணமுதலியவற் றைநீக்காமலாசைமிகுதியா லெவிரும்பிச்சந்திபிலேவேட்டுப்புணர்ந்தில்லறநெறியைவிதித்துக்கூறியவேதாகமவசனத்தைவிட்டோரும் எ - று

காந்தருவமுதலியமூன்றுமத்திமமெனவும் பைசாசமதமமெனவுங்கூறுவாரு முளர்,கூ-பிரமம்பிராசாபத்தியமாரிடந்,தைவங்காந்தருவமசுரமிராக்கதம்பைசா சமெனவேதத்தெண்வகைமணமே,பிரமங்கன்னிகையைப்பெருங்கலனணிந்தே, பி ரமசாரியாயிருப்பானொருவனுக், குரியவன்னிமுன்னுதவுதன்மருவும், மருவுபிரா சாபத்தியமகட்கோடற், குரியகோத்திரத்தார்மகளுதவென, விருமுதுகுரவருமி மைப் பெய்தல், ஈயுமாரிடமாவுமானேறும், வாங்கித்திமுன்னர்மகள்வழங் குதலே, வழங்குதெய்வம்வேள்வியாசாரியற்கு, முழங்குதீமுனமகட்கொடைமு றையே, முறைமையாழினிறைகந்திருவ, மொப்புப்பற்றுந்தப்பிலவாகித், தாமே கூடுந்தகுதிடதாகும், ஆகுமாசுரஞ்செருவில்லேற்றியுந், திரிபன்றியினைத்தெரியு றவெய்து, மின்னனபிறவும்பன்னியசெய்துங், கன்னியைமன்னுதல்துன்னுமென் ப. ஆன்றுமிராக்கதஞ்சுரிகுழற்பேதையைத், தன்னிற்பெறுதுந்தமரிற்பெறுதம், வலிதிற்கோடன்மரபுகாட்டும், காட்டுபைசாசங்களித்தார்துயின்றார் மாட்டுப் புணரும்புணர்ச்சியின்மாண்பே, ஆகவெண்வகைமணங்களையுமிவ்வகையாற்கண் டுகொள்க [௬௰]

உலகவியல்பைமொழிந்தாரையுதவீர்பொருளென்றுரைப்பானு ※
நிலைமைதளரிற்றாங்காதேநீங்கும்பாங்கிலடியானுந் ※
சலமில்சகியைத்தணப்பானுஞ்சாற்றிப்பழுதுஞ்சலஞ்செய்து ※
கொலைபைப்புரியுங்கொடியானுங்குணத்தார்தமையுங்கொடிப்பாலே ※

எ - து உலகவியாபாரத்தைவிட்டுநிட்டைபுரிந்திருக்குந்தபோதனரையென க்குக்காசுகந்தூசுந்தரக்கடவீரொன்றுகேட்போனுந்,தங்கருதுதனுக்குங்கலேகுலேயவுந் தவிடத்துநின்றுபாதுகாவாமல்விட்டுப்போம்,நன்மையில்லாதவடியானும், நிலை மைபிழைபடவந்தவிடத்துவனமமில்லாததோழனைநீக்கிவிடுவோனும், நற்குணமு டையோரையுங்கோபத்தினாலேகுற்றமுஞ்சொல்லிவண்மித்துக்கொலைத்தொழிலை ச்செய்யுந்தீயோனும், எ - று

நிலைமைதளரினென்பதனைச்சலமில்சகியையென்பதற்குங்கூட்டுக, குணத் தார்தமையுமென்னுமும்மைசிறப்பு (௬௧)

சுற்றத்தவரைத்துடைப்பானுஞ்சுகிர்தத்தவரைத்துணிப்பானும் ※
பற்றிப்பசுவைப்படிப்பானும்பதியைக்கொலைசெய்பழியினனு ※
மற்றைவசியர்வடிவினையுமாயோடனையும்வதைப்பானுந் ※
செற்றத்துழவர்தங்களையுஞ்செருக்கிச்சினத்துச்செகுப்பானும் ※

வங்களையென்றுறுதியிடாத பிராமணரும் எ று [சரு]

தன்றூற்சமைத்ததடாகத்தைத் தருக்களதனைத்தாரத்தைப் *
பொன்னேயனையபுத்திரரைப் பொருட்குக்கொடுக்கும்புல்லியனு *
நன்னேன்புடையார்தனந்தனையு நயந்துகொள்ளுநலமிலியும் *
உன்னைப்பரிப்பலெனப்பாரி யுடைமைதனைக்கொண்டொழிப்பானும் *

எ து தன்னூலுண்டாக்கின குளங்கள், வாவிகள், மரங்களையுந்தன்மனைவியையும்பொன்போன்ற தன்மைந்தர்களையும் பொருளுக் குவிற்குமீனனும் நல்லவிரதநிலராயுள்ளோர்கள்திரவியத்தை விரும்பியபகரிக்குந்தீயோனும் நின்னுடைமையைப்பல்கும்வண்ணம்பெருக்கி யுன்னைக்காப்பே னென்று தன்மனைவிபதுசீதனமுதலியகைப்பொருள்களை வாங்கிக்கொண்டுகாவாதுவிடுவோனும் எ று [சசு]

தேறலருந்துந்தேமொழியைத் திளைக்குமறிவில்சிறியானும் *
வேறுசிலர்கைப்பொருடன்னை விரும்பித்தருவலெனவாங்கிப் *
பேறுமவர்க்குப்பிழைப்பானும் பேணுஞ்செநெலும்பிறர்தம்பாற் *
கூறிக்கொடுத்துவிருத்தியினைக் கொண்டேயருந்துங்கொடியனுமே *

எ து மதுபானம்பண்ணுந் தேன்போலு மொழியினை யுடையாளைப் புணருமறிவில்லாதவற்பனும் பிறருசிலர்கைப்பொருளை யிச்சித்துத்தருவனென்றுவாங்கியப்பொருளையுங்கொடாமற் பிழைசெய்வோனும் யாவராலும் விரும்பப்பட்டசெஞ்சாலிமுதலியநெல்லினைப் பிறரிடத்துவட்டிக்குக்கொடுத்து அந்தவூதியங்கொண்டு பொசிக்குந்தீயோனும் எ று [சஎ]

குற்றமுடையான்வினைதணிக்கக் கொடுக்கும்பொருளைக்கொள்வானும்
விற்கத்தகுதியல்லாத வன்றுதிகளைவிற்பானுங் *
கற்பால்வசியமுதற்செய்து கனகங்கொள்ளுங்கரிசினனு *
நிற்பார்நியமத்திவொனவே நிகழ்த்தத்துடங்குநியதியனும் *

எ து யாதாமொருகுற்றங்களை யுடையன் தான்செய்தபாவந்தணியும்படிக்குக்கொடுக்குந்தானத்தையேற்போனும் விற்பதற்குரிமையல்லாதவன்னமுதலாயினவற்றைவிற்போனு மந்திரநூல் விதியினாலே ✠ வசியமாக ரிஷிணமுதலிய வறுவ

✠ வசியம் ஆகருஷிணம் மோகனம் தம்பனம் உச்சாடனம மாரணம்

குந்தேவர்களுக்குந் தான்செய்தற்குரிய கன்மமானசிராத்தந் தர்ப்பண முதலியவ ற்றைச்செய்யாதோனு மொழுக்கமில்லாதோனு மேலானசிவனுநன்னெறியாகியபு ண்ணியமும்பாவபேதமு மேலான சுவர்க்க நரக விதமுமில்லையென்று நித்தலுஞ் சொல்லுநாத்திகனும் எ று

அரசன்றனையு மென்னுமும்மை, மற்றுமுள்ளோரையுமெனவறிக, அவன்முன் னுமென்றவும்மைஅவனைக்காணுவிடத்துமெனவறிக [௫௧]

பூணார்முலையைப்பகற்பொழுதிற் புணருமவனும்பூரணை யி *
ஞானுதறவின்மைதுனத்தை ப்பசுவின்பகத்தினயப்பானு *
மாணுனவர்தமாசியத்து மயர்த்தும்பெரியோர்கருத்தாலும் *
பேணுவிருதுமதிபகத்து ப்பேட்பாற்புணரும்பேதையுமே *

எ து ஆபரணம்பூண்டமுலையினையுடையாளை ப்பகற்காலத்திலும் பூரணைமுத லியவற்றினு ந்தண்ணீரினுள்ளுங் கூசாமற் புணர்வோனும் பசுக்களினதுயோனியி லும் ஆணுகப்பிறந்தோரதுவாயினும்மைதுனத்தைவிரும் புவோனு மறந்தும் பெரி யோர்கண்மனத்தினுலும் விரும்பாததூரமானவளையாசையாற்புணரு மறிவில்லா தோனும எ று [௫௨]

உடைப்பானவனு மூவகையுடன் பிரியா நுறையு மூறவினையுங் *
கெடுப்பானவனுங்கிளர்சமையங் கிளப்பானவனுங்கொடுங்கிளவி *
புடைப்பானவனும்புனற்கரையை க்கூபதடமும்புலமிருந்து *
துடைபபானவனுந்துணையான தேவர்விமானந்துயக்கறவே *

எ து மகிழ்ச்சியோடும் பிரிவின்றி யிருக்குநட்புடையோனை விரோத த்தால் வேருக்குவோனுமோங்கியசமணன்முதலியபுறச்சமையத்தாரைநிலைகேடுசெய்யும வனும் பொல்லாதவார்த்தைகளைச்சொல்வோனுங் குளங்கரையையுங் கிணற்றங்க ரையையும்வெட்டியிடித்து ப்போடுவோனும் அறிவுகெட்டுஅஞ்ஞானமேலிடும்படி தமக்குத்துணையானதேவர்களிருக்குங்கோயில்களை ப்பிடுங்குவோனும் எ று [௫௩]

இறவாதிருக்கச்செயுமருந்தே யெனினுமதனையில்லகத்துத் *
துறவாதிருந்தாரனைவரொடுந் துய்த்தல்கடனேதுயக்கற்றுப் *
பிறர்சொல்பழியும்பேணுதே பெரியோர்தமக்குநாணுதே *
சிறிதுமிரக்கஞ்செய்யாதே தானேபருந்துஞ்சிதடனுமே *

எ து சாவாமூவாமருந்தேயாயினுமதனைத்தம்மில்லின்கண்விடப்படாதிருந்தா

ரெல்லோரும்பசுக் கண்பதேமுறைமை யன்னனுஞ்செய்யாமலாகை பிரசுதியார்கெ யறிவுமபங்கிப்பிறராற்சொல்லும் பழிச்சொல்லையும்பாதுகாவாமற் பெரியோர்க ளுக்குமருத்துவியாமற்பொசிக் கிறேமையென்றுகூசாமற்சற் றுமிரக்கமுஞ்செய் யாமற்றுமொருவனுயேயிருந்துபொசிக்குங் குணக்கேடனும் எ று (௫௪)

எனவோரிசைத்தவித்தொகையிலெண்ணுமிவர்களெல்லோரு
முனமேமொழிந்தபாதகத்திற் றணியவுபபாதகமுற்றும்
விளைபாரிணைவேல்விழியாருமிவற்றைப்புரிவில்வேறல்லா
ரினியாமுனைவிதற்கிளையபாவவிதமுமியம்புவமே

எ று என்றுகூறியவித்தொகையிலெண்ணுகிற்கு மிவர்களெல்லோருமிவற்றி ற்குமுன்னுகச்சொன்ன பாதகத்துக்குத்தண்ணிதான பாதகத்தைச்செய்யுங்கள் மிகளானவுபபாதகராம், வேல்போன்ற விரண்டுவிழியினையுடைய மடவார்களுமு ற்கூறியபாதகங்களைச்செய்யினவர்களும் வேறுகாராயுபபாதகமுதலிய பெயரினை ப்பெறுவர்கள், வாராயகத்திய முனிவனே மேலிந்தவுபபாதகத்துக்குத்தண்ணிதா னபாவபேதத்தையுமுனக்கியம்பிச்சொல்லாநின்றோமதனைக்கேட்பா யாக எ று (௫௫)

முற்கூறியவுபபாதகத்துக்குத்தண்ணிதான பாவபேதங்களைவிரித்துணை ர்த்துகின்றார்

இச்செய்யுள் முதல் எழுவித்தொகையாவருமென்னுஞ் செய்யுளீறாகநாற்ப த்தொருசெய்யுளுமொருதொடர்க்குளகம் (வேறு)

ஆவினுக்கு மருமறையாறங்க
நாவினர்க்குந் தன்றாயகனுக்குமெய்த்
தாபதர்க்குஞ் சகிக்குந்தகைமைய
காவிநேர்விழிக்கன்னிகையார்க்குமே (௫௬)

உற்றகாரியத்தாறுகடன்னையு
முற்றவானுமுகிர்த்தமிழ்ச்சினையுந்
தூற்றுவார்தமைக்கண்டுதுயக்குறும்
பற்றிலானும் பாருருட்பற்றியும்

என்பன, பசுவுக்கும்நாலுவேதமுமாறங்கமும் பயிலுமாரினையுடைய பிராமண

ர்க்குந்தன்னுடைய ஆண்டவனுக்கும் வேடங்கட்டி நடிப்பதன்றி யுண்மை யானத போதனர்க்குந்தனதுதோழனுக்கு மழகினையுடைய நீலோற்பலமலர் போன்றகண் ணையுடையகன்னிகைகளுக் கு முற்றகாரியங்க ளிடையிடையூறுகளையுஞ் செய்வோ னு நல்வினையாலுண்டாகியசெல்வத் தையனுபவிப்போனையும்பிறருடைய ரூபலாவ ண்ணியத்தையுங்கண்டுபொருமலறிவுவருந்துமன்பில்லாதோனும் எ று [௫௭]

ஈட்டினார்தனந் தன்னையிறைக்குறக் ※
காட்டினானுங் கருதியகையனும் ※
பாட்டினானுநற் பாவையர்தூடணை ※
நாட்டினானு நரர்க்குநவையுமே ※

எ து நன்முயற்சியாலார்ச்சித்தோரது அடக்கப்பொருளையரசனுக்குக்காட் டினவனு மப்பொருளை யிவ்வளவோவென்று நினைத்துமனம்புழுங்கியகையனு நற் குணநற்செய்கைகளையுடையமாதர்களிடத்துத் தூஷிக்கத்தக்கபாட்டுக்களை ப்பாடு கிறவனுங்குணவான்களிடத்துக்குற்றத்தை க்கற்பிப்போனும் எ று

இதனுள் ஈட்டினார் ஆர்ச்சித்தோர்கையன் ஈனன் (௫௮)

இச்செய்யுள் முதலாகநீக்குவானு மலசலநித்தலுமென்னுஞ் செய்யுளீருகா லுசெய்யுளுமொருதொடர்

ஆக்கள்சேரிடத் தாகுதிச்சாலையுட் ※
டேக்குநீர்த்தடந் தேர்திகழ்வீதியுள் ※
வேர்க்கணுந்தரு ச்சாயையில்வெற்பினிற் ※
பூக்கிளர்ந்தபொழிலின் புடையுமே (௫௯)

சிலையினீரிற் சிகதையிற்றேவர்த ※
மெலையின்மார்க்கத்தி லில்லத்திலீமத்திற் ※
றொலைவிலாததூர் வாதியிற்றும்பையி ※
னிலைமைமாதவர்நீடு நிலத்துமே ※

சிகதை மணற்குன்று (௬0)

உன்னத்தக்கதலத்தி லுவர்தனிற் ※
செந்நெலாதிய செய்யிற்சிறப்புறு ※
வன்மிகாதியிற் குண்டுவனத்திலுட் ※

உனைத்தானிகர் கோமயந்தன்னிலும் (௬௧)

நீக்குவானுமலசல நித்தலு *
நாக்கினுன்மதுபான நயந்துறு *
மூர்க்கனு மூழவாதி விநோதமு *
மார்க்கும்வீணையு மாடுமெற்பனும் *

என்பன, முன்னைச்செய்யுட்களிற்கூறிய வந்தத்தெல்லைகளிலேமல செலங்களை விடுவோனும் நாடோறும மதுபானத்தை நாவினால் விரும்பிப்பொசிக்கு மறிவில்லாதோனுந் துந்துமிமுதலியவாத்தியங்கள்கீதங்கள் கூத்துக்களிவைமிற்றை விரும்புமவத்தனும் கூத்துக்களையாடாநிற்குஞ்சிறியோனும் என்று (௬௨)

தேக்குநீர்விளையாடுஞ் சிறியனு *
மாக்குநெஞ்சத்தவர் தமக்கந்தரம் *
பார்க்கும்பாங்கினி தானும்பலர்செலு *
மார்க்கந்தன்னை த்தடுக்கும்வலியானும் *

என்று நிறைநீரிலேநீந்திவிளையாடுமற்பனும் புலன்வழிபோகாமன்மனத்தை நிறுத்தும்பெரியோர்களுக்குக் குற்றத்தைத்தேடு நீதியில்லாதோனும்யாவருநடக்கும் வழியைமுள்முதலானவற்றாலடைத்துவிலக்கு மிரக்கமற்றோனும் என்று (௬௩)

ஈடிலார்மனையாதிய வெல்லையைப் *
பாடிலாமென ப்பற்றும்படிறனுங் *
கூடமான கருமமுங்கூறிடு *
மூடனும்மதனைச்செயு மூர்க்கனும் *

என்று பெலமின்றியிளைத்தோர்கள் மனைமுதலாகிய பூமியையவர்களதுற்றுரிமையல்லவொன்று கைக்கொள்ளும் வஞ்சகனு மொருவருஞ்சொல்லாது மறைக்கத்தக்ககாரியங்களைச்சொல்லு மஞ்ஞானியான வனும் அத்தக்காரியங்களை பலிரங்கமாகச்செய்யுமறிவில்லாதோனும் என்று (௬௪)

ஒளித்துநின்றுபகைவனையூறுசெய் *
வெளிற்றனுங்கன்னக்கோலுமிண்டனுந் *
தெளித்தசொல்லை வளக்கிடைச்செப்பிடா *
னெளித்தசொல்லை நிகழ்த்திடுநீசனும் *

எ து தன்சத்துருவானவனையொளித்துநின்று கொல்லுஞ்சேவகப் பாதகர் லாதோனுங் கன்னக்கோலெடுத்துப்பயிற்றிப்பிம்பனுமிருவர்தம்முண்மாறுகொண்டுவழக்கின்வாதத்தேறியவிடத்து மனுநூன்முறையே யாராய்ந்தறுதியிட்டசொல்லைவழக்கின்கட்சொல்லாது வாரம்பற்றி யோரமாகச் சொல்லும் புலையனும் எ று [௬௫]

கொடுமராகிளையப்பண்ணிநிங்கோணனுங் *
கொடுமராகிளைக்கொள்ளுங்கொடியனு *
மடியர்பாலிரங்காதவவலனு *
மடியர்தம்மையொறுத்திடுமற்பனும் *

எ து வில்லுமுதலியவாயுதங்களை ப்பண்ணு நீதிகேடனும் வில்லுமுதலியவாயுதங்களைவிலைகொடுத்து க்கொள்ளுந் தீயோனுந்தன்னடியாரிடத் திரக்கமில்லாத பொல்லாதவனுமவ்வடியாரைக்கடிந்து கோபிக்குஞ்சிறியோனும் எ று [௬௬

ஆவினைத்தமிப்பானுமலவனு *
நாவினிற்பொய்நவிற்றுநரகனுங் *
கூவவந்ததுகேட்குங்கொடியனுங் *
காவலர்க்கபராதக்கருத்தனும் *

எ து பசுக்களைவருத்தமுறும்படி யடிப்போனும் நாவினாலேயசத்தியஞ்சொல்லுநரகத்துக்குரியோனு மதனைச்சொல்லுமிடத்துச்சென்றுகேட்கும் பொல்லாதவனுந் தமதுகருத்தனுக்குக்குற்றஞ்செய்யுமனத்தை யுடையோனும் எ று (௬௭)

உறவினுக்கப ராதியுமூனுடற் *
பிறவிவேரினை ப்பீழும்பெருவலி *
யறிவனுக்கு நல்லாரிய னுக்கலற் *
புறனுரைக்குமவல ப்புலைய னும் *

எ து சுற்றத்தார்க்குத்தீங்குசெய்வோனுந் தசைபொருந்தியவுடம்பினையெடுப்பதற்கு மூலமாகியவாணவத்தை க்களைந் துபிடுங்குமி குந்ததிடமான வறிவினையுடையற்குநல்லவாசாரி யனுக்குப் பொல்லாப புச்சொல்லுந் தீமைய யுடையகன்மசண்டாளனும் எ று (௬௮)

சொக்கிடுந்தொழில்வல்லதுரிசனு *

புக்குநோயறவோட்டுமருந்தெனப்
பொக்கம்பேசிக்கொடுக்கும்புலையனுந்
தக்கதாய்தந்தைவாட்டந்தணித்திடான் (௬௯)

தனித்திருந்துணுந்தண்ணளியகண்ணனு
முனித்தபோதனர்தன்னைமுன்னூட்டிடான்
றனித்தவாதுலர்துக்கந்துடைத்திடான்
பனித்தநாதாபசியும்பறித்திடான்

இவையிரண்டுமொருதொடர், பொருண்முதலியவற்றைக்கவரும்விருப்பினு லேபிறர்பாற்சொக்குப்போடுந் தொழிலைவல்லதூர்ச்சனனும்பிணியானதுகெடும்படிநீக்குமருந்திதுவென்றுபொய்சொல்லிமருந்தல்லாதமருந்தைக்கொடுக்கும்பொல்லாதவனுந்தகுதியினையுடையமாதாபிதாக் கள்பசிபிணிப்போக்காதுஇந்திரியங்களைமுனியுந்தன்மையையுடையதபோதனர்களை முற்பட போசிப்பியாது இல்லாமையால்வருந்துந்தரித் திரர்களது பசித்துயரத்தைப்போக்காதுபசியாலுருந்துந்தனடியார்கள்பசியுநீக்காததாமேதனித் திருந்துபொசிக்குமற்பவறிவினையுடையோனும் எ - று (௭௰)

நீத்துமுன்னையவேதநெறியினைப்
பேர்த்துநின்றபிராவிரச்சியனுந்
தீர்த்தனைவரநெறிசிதைந்திடப்
பார்த்தபண்பிலவலப்பாடிறனும்

எ-று ஆதிகாலத்துளவாயவேதாகமங்களிற்கூறியசன்னியாசிமார்க்கத்தின்வழியனுட்டியாமற்றனையொருமார்க்கங்களைக்கற்பித்துநடக்குஞ்சன்னியாசியுஞ்சுத்தனாகியசிவனுடையதிருமதத்தின்முதலானவற்றைப்பிடியவிட்டிரக்கமின்றிப்பார்த்திருக்குந்தன்மையில்லாததீமையையுடையவஞ்சகனும் - எ - று (௭௧)

ஆக்கடன்னையரும்பிணிவந்துறி
னோக்கியேயதனோவுதன்னோவெனக்
காக்கிலானுங்கனத்தைபிழைத்தமெய்ச
சேக்கண்மீதுசெறிக்குஞ்சிறியனும்

எ - து பசுக்களைப்பொறுத்தற்கரியவியாதிகள்பொருந்தினவையிற்றைப் பார்த்துதன்பிணியைத்தனக்குவந்தபிணிபோலநினைத்துப்பரிகாரஞ்செய்யாதவனும்,

முடலிளைத்துநிற்குமெருதுகள்மேலேபொதிமுதலியமிகுந்தபாரங்களை யெடுத்து மற்பனும் எ - று (எ௨)

விடையின்பீசத்தைவெய்யவினைஞரா ❋
லுடையச்செய்விக்குமூனனும்வந்தையி ❋
னிடையிற்பாரமெடுத்துமிழுதைபு ❋
மிடபந்தன் னிலெடுத்துமிழுக்கனும் ❋

எ - து சேக்களினுடையபீசத்தைக்கொடியதொழிலினையுடையசேமாறிகளாலுடையும்படிசெய்விக்கும்பொல்லாதவனுமலட்டுப்பசுவின்முதுகிற்பொதிகளையெடுத்தும்- அறிவில்லாதவனுமிடபங்களிலேபொதிகளையெடுத்து மீனனும் எ - று (எ௩)

வருந்துமேபதம்வைப்பின்மரிக்குமே ❋
பொருந்துமண்ணிற்புழுக்களுமென்றுளம் ❋
வருந்தியேபதமெல்லெனவைத்திடா ❋
தருந்தவத்தைப்பிரிந்தவராக்கனும் ❋

எ - து யாவர்க்குமிடமாகப்பொருந்தும்பூமியிலடிவைக்குங்கால்புழுக்களு- மெறும்புமுதலியனவும் - வருந்திரோமென்றுஞ்சாமென்றுநினைந்துமனநொந்தடியைமெத்தெனவையாதவரியகொல்லாதவிரதத்தைவிட்டவிராக்கதனுக்கொப்பானும் எ -று (எச)

உண்ணவூனைவிரும்பியுயிர்க்கொலை ❋
யெண்ணுவான்கொலைகண்டிரங்கான்கொலை ❋
பண்ணுவானைத்தடுத்துப்பகர்கிலா ❋
னண்ணுவானிவரோடெனுநால்வரும் ❋

எ - து வெளி (எரு)

மிக்கசாதியுட்டோன்றியும்வேதியர் ❋
தக்கநதுய்த்திடச்செய்யுந்துரிசனுந் ❋
தக்கதென்றுமதுமணஞ்சார்தருந் ❋
திக்கிஞரிசெலுத்துஞ்சிறியனும் ❋

எ - து உத்தமமானநற்குலத்திற்பிறந்துமர்குலத்துக்கேற்பப்பாதுகாவாமற்

பிராமணரைத்துன்பமனுபவிக்கும்படிசெய்யும்பொல்லாதனுக்- கன்முதலிய நாற்றம்வர்தவீசாநிற்குந்திசையிலதமையில்லையென்றுநாசியிலனுகர்ந்துகொள்ளு மீனனும்- எ - று (௭௬)

பாவஞ்செய்யப்பயமில்படிறனும்
ஏவஞ்செய்யவிளைப்பிலிமூடனும்
தேவர்தம்மைக்குறித்துத்திகழ்விதி
மேவயாகஞ்செய்யாத்தனவேந்தனும்

எ - து பாவஞ்செய்தற்குப்பயப்படாதவஞ்சகனும்- பிறர்க்குவருத்தமும் பொல்லாப்புச்செய்தற்கிளையாதமூடனும்- தேவர்களைநோக்கிய சுவமேதமுதலிய யாகங்களைவிளங்காநின்றவிதிமுறைபொருந்தச்செய்யாதஇருந்ததிரவியத்தையுடைய- இராசாவும் எ - று

எவ்வம்- ஏவமெனத்திரிந்தது (௭௭)

ஆலயத்தையமலனுக்காக்குக்
கோயினேனிலைக்குளிர்ந்தண்ணறு
மாலைசூட்டவும்வல்லனுமல்லனுக்
காலனும்மெனப்போவறுங்கல்லனும்

எ - து யாம்நின்மலனாகியசிவனுக்குத்திருக்கோயிலைத் தான்கட்டினேனில்லை, பல்லதுகுளிர்மையுடைத்தாயமணம்பொருந்தியவில்வமாலைமுதலியவற்றைமுக்காலமுஞ்சிவனுடையதிருமுடியிலேசாத்தவுஞ்சமர்த்துடையனுமல்லனென்றுமனத்தின்கண்ணேறுதலில்லாதகன்னெஞ்சனும் எ - று [௭௮]

கூர்த்தநீபணங்கூடக்குறுகினர்க்
கார்த்தெதிர்ந்தழையாதவலனும்
மூத்துளார்பிணியுற்றினர்பற்றிலர்
பார்த்தபோதுபரிவில்படிறனும்

எ - து மிகுந்தபசிபொருந்திவந்தணுகினோர்க்கெதிரேசென்றுநல்வார்த்தை சொல்லியழைத்து அன்னமிடாதபொல்லாதவனும், வயோதிகர்-வியாதியாளர்-மிடியரிவர்கள்தன்னைவந்துகண்டபோதாயினும்அவர்கண்மேலிரக்கமில்லாதபொல்லாதவனும் எ - று (௭௯)

தன்னிற்றண்ணியனேவலைத்தக்கதென் ✽
றுன்னிச்செய்புமறிவிலவூனனு ✽
மென்னெனுதசங்காக்குமெளியனுந் ✽
துன்னுமாயிடங்காக்குந்தொழிலனும் ✽

எ து தனக்குக்கீழானேனேவலைநல்லதென்றுகருதிசெய்யுமறிவில்லாதகுற்றமுடையோனும் ஆடு-எருமை-யிவைகளைக்காத்ததினால்வரும்பயனியாதென்றெண்ணுமல்மேய்க்குமொய்யவனும் எ று [அய]

அச்சமின்றியருவினைக்காடகத் ✽
திச்சையால்வருந்துன்பமுமெண்ணிடான் ✽
முச்சியேமரக்கோவைமுயற்சியாற் ✽
கச்சிடாதுகடற்செலுங்கல்லனும் ✽

எ து தனவாசையினாலேபொறுத் தற்கரியபாவத்துக் கஞ்சாதுஆழ்கடலின்டுவேகாற்றுமுதலியபொருந்திறகப்பல்கவிழ்ந்துமரிபபோமென் னுந்துக்கமுமெண்ணுதுமுயற்சிமிகுதியாலேகபபலைப்பண்ணியதன்கணேறுதலைவெறுத் திடாமற்கடலோடுங்கன்னெஞ்சனும் எ று

மரத்தாற்கோத்தலினாலே மரக்கோவையெனக்கப்பற்சோர்காரணப்பெயராயிற்று [அக]

அகத்திற்பண்பறுத்தாடகத்தாசையான் ✽
முகத்திற்பண்மைமுகிழ்த்தவிதத்துடன் ✽
சகத்திற்காளையர்தம்மைமயக்குவார்க் ✽
குகப்புச்செய்தவடோள்புணருனனும் ✽

எ து உள்ளத்தின்கணன்பினையொழித்துப்பொருளாசையினான்முகத்திற்கண்மலர்ச்சியைத்தோற்றுவித்துஇராகவிதத்தினாலேபூமியின்கணிளைஞராயுள்ளோரைமோகிப்பிக்கும்வேசைகளுக்குச்சந்தோஷத்தைச்செய்தவர்கள் தோளிணையைக்கூடுந்திமையுடையோனும் எ று [அஉ]

தபதிகாருகன்கொல்லன்றனமனர்க் ✽
குபகரிப்பனென்றொட்டினனான்மைரி ✽
யபகரிக்கும்பிணியாற்றுப்பானெனு ✽

கைத்திடாதுகவரக்கருதிய *
சித்தமேவிடச்சென்றிரந்தேகொளும் *
பொய்த்தவம்புரிபூசுரன்றானுமே *

எ - து முற்கூறியவிந்தக்கொடுமைகளோடுகூடியகொடுங்கோன்மன்னன் துகிரவியத்தைப்பாகாதென்றுவெருமலதனை வாங்கக்கருதமாசைமிகுதியாலவன் பாற்சென்றிரப்புரைகூறிவாங்கும்பொய்த்தவத்தைச்செய்யாநின்றபிராமணனும் எ - று (அகூ)

சோரன்றன்னைத்துயக்கமனத்தினாற் *
சோரனன்றெனநீக்குந்துரிசனுஞ் *
சோரனல்லனைச்சூட்சியிற்பிடிப்பிறைற் *
சோரனென்றுதுணித்திடுந்துட்டனும் *

எ - து யூகமற்றமனத்தினாலேகள்ளனைக்கள்ளனல்லனென்றுவிடும்பொல்லாதவேந்தனு, மாராய்ந்துவிசாரியாத அறிவின் மையாற்கள்ளனல்லாதவனைக்கள்ளனென்றுக்கினைபண்ணுங்கொடுங்கோன்மன்னனும் எ - று (அஎ)

சோரனுக்குத்துணைச்செலுந்துட்டனுஞ் *
சோரவித்தைகள்சொல்லுந்துரிசனுஞ் *
சோரனைச்சோரனென்றறிந்துந்தனுஞ் *
சோரனுமவரைச்சுளியானுமே *

எ - து கள்ளன்றிருடுமிடத்தவனுக்குத்துணைப்போனதீயோனு, மவனுக்குக்களவுநூல்களையுபதேசிக்கும்பொல்லாதவனுங், கள்ளனைக்கள்ளனென்றறிந்துமவனோடுநட்புச்செய்யுங்கள்ளனும், அவனைக்கண்டாலித்தொழில் நீசெய்யாதே யென்றுகோபியாதவனும் எ - று
சோரவித்தைகளாவன, மந்திரந்தெய்வமருந்தேநிமித்தந் தந்திரமிடனேகாலங் கருவியெனஎண் வித மாயிருக்குமிதனைச் சிலப்பதிகாரமுதலிய நூல்களிற்காண்க (அஅ)

எங்கிளந்தடங்கொங்கையைபின்புறங் *
காந்தளீங்கவக்கார்கைதோளினை *

தோய்ந்தசோரனைத்தொட்டுத் துயர்செயா *
வேந்தனும்மனைச்சோரனில்வேறலன் *

எ - து ஆபரணங்கள் தாங்குமிளமைத்தன்மையுடையபெரியமுலையினையு டையாளைக்கூடிமனமகிழ்ச்சிபொருந்துங்கணவன்பிரிந்தகாலத்தந்தமனையாளு டையதோளிணையைப்புணர்ந்தகள்ளனைப்பிடித்துத்தண்டஞ்செய்யாதஅரசனும் பிறர்மனைச்செல்லுங்கள்ளனில்வேறாகானாதலாலர்தவிராசாவும் எ - று (௮௯)

பாலைநெய்யைப்பலத்தைத்திலத்தினைச் *
சாலியாதியன்றானியத்தன்புலான் *
மூலமாதிமுதிரையிறுதியைச் *
சேலையோடுபட்டாடைதிருடனும் *

எ - து வெளி - மூலம் - கிழங்கு - முதிரை - துவரை (௯௰)

பரியகம்பளந்தன்னையும்பாசமும் *
வரியவூணுமதுவுந்தாலமுங் *
திரணமீறுசெறிந்தசில்பண்டமுங் *
கரமுறப்பற்றிக்கொண்டிடுங்கள்வனும் *

எ - து வெளி - பாசம்-கயிறு-வரியவூண்-ஆகாதெனவரைத்தவூண் (௯௧)

சத்திரந்தனைப்பாதுகைதன்னையும் *
வித்தரித்திடும்பாயின்விதத்தையுங் *
கொத்துலாமலர்க்கூடையும்பேழையு *
மத்தமுட்டியெடுக்குமவலனும் *

எ - து வெளி - கொத்துலாமலர்க்கூடை - திருப்பூக்கூடை - அத்தம் - கை (௯௨)

சங்கமாதிசலத்திற்சனித்தவும் *
வங்கமாதிமரத்தின்வருத்தகவு *
மங்கலத்தமழலைமுழவமு *
மங்கையாற்பற்றிக்கொள்ளுமவலனும் *

எ - து சங்குமுதலாகநீரின்கட்பிறந்துள்ளனவுங், கப்பன்முதலாகமரத்திருப்பண்ணியுள்ளனவு, மங்கலவாத்தியமானமழலைச்சொல்லையுடையமத்தளமுமானவிவைகளையுந், திருடிமவத்தனும் எ - று (௬௩)

ஈயந்தன்னையிரும்பினைச்செம்பினைத் ※
தேயனுந்திரபுத்தனைச்செங்கலை ※
மாயவாழ்க்கையர்தங்கண்மனையினு ※
மேயுமேதுமெடுக்குமிழுதையும் ※

எ - து — வெள் — தேயன் எ - து திருடன் -
ஈரபு - எ - து - பித்தளை - இவைகள்வடமொழி (௬௪)

பிறர்பொருட்கடுகிற்பினவாயினு ※
மறையநின்றதனைக்கொளும்வஞ்சனு ※
நிறையறக்கொளவெண்ணிடுநெஞ்சனு ※
மறையுமாதனுமன்னியர்க்காகவே ※

எ - து பிறர்க்குரியபொருள்களைக்கடுகிற்பாதியாயினுமவர்காணவண்ணஞ்சென்றுதிருடிங்கள்ளனு, முத்தமமானநிறையென்னுங்குணநீங்கப்பிறர்பொருளைக்கைக்கொள்ளும்படிவிசாரிக்குமனத்தையுடையோனு, மொருவன்பொருளைப்பிறர்க்காம்வண்ணஞ்சொல்லுமறிவில்லாதோனும் எ - று (௬௫)

என்னுமித்தொகையாவருமீங்கியற் ※
பன்னுபாவக்கடலிடைப்பட்டுளா ※
ரின்னபேதத்துரிசுமியற்றிடிற் ※
பின்னுவார் குழற்பேதையர்தாமுமே ※

எ - து இங்ஙனஞ்சொல்லப்பட்டவிந்தப்பாவவிதத்தொகையிலுள்ளோரொல்லோருமிவ்விடத்திந்தவியலின்கண்விதித்தவுபபாதகத்திற்றண்ணியபாவமாகியகடலின்கணமிழ்ந்தும்பாவிகளாவோர், பின்னற்றொழில்பொருந்தியநீண்டவளகத்தினையுடையமடவார்களுமுற்கூறியவிந்தப்பாவபேதங்களான தீமைகளைச்செய்வாராயினத்தன்மையுடையபாவிகளாவோர் எ - று

பாவக்கடலிடைப்பட்டுளார் எ து நடுநிலைத்திபகம் (௬௬)

மேலதிபாதகமுதலிய கன்மங்களைச்செய்தோர்பெறும்
பயனுணர்த்துகின்றார்.

ஈட்டுமிந்தவினைத்தொகையானவையு
மீட்டிடும்படிவெய்யநமன்றமர்
காட்டிடுந்துயராக்கைகலந்துபோய்
வாட்டுமாநிரயத்துள்வருந்துவரே

எ - து. அதிபாதகர்முதலாயினோரிவ்வண்ணஞ்செய்யுமிந்தவதிபாதகமுதலிய கன்மபலங்களெல்லாவற்றையுமொழிக்கும்படி கொடியயமதூதர்களுண்டாக்குந் தன்பவுடலாகியயாதனாசரீரத்தையடைந்துசென்றுதுக்கத்தைக்கொடுக்குநரகத் தின்கணிருப்பர் எ - று. (௧௭)

மானிடரேயன்றித்தீமைசெய்தவிலங்குபறவைகளு
நரகமடையுமென்பதுணர்த்துகின்றார்

மைந்தர்மாதருமற்றையலியுமோ
பந்தபாசவிலங்குபறவையு
முந்தவாக்கையிதுவெனமுன்னுறு
மந்தவாக்கையடைந்தகன்றுழுமே

எ - து. ஆணைச்சார்புள்ளோர்பெண்ணைச்சார்புள்ளோரலியைச்சார்புள்ளோர்மா த்திரமோநரகத்தின்கணழுந்துவது, அவர்களையல்லாதபாசபந்தத்தையுடைய மி ருகங்களும்பறவைகளுமுந்தவுண்டானவுடம்புபோலெதிர்வருமந்தயாதனாசரீரங் களைப்பொருந்திப்பூமியின்கணெடுத்தவச்சினின்றுநீங்கிநரகத்தின்கணழுந்தும் எ - று. (௧௮)

முற்கூறியஅதிபாதகமுதலியபாவபலங்களைக்கொ
டுப்பவன்யமனென்றுஞ்சிவபத்தர்கள்செய்தபாவ
பலங்களையாசாரியன்பிராயச்சித்தத்தாற்போக்கு
வனென்றுமுணர்த்துகின்றார்

விண்ணுளோர்நரர்மற்றைவிலங்குமே
பண்ணுபாவபலத்தைக்கொடுப்பவன்
றிண்ணமேயமன்றேசிகன்றீர்த்திடும்
பண்ணிற்பாவமிதஞ்சிவபத்தரும்

எ - து. தேவர்களு, மானிடரு, மிவர்களல்லாதமிருகங்களுஞ், செய்யுந்தீ

வினைப்பயனைப வையகளுக்குக்கொடுப்பவன் யமராசன், சிவபத்திகளையுள்ளோர்பா வங்கைச்செய்வாராயின் அந்தப்பாவபலங்களையாசாரியன் பிராயச்சித்தசாந் திகளாலேபோக்குவனிது நிச்சயம் எ - று

நிண்ணமென்பதனையிருபாலுங்கூட்டுக (௯௯)

வெளியாகப்பாவஞ்செய்தவுன்மாக்களையிராசாத்
தண்டிப்பனவனாற்றண்டிக்கப்படாதோரையமனே
தண்டிக்கப்படுவனென்றுணர்த்துகின்றார்

பிணக்கந்தன்னையும்பெற்றவர்தம்மிடைக் ※
கணக்கிலாரையுங்கள்வர்கடம்மையும் ※
வணக்குவான்மன்னன்மற்றையர்தங்களை ※
யிணக்குவானரகத்துவியமனே ※

எ - து ஒருவர்க்கொருவர்வழக்கின்கண்மாறுபாட்டைப்பெற்றுவந்தவிடத் தழிவழக்குடையோரையுஞ்சோரர்முதலாயினோரையுந்தண்டித்துநிறுத்துமவ னரசனே, யவனாற்றண்டப்படாதோரையுமாசாரியராற்பிராயச்சித்தப்படாதோ ரையுநரகத்தின்கட்செலுத்தித்தண்டிப்போனியமதருமராசன் எ - று (௱)

இந்தபாவங்கள்தீர்த்தற்கோடற்குப்பரிகாரஞ்செ
ய்துகொள்ளுமாறுணர்த்துகின்றார்

ஆதலாற்செய்ததீங்கையறுத்திட ※
வேதமாதிவிதியும்விளங்கிய ※
போதகன்பதம்போற்றவலன்செயும் ※
வாதியாதபிரத்தியவாயமே ※

எ - து தீவினைசெய்தோர்க்குநரகமும்அந்தநரகத்தின்கட்செலுத்துமொரு இயமதருமராசனுமுண்டாகையினாலே, யான்மாக்கள்தாந்தாஞ்செய்தபாவங்க ளையொழிப்பதுபொருட்டாகவேதமுதலியநூல்களிற்சொன்னவிதிகளையுமறிந்த வாசாரியனதுதிருவடியைவணங்குவாராயிலாசாரியனுமந்தவான்மாக்களைத்தீவி னைகள்வருத்தாமைக்குக்காரணமானபரிகாரத்தைச்செய்துதீர்ப்பன் எ - று (௱க

மேன்முடிந்ததுமுடித்துணர்த்துகின்றார்

வேறு

னையறிந்தோனுனதவத்தோனே எ - று

அண்டமுமென்னுமும்மை பிண்டமுமெனவெச்சத்தின்கண்வந்தது [௱௪]

இதுவுமது

இடுபலிகொண்டுணியென்பவனேயிருவினைதீர்த்திடுமென்பவனே ※
நடநவிலுந்தொழினல்லவனேநாசமுமாமயனல்லவனே ※
மடலவிழ்கொன்றையமாலையனேவந்தனையாஞ்செயுமாலயனே ※
படிதனிற்காசிப்பதியவனேபல்லுயிர்க்கெல்லாம்பதியவனே ※

எ - து இருடிகள்மாதரில்லந்தோறுமிடாநின்றபலியினைப்பெற்றுண்போனென்றியாவருஞ்சொல்லப்படுவோனே, நல்வினைதீவினையிரண்டினையுநீக்குமென்றுடையவிறைவனே, பஞ்சகிருத்தியமாகியநிருத்தம்பயிலுநற்றொழிலையுடையோனே, பிறப்பிறப்பினையடையும்பிரமாவல்லாதோனே; யிதழ்விரியநின்றகொன்றைமாலையையுடையோனே, யாம்ஆராதனைசெய்யுந்திருக்கோயிலின்கணுள்ளோனே, பூமியின்கட்பொருந்தியகாசிப்பதியையுடையோனே, பலவாகியவான்மாக்களுக்கெல்லாங்கருத்தாவாயுள்ளோனே எ - று (௱௫)

குமரத்துதியுணர்த்துகின்றார்

வேறு

பூதிபூடணன்வேதபாடணன்பூளைசூடினன்காளியூடின ※
னாதிநாயகன்பேதைநாயகனுமைபுணர்னன்வாய்மைபேணினன் ※
போதன்மாதவனாடிநேடவும்பூணவேணயங்காணொணாவரன் ※
காதன்மாமகனாறுமாமுகன்காசில்வாசகம்பேசுவாமரோ ※

எ - து திருநீற்றையேயாபரணமாகத்தரிப்போனுமாய்வேதத்தையருளிச்செய்வோனுமாய்ப், பூளைமலரைத்திருச்சடையிலேசூடுவோனுமாய்க்; காளியுடனேவாதுசெய்வோனுமா, யாதிகருத்தாவுமா, யுமைக்குக்கணவனுமா; யாமையோட்டையாபரணமாகவணிந்தோனுமாய், வேதாகமங்களைப்பாதுகாப்போனுமாய்த், தாமரைமலரின்கணுறையும்பிரமாவுந், திருமாலுந், தம்முண்மாறுகொண்டுதேடவுமவர்கள், கண்ணிற்பொருந்தும்வண்ணமில்லாமைபொருந்தியதன்மையைக்காணவொண்ணாதவனுமாயிருக்கிறசிவனுடையகுமரனையாறுமுகக்கடவுளினதுகுற்றமற்றதிருவாக்கைப்புகழாநின்றோம், எ - று (௱௬)

அறைந்தவதிபாதகமாதி யடைந்தாரியமனுலகதனைச் ※
செறிந்துசிவந்தவிழிகண்டு சித்தங்கலங்கிச்செயலழிந்து ※
பிறிந்துபுணர்ந்துபிலவழியை ப்பிடித்துத்தூதரடித்தெறிய ※
மறிந்துநிரையக்குழிவீழ்ந்து வருந்தும்விதத்தைவகுப்பதன்முன் (௧)

அறிகமுனிவவறம்புரிந்தா ரவருமியமனுலகதனை ※
நெறியிற்றருமபலநிகழ நீடுமகிழ்ச்சிகூடியிடச் ※
செறியுமுறையுமவர்க்கவனுஞ் செய்யுஞ்சிறப்புந்துறக்கத்தி ※
னுறையுமுறையுந்தொகைசெய்தே யுரைப்பாமுலகமுவப்புறவே ※

இவையிரண்டுமொருதொடர், முன்னேயியலிற்கூறிய அதிபாதகமுதலியபாவ பேதங்களைச்செய்தோர் யமலோகத்திற் சென்றியமதன்மராசனது கோபத்தினலேசிவந்தகண்ணினைக்கண்டுமனங்கலங்கிச்செயலற்றுச்சுவர்க்கத்துக்குப்போம்வழியைவிட்டு நரகத்துக்குப்போம்பெலத்துவாரத்தையடைந்து தம்மைப்பிடித்துக்கொண்டுசெல்லும் யமதூதர்களடித்தெடுத்தெறிய த்தலைகீழாய் நரகக்குழியின் கண்விழுந்துவருந்தும்விதங்களை வகுத்துச்சொல்வதுக்கு முன்னேபுண்ணியங்களைச்செய்தோர்களு மியமலோகத்தின் கண் முறையானே புண்ணியபலன்கள்வந்து பொருந்துகையினலேநிலைபெற்றமன்மகிழ்ச்சியுண்டாகச்சென்றடையுமுறையையுமவர்களுக்கந்த யமதன்மராசன் செய்யுஞ்சற்காரத்தையு மவர்கள் சுவர்க்கத்தின்கணிருக்குமுறைமையையுந்தொகுத்துலகத்துக்கு மேன்மையுண்டாக் ச்சொல்லாநின்றோம் அதனைமலையமுனிவனேயறியக்கடவை என்று (உ)

ஆக்கைநிலையில்லாமையுணர்த்துகின்றார்

முளைத்தகருவுமழவுருவு முதிராவுருவுமுதிர்ந்தமையா ※
விளைத்தவடிவுமெனுமிவற்றி னிருந்தவுயிர்கள்வினையிறலும் ※
வளைத்ததூதர்வதைசெய்ய மற்றோருடலம்பற்றிமுனம் ※
விளைத்தசெய்திப்பலம்விளைய வியமபுரியைவிரவிடுமே ※

எ‐து கெற்பகோளகையின் கட்பதிந்த கெற்பமும்பாலகவடிவமு முதிராததருணவடிவமுமூப்படைந்த தன்மையினலேமெலிந்த விருத்தவடிவமுமானவிந்தச்சரீரங்களிற்பொருந்திய வான்மாக்களும்வினை தொலைந்தவளவில் வந்துசூழ்ந்தியமதூதர்கள்வதைக்கவிந்தப்பூதனுசரீரத்தைவிட்டு யாதனுசரீரத்தையடைந்து அவ்விடத்தின்முன்னுட்செய்த கன்மபலம்பொருந்தா நிற்பவதுவனுபவித்தற்பொருட்டுயமலோகத்தையடைவர்கள் என்று (௩)

மேனிறுத்தமுறையானேயறம்புரிந்தோர் யமலோகத்தையடையுமுறைமையு ணர்த்தவான்றொடங்கியதனுட்பாதுகை யுதவினோரடையுமுறைமையுணர் த்துகின்றார் வேறு

பாதுகையுதவினர் பனவருமுறவே *
வாதமுமனபரி வரவழியுகையா *
வேதரியதுவென வெளிதுறவெனவும் *
போதகரிவரென யமபுரிபுகுவார் *

எ - து அந்தணர்பெறும்படிசெருப்பு மாவடியிலைகளைக்கொடுத்தோர்,வேக த்தினால்வாயுவையொத்தகுதிரை, வழியின்கண்வந்து பொருந்த வதன்கணேறிநட த்தியிவர்க்கரியபொருள்யாதென்றுசொல்லும் வண்ணமெய்ப்பொருளுங்கைவந்து பொருந்தி யறிவுடையோரிவரென்று சொல்லும்வண்ணம் யமலோகத்தை யடை வர் எ - று (௪)

குடைதானம்பண்ணினோரடையும்பலமுணர்த்துகின்றார்

சத்திரமுதவினர் தகைமையர்பெறவே *
மொய்த்தெழுமுகிலினிழல் வழிபுறமுறையா *
லெத்தொகையினியன வவைவெளிதுறவே *
சித்தமுமகிழ்வுற யமபுரிசெறிவார் *

எ - து வெளி இதனுள் சத்திரம் குடை (௫)

வத்திரதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பட்டினையுதவினர் பனவருமுறவே *
தொட்டிடவினியன துகில்புனைவடிவுட *
னிட்டமதுறுபயன் வழியெளிதுறவே *
சிட்டருமிவரென யமபுரிசெறிவார் *

எ - து வெளி இதனுள் சிட்டர் பெரியோர் [௬]

மெத்தைதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

தவிசினையுதவினர் தகைமையர்பெறவே *
புவிதனிலரியது பொருவிலையொரியது *

சிவிகைபுமுறவதன் மிசைவழிதிகழ்வா *
ரிவர்மிருதவனென யமபுரியிசைவார் *

எ - து வெளி. இதனுள் தவிசு மெத்தை சிவிகை பல்லக்கு [எ]

அசுவதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

தத்துறுபரியினை யுதவியதகைமைய *
ரத்தகுபரிமிசை யமர்குறவழியே *
யெத்தொகையினியன வகையெளிதுறவே *
சித்தருமிவனென யமபுரிசெறிவார் *

எ - து வெளி. இதனுள் சித்தர், சித்தியையுடையோர் (அ)

கட்டில்தானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

கட்டிலைபதனையு முதவினர்களிறு *
ரிட்டமதுறுமஃதென வழியிடையே *
கிட்டியவதனொடு கெழுமியவழகாற் *
சிட்டருமிவனென யமபுரிசெறிவார் *

எ - து வெளி. இதனுள் கட்டிலை, கட்டில் (௯)

சாலைதொப்புவைத்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பொழிலினைநிறுவிய பொருவருபுகழினர் *
நிறலுறுபொழில்வழி நிறைமலருறவே *
விழைவினிலினியன வெவையவைமிகவே *
யழகியரிவனென யமபுரியடைவார் *

எ - து வெளி. இதனுள் பொருவரு ஒப்பில்லாதது விழைவு விருப்பு [௰]

திருநந்தவனம் வைத்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பூமலிபொழிலினை நிறுவியபுகழினர் *
தேமலிரதமுமுறவணிசெறிவா *
ரோமமுமிசைவர்கள் வழியிடையெளிதே *
காமலிபுகழொடு நடுவினையடைவார் *

எ து வெளி இதனுள் வில்லி, காமராசன் உழை, இடம் (யச)

கோதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

கோவினையுதவினர் குலமறையவர்கைப் *
பூவணியிரதமுமுறவது புகுவார் *
ஓவியமனமட வரலியருடனே *
தேவருமிவனென யமபுரிசெறிவார் *

எ து வெளி இதனுள் அணி அழகு (யரு)

அன்னதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அன்னமுமுதவின ரருமறையவர்பாற் *
றன்னிகரில்லன முறவழிதனினும் *
பன்னியவவைதனை யுணுமுறைபயிலா *
நன்னயரிவனென நடுவனையடைவார் *

எ து வெளி அன்னத்தை யனமென இடைக்குறை யாக்கினார் பன்னியது சொல்லியது நன்னயர் நல்லறிவினையுடையோர் (யசு)

வியாதியாளர்க்கவுடததானஞ்செய்தோ ரடையுமுறைமை யுணர்த்துகின்றார்

உதவினரவுடத முறுபிணியினர்கைத் *
திதமுறுமுருவமு முறவழிசெறிவார் *
இதவிதமெவையவை யெளிமையினுறவே *
மதனனுமிவனென யமனுழைமகிழ்வார் *

எ து வெளி திதம் நிலை (யஎ)

குருபணிவிடைசெய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

குரவனபணிபுரி குணமுடையவர்முன் *
மருமலரிரதமும் வரவழியெதிரே *
திரமுறவதனமர் தெரிவையருடனே *
பொருவிலரிவனென யமபுரிபுகுவார் *

எ து வெளி திரமுற நிலைபெற [யஅ]

அந்தணர்க்குப்பாதம்விளக்கினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அருமறையவர் திருவடியிணையதனிற் ✽
பரிவொடுகுளிர்புனல் பயில்வினையவரும் ✽
தருவமர்குளிர்நிழல் வழிபெறுதகையே ✽
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் ✽

எ து வெளி (௧௯)

அந்தணரிடத்துச்சொன்னாத்துதிகளைத்தானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

ஒளிமணியுதவினர் கனகமுமொருமைத் ✽
தெளிதிகழ்மறையவர் திகழ்கரந்தனிற் ✽
றுளாவிலகனகநல் வளைவழிதுதையா ✽
வளியுளரிவரென நடுவினையடைவார் ✽

எ து வெளி ஆலே ஒப்பு தூலியென லகார ளகாரமயக்கமாயிற்று துளைநல் நெருங்குதல் (௨0)

பெரியோர்களுக்குப்பாதம்வருடினோரடையுமுறைமை யுணர்த்துகின்றார்

உத்தமரொருமைய வுளார்வினராடியொடு ✽
கைத்தலமுறமுறைவருடிய கருணையர் ✽
தத்துறுபரிமிசை யமுகருதகவே ✽
சித்தசனிவரென யமபுரிசெறிவார் ✽

எ து வெளி சித்தசன் காமன் [௨௧]

அந்தணர்க்குத்தேரினைத்தானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அருமறையவருற விரதமுமதனொ ✽
மருமலரிரதமுன் வரவழியிடையே ✽
திரமுறவதனமர் தெரிவையருடனே ✽
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் ✽

எ து வெளி (௨௨)

பூமிதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பூமியையுதவிய பொருவருபுகழினர் ☼
தாமுனுமினியன வழிபெறுதகையே ☼
காமினியவரொடு களியுறவளவா ☼
நாமலிபுகழொடு நடுவினையடைவார் ☼

எ - து வெளி காமினி தந்தமனத்துக்கொத்ததேவமகளிர் (௨௩)

முற்கூறியவந்தணர்க்கேயன்றியாவர்க்கு மன்னபானியமுதவினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பானமுமுதவினர் பரிவொடுபலவித ☼
போனமுமுதவினர் புரிதருமுறையே ☼
தானினிதுறவவை தனையனுபவியா ☼
மேனயரிவரென யமனுழைவிழைவார் ☼

எ - து வெளி மேனயர் மேலானவறிவினையுடையோர் [௨௪]

ஈண்டுக்கூறியதேயன்றி மற்றுமுள்ளதானங்கள் பண்ணினோரடையுமுறைமைக்குமோர்பொதுவிதியுணர்த்துகின்றார்

மற்றுளவினைநல மருவினரவரும் ☼
பற்றுவர்வழிதனின் முறைபெறுபலமுந் ☼
துற்றுவர்துயரிலர் துரிசறுநெறிசேர் ☼
நற்றவரிவரென நடுவினையடைவார் ☼

எ - து வெளி துரிசு, குற்றம் துற்றுதல் அனுபவித்தல் (௨௫)

முற்கூறியதானங்களெல்லாவற்றினுள்ளு மன்னதானமேயதிகதானமெனவதற்கோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்

வேறு

அன்னதானமறைந்தவற்று ளதிகபலமேயருந்தினனுக் ☼
கின்னல்கெடுக்குமப்பொழுதே யின்பந்தனையுமிசைவிக்கு ☼
மன்னுமுடலுள்வலியதனுன் மாறில்பொருளேபஃததனு ☼
லென்னிலுவமையிதற்கில்லை மண்ணின்கண்ணேவெவ்விடத்தும் ☼

எ - து முற்கூறியதானபேத மெல்லாவற்றினுள்ளு மன்னதானமேயதிகமான

தேவர்முனிவர்தானவருந் திளைப்பருணவைத்திதிவிரும்பி ❋
யாவருணவைவிரும்பாதா ரிடர்சேருடலுண்முந்நூற்றெட் ❋
டோவாநோயுண்டவற்றுள்ளும்பசிநோய் கொடியதுமினதனுக் ❋
காவாவென்றேயருளாளனருந்து மருந்தோதனமன்றே ❋

எ - து தேவர்களு மிருடிகளு மசுரர்களுந் தங்கள் தங்கள் சரீரமழியாமல்நிற்றலைவேண்டியன்னமாதியவுணவினையருந்துவர்கள், ஆகையினாலேயுலகத்தின்கண்ணெவர்தாமன்னத்தைவிரும்பாமல்விட்டோர், ரஃதன்றித்துக்கத்துக்குக்காரணமாய்ப்பொருந்தியவுடம்பின்கட்டொடர்ச்சிவிடாத முந்நூற்றெட்டு வியாதியுளதாம்அதனுள்ளும்பசிநோயேமிகவும்பொல்லாதது, அப்பசிநோயையாதொருவர்பொருந்தின்அருளினையுடையோரந்தோவந்தோவென்றிரங்கி யதற்குக்கொடுக்குமருந்தாவதுமர்தவனனமே. எ - று அன்றென்கிளவியாமென்னும் (௨௯)

மேலன்னதானஞ் செய்வோரேபிராணதானஞ்செய்வோராமென்றுணர்த்துகின்றார்

உற்றபசிநோய்க்கனமருந்தை யுதவுவாருமில்ராகி ❋
லற்றதுயிருமவ்வுடலு க்கன்னமளிப்பாரவருண்டேற் ❋
பெற்றதுயிருமவ்வுடலம் பெறுமவ்வுயிருந்தருமாதி ❋
சொற்றையீவானுயிரீவான் றருமமுதலுந்துயக்கறவே ❋

எ - து யாதாமொருவர்கொண்டபசிநோய்க்கன்னமாகிய மருந்தினைக்கொடுக்குந்தாதாக்களுமில்லையாயில் அந்தவுடலுக்குயிருமில்லையாய்விடும், அன்னதானஞ்செய்வோருளராயிற் பசிநோய்நீங்கியந்தவுடம்புஉயிரைப்பெற்று வாழும், மர்தவுயிருமறமுதலியநான்கையுஞ் செய்யப்பெறுமாகையினாலே யன்னதானஞ்செய்வோன்பிராணதானஞ் செய்வோனும், அதுவேயன்றிவிபரீதமறவறம்பொருள்வீடென்னுநான்கினையுந்தானஞ்செய்தோனுமாம். எ - து

சோறு - சொற்றையெனக்குறுகிற்று, ஈவானென்பதனைத்தருமமுதலுமென்பதனோடுங்கூட்டுக. (௩0)

அன்னதானஞ்செய்வோரிம்மைமறுமைப்பயன்களை யடைவரென்பதூஉந்தபோதனர்க்கன்னதானஞ்செய்வோர் தவப்பயன்பேர்பாதியாகசிற்பதென்பதூஉமுணர்த்துகின்றார்

பொன்னைமணியைப்புனையிழைபை மற்றும்விரும்பும்பொருளினையு *
மன்னமளிப்பாரிங்கடைவ ரங்குந்தாம்வேண்டியவடைவ *
ரன்னமதனையருந்தவரை யராத்தினர்களவர்பலத்தி *
றன்னுவார்களொருபாதி யவர்தாமொருபாற்றுன்னுவரே *

எ - று அன்னதானஞ்செய்வோரிவ்வுலகத்தின் கண்ணேதானே பொன்னையு மரத்னங்களையுமணியாநிற்குமாபரணங்களையுடைய மாதரையுமற்றுந்தாம்வேண்டியபதார்த்தங்களையும்பெறுவர், அந்தத்தேவலோகத்தின்கண்ணுந் தாம்வேண்டிய போகங்களைப்பெறுவர் அரியதபோதனர்களை யன்னத்தைப்போசிப்பித்தோர்கள் அவர்செய்ததபோபலத்திலொருபாதிபெறுவர்கள், அந்தத்தபோதனர்கள் மற்றவொருபாதியேபெறுவர்கள். எ - று (௬௧)

சரீரத்துக்குமதனுற்செய்யுமறமுதலியவற்றிற்கு மன்னமேமேலானகாரணமென்றுணர்த்துகின்றார்

அன்னமாக்கைதனையாக்கு மதனாலற மன்னுளவாகு *
மன்னமதனாலனைத்தினுக்கு மதிககரணமதனாலே *
மன்னமதனுக்கொப்பான கரணமில்லையாயுங்கா *
லன்னையாமகாரணமும் புதல்வர்க்குளதோவக மிடத்தே *

எ - று அன்னஞ்சரீரத்தையுண்டாக்கு மந்தச்சரீரத்தினாலே யறமுதலியான் குமுண்டாமதனாலெவற்றிற்கு மந்தவன்னந்தானே மேலானகாரண மாகையினாலேவிசாரிக்குமிடத்தன்னத்துக்குநிகரானகாரணமொன்றுமில்லை, யஃதெங்ஙனமென்னிற்பூமியின்கட்பிள்ளைகளுக்கு மாதாவுக்குநிகரானகாரணமுமுளதோவாதலாற்சரீரமுண்டாவதற்கன்னமுமாதாவுமே முதற்காரணம். எ - று

காரணங் - கரணமெனக்குறுகிற்று (௬௨)

அன்னமேசிருட்டிமுதலியகாரியகருத்தாக்கண் மூவருமாமெனவுணர்த்துகின்றார்

அன்னமதனையுலகனைத்து மாக்குமயனென்றறையுமறை *
மன்னுமுலகந்தனைக்காக்கு மாயனெனவுமதித்துமாக்குந் *
சொன்னவுலகமனைத்தினையுந் துடைக்குமரனுமெனச்சொல்லு *
மின்னமுறையாலெவற்றினுக்கு மிஃதேமுதலென்றெண்ணுகவே *

எ - து - வெளி - இதனுள் - முதல் - காரணம் (௬௩

உதகத்துக்கெய்தியதோர்சிறப்புவிதியு மன்னோதகமிரண்டையுந்தானஞ்
செய்தலேயதிகபலன்களைத்தருமென்பதுமுணர்த்துகின்றார்

உதகமதனையுயிரெல்லா முண்ணவிரும்புமதனாலே *
யுதகந்தனக்குமொப்பானபொருள் வேறில்லையுலகத்து *
ளுதகமன்னமெனுமிரண் டுமுயிரையோம்புமதனாலே *
யுதகமன்னமெனுமிரண் டுமுதவிற்பரமபலமுளதே *

எ - து — வெளி ஓம்புதல் - காத்தல் (௬௪)

இங்ஙனஞ்சிறப்பித் தவன்னதானமுத லாகியவிசிட்ட
தானங்களெட்டுமற்றுமுள்ளதானமுஞ்செய் தோர்,
யமலோகத்திலேயடைந்தபின்னர்ச்சுவர்க்கத்தைய
டைவரென்பதுணர்த்துகின்றார்

அன்னமுதகமாவசுவமாடைகுடைகட்டிலையசின *
மென்னுமிவைகளிருநான்குமீயிற்பிரேதபதியிரங்குஞ் *
சொன்னபடியேமற் றுமுளதானம்புரிவார்துயரகலத் *
துன்னுவார்களியமபுரியதன்பின் னடைவர்துறக்கமுமே *

எ - து அன்னமுந்-தண்ணீரும்-யானையுங்-குதிரையுந்துகிலுங், குடையும்-படுக்கைக்கட்டிலும்- புலித்தோன்முதலியவாதனமு- மென்னுமிந்தவெட்டுவிசிட்டதானங்களையுஞ்செய்வார் யமதன்மராசன், அனுக்கிரகத்தைப்பண்ணும்படிசெல்வர்கள், எண்டிைத்தபடிமற்றுமுள்ளதானங்களையுஞ்செய்வோர்தமதுதுக்கமெல்லாம்விட்டுநீங்கயமலோகத்தையடைவர்கள், அதற்குப்பின்பங்ஙனங்கூறியவிருவிததானஞ்செய்தோருமவனேவலினாற்சுவர்க்கலோகத்தையுமடைவர்கள் எ-று (௬௫)

மேலிறுத்தமுறையானேயறம்புரிந்தோர்க்கியமதன்ம
ராசன்செய்யுஞ்சிறப்பைமூன்றுசெய்யுளாற்குளகமா
கவுணர்த்துகின்றார்

வேறு

தருமநீதியர்கடருமராசபுரியடையவேதருமராசனும் *
விரையவேயவரையெதிர்கொளாவரவுவினவியேகருணைவிழைவினொ *
லரியவாதனமுமருளியேயுதகவிதியுமாதிநடுவந்தமு *
மொருமையோடவர்தமுளமுமோகையுறவுதவியேமதுரவுரையுமே *

எ - து வெளி

அரியவாதனம் - சிங்காதனம் - உதகவிதி, பாத்தியாசமனார்க்கியம் - ஆதிநடு
வந்தம் - பாதமுகஞ்சிரசு (௬௬)

வேதமாகிதனிலோதுநீதிபலமேவினியொருமைமேதையா ✽
லாதலானுமையலாதுதேடினருமாருயிர்க் குறுதியாவரோ ✽
நாதகீதநவின்மாதர்சூழாடமாடவேறுசிலர்நாண் மலர்ப் ✽
போதுசேரிரதமேறியேகிடுதுபோமினீரமரர்போகமே ✽

எ - து வெளி — மேதை-யறிவு - போகந்தருமிடத்தைப்போகமெனக்
கூறியதுபொருளாகுபெயராயிற்று (௬௭)

எண்ணரியதொருபலத்தைநீரறியிற்றினீர்தவறுமின்றியே ✽
நண்ணரியதன்னிலன்னவின்மீதனுபவித்துநாளுமதுமாளுறன் ✽
பண்ணியோவுடையபாவலேசமறுபாறவேயெமதுபாலினும் ✽
துய்மினீர்நரகபாதனைப்பலவுமென்றவர்க்குரைப்பனே ✽

எ - து — வெளி — லேசம் - சிறிது (௬௮)

மேலவர்கள்சுவர்க்கத்தையடையுமுறைமையுணர்த்துகின்றார்

ஏவல்பெற்றுநமனைத்தணந்திரதமேறியேயறிவுதேறியே ✽
தேவர்பெற்றநிதிதேசமுற்றதுலபோகமுற்றுமுறைசேரவே ✽
மேவியிட்டமுறவேயிருப்பர்மேவுதற்கரியமெய்ம்மைமேய ✽
பாவமுற்றினர்கள்பாதளக்குழியிலேதமேவிரிமைபற்றுமே ✽

எ - து இங்ஙனம்யமதன்மாசனைவலைப் பெற்றுப்பின்னரவனை நீங்கிப்புட்ப
கவிமானத்தேறியறிவுதெளிந்துதேவர்கள்பெற்றவாழுஞ்சுவர்க்கலோகத்தின்க
ணடைந்துநிகரில்லாதபோகங்களைமுழுதும்புண்ணியங்களையார்ச்சித்தமுறையே
வந்துபொருந்தவவையிற்றினைப்பெற்றுத்தாந்தாமிச்சித்தபொருள்களும்வந்துகை
கூடவிருந்துவாழ்வர்கள், அஃதேயன்றித்துன்பங்களொன்றும்பொருந்தார்கள்.
இதுசத்தியமேதேவலோகத்தின்கட்டுன்பமெய்தாதோவெனிற்பாவஞ்செய்தோர்
களெய்துநரகக்குழியிற்றுன்பம்புண்ணியஞ்செய்தோர்களெய்துஞ்சுவர்க்கவின்
பத்தின்கட்பொருந்துமோபொருந்தாது எ-று சுவர்க்கபூமியின்கட்டுன்பமே

ய்திருலதுவுநரகபூமியாய்விடுமென்பதுபற் றியேதமேயினிமைபற்றுமேயெனவி ருப்படுத்தினர் (௩௧)

இங்ஙனம்புண்ணியஞ்செய்தோர்களடையும்பயனைக்கூறிமேற்பா வஞ்செய்தோர்களடையும்பயனுணர்த்துகின்றார்

வேறு

புண்ணியபலங்கடன்னைப்புகன்றனம்புவியிற்பாவம் ※
பண்ணினர்பலமுஞ்சொல்வாம்பருப்பதமுனிவகேணீ ※
திண்ணியர்பாவபேதந்தீர்ந்தவர்சிவனுமுண்டென் ※
றெண்ணரியரச்சமெய்தக்கேட்டிடும்போதோவென்றும் ※

எ - று வாராய்பொதியமாமலையின் கணிருக்கு முனிவனே யிங்ஙனம்புண்ணி யஞ்செய்தோர்களெய்தும் பலன்களைச்சொன்னோம்,மேலிந்தப்பூமியின்கட்பாவஞ் செய்தோர்களெய்தும்பயனையும் திடசித்தராய்ப்பாவபேதங்களையுநீங்கிச்சிவனையு முண்டென் றுகருதினோர்கேட்குங் காலமேயன்றி யெக்காலமுமச்சமெய்தும்வ ண்ணஞ்சொல்லாநின்றோமதனைநீகேட்பாயாக எ - று

ஓகாரம் பிரிநிலைக்கண்வந்தது (௪0)

பாவான்மாக்களெல்லாம் யமலோகத்தையடையுமுறைமைக்கோர்பொ துவிதியுணர்த்துகின்றார்

கருவினுளுயிருமற்றைக்காயபேதங்கடன்னின் ※
மருவியவுயிருந்தொல்லை வல்வினைமாயவச்சம் ※
பெருகிடமோகந்துன்பம் பிரிந்துடற்பிரியும்போதிற் ※
றருமுடற்றாங்கித்தூதர் செலுத்திடயமனிசாரும் ※

எ - று கெற்பத்தின்கண்ணிருக்குமுயிரும் அதல்லாமன்மிருகபேதங்கண்முத லியயோனிபேதங்களிலிருக்குமான்மாக்களு முன்னுள்ளபிராரத்தகன்மந்தொலைந் தவாறேபயமுமோகமுந்துயரமு மேலிடாநிற்ப வெடுத்தவுடலினின்றுநீங்கியங்ங னநீங்குங்காலத்திலேயுண்டாம் யாதனாசரீரத்தையெடுத்துயமதூதர்கள்செலுத்த யமலோகத்தையடையும் எ - று - அச்சம் - யமதூதராலெய்துநடுக்கம் மோகம் - புத்திரமித்திராதிகளைவிட்டுப்போகின்றோமேயென்றெண்ணுமாசை - து ன்பம் - மரணவேதனை (௪௧)

வேறு

மைத்திகழ்தருவனையினைநிகர் வடிவுடையவர்வலியார் *
மெய்த்திகழ்தருமரணமுமுளர் விடவரவனவினையார் *
குத்திரவினைபலவுடையவர் குணமிலவலகொடியார் *
இத்தகைமையரியமன துனைவழியிலகுதலிலரோ *

எ - து யமதூதர்களானோர், கருமைவிளங்காநின்றவஞ்சனபருவதத்தையொத்தசரீரத்தையுமிகுந் தபெலங்களையுஞ் சரீரத்தில்விளங்காநின்ற வச்சிராங்கிகளையும்விடத்தையுமிழாநின்றபாம்பினையொத்ததீமைத்தொழிலினையும்வஞ்சனைத்தொழில்பலவற்றையும்பாவிகளிடத்து நன்மையில்லாதுதீமைகளையேவல்லகொடுமையினையுமுடையர்களாயிருப்பர்க, ளித்தன்மையையுடையதூதர்கள்யமனுடையசொல்லின்வழியைத்தப்பார்கள். எ - று

குத்திரவினை தாமாகமுன்னில்லாதுவேறொன்றையேதுவாக்கிக்கோறல். சசு

வீரமுமுளர்வெகுளியுமுளர் விளைதலுமுளருடலத் *
தீரமுமுளர்சினமுதலிய செறுநெறியினர்திருமுன் *
னீரமுமுளரொரியுமிழ்விழியிருமையுமுளரிகலிற் *
கூரமுமுளர்கொடும்படையினுமயிருணவலகொடியார் *

எ - து வீரத்தினையுந்தீவினையோர்மேல்வைத்தகோபத்தினையும்யமதன்மராசனேவியகருமங்களில்மனம்மடியாதுசெல்லும்விளைவினையு, மழியாதவச்சிரயாக்கையினையுஞ்சினமுதலியவற்றைக்கெடுக்குநன்னெறியையுடைய தபோதனர்கள் சன்னிதியிலிரக்கத்தினையுநெருப்பினைச்சொரியாநிற்கு மிரண்டுவிழியின்றன்மையினையும்பகைத்தோரிடத்துக்கொடுமையேசெய்யுந்தொழிலினையுந் தாமெடுக்குமாயுதங்களைப்பற்றவுமுயிரினை யுண்ணவல்ல தீமையினையு முடையர்களா யிருப்பர்கள். எ - று (சரு)

காலமுமிதுவெனவறியுநர் கருமமுமிவையெனவுஞ் *
சூலமுமொருகரமருவினர் சுழல்வலையமுமொருகைப் *
பாலகனரனெனுமறிவறு பதர்மனிதர்கள்பயமுற் *
றேலமுமிடவுடலினைவிட வுயிர்கவர்வினையுடையார் *

எ - து முற்கூறியவர்தத்தூதர்கள் அவரவர்க்கமைத்தகாலமிதுவென்றும்

அவரவர்செய்தகன்மங்களிவையென்று மறியவல்லோருமாய் ஒருகையிலே சூலமு மொருகையிலே சுழலாநின்றபாசக்கயிறும்பொருந்தினோருமாய்ச்சங்காரகருத்தா வாகியஅரனேயுலகபரிபாலகனென் றுணருமறிவில்லாத பதகிளையொத்தமாந்தர்கள்பயப்படலுறவுயிரானதுடலினைவிட்டுநீங்க வெய்யுயிரினைவாங்குந்தொழிலையுடையோர்களுமாயிருப்பர்கள் - எ - று

பாலகன் - காப்போன் - (௬௬)

கிட்டிரதரர்நினைவழியவு நிலையிலசிலருடலைக் ✻
கட்டிவர்முதுகுறவளைமடி கயிறுறவிருகரமும் ✻
பிட்டிறமுமொழுகிடவிடர் பெருகிடவலறிடவும் ✻
வெட்டுவருயர்விணிலவமரவிசிறுவராவெடியார் ✻

எ . து - கிட்டோத்தையுமிகவும்வெடித்தசொல்லினையுமுடையோரான யமதூதர்கள்தம்மைக்கண்டவுடன் அறிவழிந்துபோகாநிற்பவும் விடாமலொருநிலையுமில்லாதசிலபாவிகளுடலைத் திருப்பி மடக்கிவளைத்து முதுகின்கட்பொருந்தவிருகைகளையுமுறுமிருந்த கயிற்றாற்சேர்த்துக்கட்டியுடம்பெல்லாம்பிண்டிரத்தந்தாளாயொழுகவுந்துக்கம்பெருகவும் வாய்கிடர்தலறவும்வெட்டியுயர்ந்த ஆகாசத்தின்கட்சுழலவெடுத்துவீசாநிற்பர் - எ - று (௬௭)

இங்ஙனங்கூறியயமதூதர்களாலே பாவஞ்செய்தோர்கள்யமலோகத்துக்குப்போம்பொல்லாவழியையடைவதொன்றுணர்த்துகின்றார்

இத்தகைமையவியமனபடரிடைவிடலிலவரியாற் ✻
குத்திரர்குணமறுசிறுமையர் கொடியனவினையுடையார் ✻
நைத்துளமுடனடலையுமுற நயவியதுலையறவே ✻
சித்திரமிகுதுயருறுவழி செறிவர்கள்பிறிவறவே ✻

எ - து - இந்தக்குணங்களோடுபொருந்தியவியமதூதர்கள தூங்காதவலிமையினாலேவஞ்சகருமாய்நற்குணமில்லாத வற்பப்புத்தியையுடையோருமாய்க்கொடுமையையுடையனவானதீவினைகளையுடையபாவிகள்,உள்ளமெலிந்துதுன்பமுமேவிடநலம்பொருந்தியதுணையுமற்றுநானாவிதமாக மிகுந்ததுயரம்பொருந்தியவழிக்கணீங்காதடைவர்கள் - எ - று (௬௮)

அவ்வழியின்கணுள்ளதாந் துயரத்தினைப்பதினாலுசெய்யுளா லுணர்த்துகின்றார்

வேறு

கண்டகமுறுநெறி செறிசிலகரிசர்கதரு ※
விண்டிடவினையினர் விடுமுறையறிகிலர்விழுவார் ※
திண்டிகழ்சிலைநுதி செறிநெறிகுறுகியசிறியார் ※
பிண்டிடவிணையடி பிழையுறவிழுவர்கள்பிழையார் ※

எ - து - தாந்தாஞ்செய்த பாவத்தினாலே பெருமுள்ளுக்களடர்ந்த வழியின்கண் யமபுரிக்குச்செல்லாநிற்குஞ்சிலபாவிகள் அந்தமுள்ளுக்கள் காலின்கட்டைப்பல லறிச்செல்லுவர்,செல்லும்போதந்த முட்களைப்பிடுங்கிப்போட்டுச்செல்லுமுறைமையையறியாமல்வீழ்ந்துகிடப்பர்கள்,பிழைபொருந்திய சிலசிறியார்திண்ணியவையானகூரியகல்லுக்கள்பரந்தவழியின் கணணுகியந்த க்கல்லுச்களிரண்டுகாலிலுஞ்சிதையத்தைக்கையினாலே நிலத்தில்வீழ்வர்கள் - எ - று (௪௯)

அளறுறுநெறியிடையடியுறவிடுமுறையறியா ※
ருளமறுகிடவுடனடலையுமுறவலியொழிவார் ※
பளமுறுநெறிசிலர்படர்வர்களிடர்பலபடவே ※
பிளவுறவுடன்முழுதரிகுசைநுதிவழிபிரியார் ※

எ - து சிலபாவிகள், சேறுபரந்தவழியின்கண் அடிவைப்பவந்தச்சேறுகாலினின்றும்விடுமுறைமையைக்காணாது மனஞ்சுழலச்சரீரந்துக்கத்தையடைய த்தங்கள் பெலமுங்கெடாநிற்பர்கள்,சிலர் ஆழ்ந்தபள்ளங்கள்பொருந்தியவழியின்கண் துக்கங்கள்பலவுமுண்டாகச்செல்லாநிற்பர்கள், சிலருடம்பெல்லாம்பிளக்கவரியாநிற்குங்கூரியவாயினையுடையநாணற்புல்லுகள்பொருந்தியவழியைநீங்காது செல்லுவர் எ - று நடலை - துன்பம் (௫௰)

விடமமுமுறுதடம்விரவியகலர்சிலர்மெலிவார் ※
தடவரையிடைநடைதளர்வுறவுறவறுதமியார் ※
பொடியபறுதழல்வழிபுகுதுவர்நிலையிலர்புலியார் ※
படுகுழிவிடமமுமடைவர்கள்சிலரிடர்படவே ※

எ - து சிலபாவிகள், செவ்வைவழியின்றிவஞ்சனைமிகுந்தவழியின்கட்செ ன்றதனாற்றுக்கத்தையுறுவர்கள், சிலர்-பெரியமலைவழியின்கட்சென்றேற்றமிறக்கங்களிலேநடைகூடாமற்கால்தளரவங்ஙனந்தமக்கோருறவுமில்லாததனியராய் நிற்பர்கள், சிலர்தமக்கொருநிலையுமில்லாராய்ப்பொடிமூடாதெரியுநெருப்பிலேமு

பொருந்தியவழியின்கட்புகுதாநிற்பர்கள், சிலர்படுகுழிமுதலியவஞ்சனைகள்பொருந்தியவழியின்கட்சென்றுதுக்கத்தையுறுகிற்பர்கள். எ - று விஷமம்விடமமாயிற்று - தமி - தனி - புல்லியாரைப்புல்லியார் - என்றார் (௫௧)

சரங்கொள்சகலமுமுறுநெறிசெறிசிலதமியார்
வெருவுவரழனிகர்விரியன்மணலிடைவழியிருவார்
கிளையுழைநிறுவியநெறியிடையடிதளர்நிலையார்
பருவரலுறுவர்கணுழையுறுமுறுநெறிபடர்வார்

எ - று சிலரம்புபோலவுருக்குமோடுஞ்சல்லியும்பரந்தவழியின்கட்சென்றுநமர்க்கோர்த்துணையுமற்றுஅரந்தவழிதொலையாமையான்நடுங்காநிற்பர்கள், சிலர்நெருப்பினையொத்தசுடுமணல்பரந்தவழியின்கட்சென்றச்சூடுபொறுமல்வீழாநிற்பர்கள், சிலரொருங்குபடவசிகளைநிறுத்தியவழியின்கட்சென்றந்தவசிகள்காலின்கட்கடப்பவசனூற்செலலமாட்டாதடிதளருநிலையினையுடையோர்சிலர்முள்ளின்முட்கள்பரந்தவழியின்கட்சென்றவற்றினூற்றுன்பமுறுகிற்பர்கள் எ - று
நெறி — வழி-வசி-வாள் (௫௨)

கூரிருணெறிசெறிகொடுமையர்சிலர்நிலைகுலைவாய்
காரயவிரிதொடர்கனலனல்வழியிடைகலுழ்வார்
ஈரமில்வனநெறியடையுநர்சிலர்நினைவழிவார்
நீரமுறிசிலரழலிகள்நிலைசெறிசெறியார்

எ - று சிலர்மிகுந்தவிருள்பரந்தவழியின்கட்சென்றுவெளிகாணுமனிலையழிவார், சிலர்நெருப்புருகக்காய்ச்சியகரியவிருப்புச்சங்கிலியின்னிலைக்கிடக்கும்வழியின்கட்சென்று அடியிடமாட்டாமலழுங்காநிற்பர்கள்-சிலர்-தீக்காட்டினையுடையவழியின்கட்சென்றந்தக்காட்டுத்தீயிற்பட்டெரியாநிற்பர்கள் - சிலர், நெருப்புப்போலச்சுடாநிற்குங்கல்லுகள்பொருந்தியவழியின்கட்சென்றதனைநீங்குவகையுந்தெரியாமன்மயங்காநிற்பர்கள் எ - று (௫௩)

உடைவர்கள்பனிநனியுறுநெறியதுதனையுறுவார்
மிடறளவுறுமணல்விரவியகலர்சிலர்மெலிவார்
சுடரனதுளிமழைசொரிவழிதனினிலைதொலைவார்
வடிவறமயலுறவுறவிரியினபுல்வசமறுவார்

எ - று - சிலர், பனிமிகவும்பொருந்திய வழியின்கணடைந்த ப்பனியினாலேயு ள்ளமுடைவர்கள், சிலர், கழுத்தளவமிழ்த்து மணல்பரந்தவழியின்கட் சென்றுவ ருந்தாநிற்பர்கள், சிலர்நெருப்புப்போன்ற துளியினையுடைய மழைபெய்யும்வழியி ற்சென்றதனால் நிலையழிவர்கள், சிலர், வறளிநெருப்புப் பொருந்திய வழியின்கட் சென்றுதம்மேனிகெடக்கலக்கமுண்டாக த்தமது யாக்கையின் வலிகெடுவர் - எ - று (௫௪)

சிங்கமுமுறுநெறி செறிவினரறிவிலர்செயலுந் *
தங்கியபுலிவனமடையுநர் நிலையிலர்தளர்வார் *
வெங்கொலைமிருகமு முடலடவொருவழிவிழுவார் *
விங்கிடமசகமு முடலினைநினைவினைவிடுவார் *

எ - று - சிலர், சிங்கங்கள்பொருந்தியவழியின்கட்சென்றவைகள் பாய்தலினா லேசெயலுமறிவுமில்லாமன்மயங்குவர்கள், சிலர், புலிகள்பொருந்தியகாட்டின்வ ழிகளிற்சென்றதனாலேதஞ்செயல்கெட்டு வருந்தாநிற்பர்கள், சிலர், மற்றுமுள்ள வெவ்வியகொலையினைச்செய்யு மிருகங்களுந் தம்முடம்பினை யழியாநிற்ப ப்பிறிது மொருவழியின்கட்சென்று கலங்கிவிழுவர்கள், சிலர், பிறிதொருவழி யின்கட்செ ன்றுபெருங்கொசுக்களுடம்பினைத்துளைக்க வருந்தி த்தம்மறிவினை யொழிவர்கள் - எ - று (௫௫)

உளைவர்களுடல்குடை கிருமிகளுறுநெறியுறுவார் *
செளுகையுமுடலட வொருவழியறிவிலர்செறிவார் *
துளையுறவுடலடு சிறுபறவைகளொடுசுழல்வார் *
விளைவறவிடவர வடர்வழியயருறவிழுவார் *

எ - று - சிலர், உடம்பினைக்குடையாநின்றபுழுக்கள்பொருந்திய வழியின்கட் சென்றுவருந்துவர், சிலர், பிறிதொரு வழியிற்சென்றட்டைகள் வந்துடலின்கட்க டிக்கவதனாலேயறிவும்போய்மயங்குவர்கள், சிலர், பிறிதொரு வழியிற்சென்றுட ம்பினைத்துளைக்குஞ்சிறியபறவைகள்பலவற்றினாலுங்கொத்துண்டுங் கடியுண்டுஞ்சு ழலாநிற்பர்கள்; சிலர் பிறிதொருவழியின்கட்சென்றுநல்வினைவிளைவில்லாமையா லேநஞ்சினையுமிழாநிற்கும்பெரும்பாம்புகள்வந்து தீண்டவதனாலேசோர்வுபொரு ந்திவீழாநிற்பர்கள் - எ - று - (௫௬)

கடகரிதொடர்வழியருகருகயர்வொடுகெழுவார் *
உடலடவுளியமுமொருவழிவினைவிளைவொழிவார் *
இடபமுமடாவழியிடர்பலபடுவர்களெளியார் *
மிடலுடைமயிடமுமடர்வழியழிவர்கள்செயலோ *

எ - று சிலர் - மதம்பட்டயானைகள்பாயும்வழியின்கட்சென்றந்தயானைகள்பாய் தலினலேயமுதமுது சோர்ச்சியிற்கலங்காநிற்பர்கள், சிலர் - பிறிதொருவழியின்கட்சென்றுகுதிரைகள்வந்துடம்பினைக்கவ்வாநிற்பவச்சுறுதீவினைநீங்குவார்கள், சிலரிடபங்கணெருங்கியவழியின்கட்சென்றவற்றின்முற்றுண்பங்கள்பலவும்பட்டவற்றினைத்தடுக்கமாட்டாமலெளியராய்நிற்பர்கள், சிலர்-வலியினையுடையகோட்டெருமைகள்பாயும்வழியின்கட்சென்றுசெயலோவழிவதுமனமுமழிவர்கள் - எ - று ஓகாரம் - ஒழியிசைக்கண்வந்தது (௫௭)

ஒட்டகமுறுநெறியுடல்வினைகெடநினைவொழிவார் *
நிட்டுரமகளிருமடர்வழியழிவதுநினைவோ *
வெட்டியநிசரர்நடைவழியுடல்வினைவிடுவார் *
தொட்டிடவிறலுறுபிணிபலவயர்வொடுசுழல்வார் *

எ - று சிலர்-ஒட்டகங்கள்-நிருந்தவழியின்கட்சென்றுடம்பின்செயல்கெடவறிவழிவர்கள், சிலர்கொடுமையைச்செய்யுமிடாகினிகளாகியகுரூரமகளிர்கணெருங்கியவழியின்கட்சென்றவர்கள்செய்யுந்துயரால்நினைவழிவதுஞ்செயலுமழிவர்கள், சிலர்வெட்டிமையுடையவிராக்கதர்நெருங்கியவழியின் கட்சென்றுடம்பின்செயலழிவர்கள், சிலர்-பிறிதொருவழியின்கண்வெம்மைபொருந்தியவியாதிகள்பலவும்வந்துபிடிக்கச்சோர்ச்சியிற்சுழலாநிற்பர்கள் எ - று
வெட்டிமை - கொடுமை (௫௮)

ஊறுறவுடலிடையுணர்விலரசமழையுறவே *
கூறுறவுடல்பலகுலிசமதுறுமழைகொளவே *
நீறுறவுடல்கெடவொருவழியழிவதுநினைவோ *
தேறியவுரன்மழைபலபலமுறையொடுதெறவே *

எ - று சிலர்-பிறிதொருவழியின்கட்சென்றுடலின்கணூறுபொருந்தவம்புமாரிசொரியாநிற்கவறிவுகெடுவர்கள், சிலர்-பிறிதொருவழியின்கட்சென்றுடம்புபலவாகத்துணிக்கும்வச்சிராயுதங்களாகியபெருமழைசொரியவதனாலறிவழிய

ர்கள், சிலர்பிறிதொருவழியின்கட்சேன்றுவிளங்கியநெருப்புமழைகள்பலபலவிதமாகப்பெய்துசுடுகையிலுலேயுடம்புவெந்துநீருகவறிவுமாத்திரமோவழிவதுசெயலுமழிவர்கள் எ - று (௫௯)

கடுகியபவனிலனுமுறுநெறிதுகளொடுகேலுழ்வார் ❋
பொடிமழைபொழிவழிநிலையறவலலொடுபுகுவர் ❋
உடல்பிளவொருவழிமழைபொழிசிலேயுறவுளோவா ❋
ரிடிவிழவிழமினுமிடருறநிலவுதலிலரோ ❋

எ - து சிலர்-தூட்களோடேபொருந்திவிரைந்துவாராநிற்கும்பெருங்காற்றடிக்கும்வழியின்கட்சென்றுகலங்குவர்கள்,சிலர்தூளிமழைசெரியாநிற்கும்வழியின்கட்சென்றுநிலேயற்றுத்துயரொடுசெல்லாநிற்பர்கள், சிலர்பிறிதொருவழியின்கட்சென்றுடல்பிண்டுபோம்படிகல்மழைபொழியவதனுல் வருந்தாநிற்பர்கள். சிலர்பிறிதொருவழியின்கட்சென்றிடியுமின்னும்விழவவற்றினுலேதுயருற்றுத்தாமறிவினேடுவிளங்குதல்போய்நிலேயழிவர் எ - று (௬௰)

அயுதவருடமுமொருவழியுடவினேயரியக் ❋
காய்கனவினேநிகர் கடுவறல்சுடவுடல்கலுழ்வார் ❋
ஓய்வர்கள்குளிர்பனியனிலனுமுறுவழியுளோவார் ❋
ஏய்வர்களினேயனவிடர்பலவழியுறுமெளியார் ❋

எ . து . சிலா, பிறிதொருவழியின்கட்சென்று யுதமாரியாகவிழுந்துடம்பினேத்துண்டிக்கவுமெரியாநிற்கும் நெருப்புக்கொத்த மச்சுநீர்மழைவிழுந்துடம்பினேச்சுடவுமாற்றுமற்கலங்கிச்சோர்ந்துவிழுவர்கள், சிலர், குளிர்ந்தபனியும்பனிக்காற்றும்பொருந்தியவழியின்கட் சென்றவையிற்றினுல், மிகவும்வருந்துவர்கள், இங்ஙனங்கூறியவழியின்கட்செல்லுநல்வினேவலியில்லாதோரித்தன்மையையுடையனவான துயரங்கள்பலவற்றையுமனுபவிப்பர்கள் . எ . று . (௬௧)

கடுகியபசியுறவொருவழியறிவிலர்கலுழ்வார் ❋
விடுமுறையறிலர் விரவியகொடுமையவினேயார் ❋
இடர்படுவதுமுனேவினேயெனவுளமதிலெணுவார் ❋
திடமுடையமபடர்வலிசெயவழியொடுசெறிவார் ❋

எ . து . சிலர், பிறிதொருவழியின்கட்சென்றுமிகுந்தபசிமேலிடவதனுலறிவின்

எ. து. சற்றுமான்மாக்களிடத்திரககமில்லாத வியமதூதர்கள் அறநெறியினில் லாதோருமாய் மறுமைப்புகழில்லாதோருமான சிவதீவினையோரை ப்பாசக்கயிற்றினாலிறுக்கிக்கட்டியுடம்புவருந்துகையினாலேபதறித்துடித்துக்கோவென்றலறுஞ் சத்தந்திசைகளெங்குமெழக்கொண்டுசென்றியமலோகத்தின்கணடைவர். எ. று

செறிதல் - கட்டமூழ்ந்துதல். பரிதல் - வருந்துதல். (சுரு)

சித்தத்துருகாதவரை த்திறலார் ※
மத்தக்களிறே யனையார்வலியா ※
ரத்தத்தமரங்குச மூள்ளதனாற் ※
கொத்திக்குளமூங் கொடுபோயடைவார் ※

எ. து. தன்மத்தின்கண்மனமுருகாத சிவதீவினையோரை, வெற்றிநிறைந்தமத யானைக்கொப்பாராயதிபெலத்தினையுமுடைய யமதூதர்களானோர் தமதுகையிலிருக்குங்குடாரியினுனியினாலேநெற்றியையுங்கொத்தியிழுத்துக்கொண்டுசென்றியமலோகத்தின்கணடைவர். எ - று.

குளம் - நெற்றி. குளமுமென்னுமும்மைமற்றுளவுறுப்புகளுமெனக் கொள்க (சுசு)

கலைகண்ணிலரைக் களவுள்ளவரைத் ※
தளரும்படிவெஞ் சமனார்தமரோ ※
யுலைவுள்ளுறவு முடல்பிள்ளுறவு ※
முலைமூள்வனமே கொடுபோய்முனிவார் ※

எ. து. கொடியயமதூதரானோர்ஆன்மாக்களிடத்திரக்கமில்லாதோரையுங்கள்வரையும்வருத்தும்வண்ணம் அவர்களுள்ளத்திற்றுயரமுண்டாகவு முடம்புபிண்டு பிண்டுபோகவு மூங்கின்முட்காட்டினுள்ளே யீர்த்துக்கொண்டுசென்றுகோவிப்பர்கள். எ - று. (சுஎ)

பழுதேபகர்வார் பயில்பாவியரைக் ※
குழையாதவரைக் குளிர்வாய்மொழியே ※
விழையாதவரைக்கடிதேவியனூ ※
ரழல்சேர்வழியேகொடுபோயடைவார் ※

எ - து இயமதூதரானோர், கோட்சொல்லுதன்முதலியபாவஞ்செய்தோரையுந்தன்மத்தின்கண்மனநெகிழ்ச்சியில்லாதோரையும்பெரியோர்களதுகுளிர்ந்ததிரு

வாக்கைவிரும்பாதோரையுஞ்சடுதியிலேநிறைந்துமிகவுநீபரந்தவழியின்கட்கொண்டுசென்றியமலோகத்தினையடைவர் எ - று (௬௮)

அத்தத்தினையுமட ரக்கடிதே *
பொத்திப்புறமேகயி றும்புகவே *
துத்தத்தலறத் துவளத்துவளக் *
குத்திச்சிலரைக்கொடுபோயடைவார் *

எ - து இயமதூதரானோர், சிலபாவிகளையிரண்டுகைகளையும்முதுகுப்புறத்தேவாங்கித்தோளொடுதோள்சந்திக்கக்கூட்டிப்பாசக்கயிற்றினாலேயழுந்தக்கட்டியவர்களலறவயிற்றின்கண்குலுங்கக்குலுங்கக்குத்திக்கொண்டுசென்றியமலோகத்தினையடைவர் எ - று துத்தம்வயிறு (௬௯)

சிலரைக்கரமுஞ்செவிவித்ததனைத் *
தளையத்தொடருந்தழலைப்புனையு *
முளையைச்செவிவித்திராமுனியா *
வுளையக்கடிதேசமனூருறுவார் *

எ - து யமதூதர்கள், சிலதீவினையோரையிரண்டுகைகளையுங்கூட்டியவர்தக்கையினிற்சங்கிலியும்பூணவிட்டுள்ளங்கைகளினூடுருவநெருப்புப்போன்றமுளையையுங்கடாவியதட்டியவர்களவருந்தும்வண்ணங்கோபித்துச்சடுதியிலேயமலோகத்திற்கொண்டுசெல்லுவர் எ - று (௭௦)

கண்டத் துறவேகயிறுஞ்சிலரைக் *
கொண்டேய்த்தலறப்புகுவார்கொடியார் *
துண்டப்பிறைபோற்சுழல்வாள்பிடரிற் *
புண்டைத்தலறச்சமனூர்புகுவார் *

எ - து கொடியயமதூதர்கள், சிலபாவிகளைப்பாசக்கயிறுகழுத்திலிறுகும்வண்ணம்பூட்டியவர்கள்வருந்தியலறும்வண்ணமிழுத்துக்கொண்டுபோவர்கள், சிலராயிளம்பிறைபோல்வளைந்தகொடுவாளாற்பிடரியிலேபுண்படத்தைத்தலறும்வண்ணம்வெட்டியமபுரியிற், கொண்டுசெல்லுவர்கள் எ - று
கண்டுச்சுழல்-வளைவின்கண்வந்தது (௭௧)

நாவிற்றுளையாநடுவேமுளையு ※
மேவக்கயிறும்விரவப்பணியே ※
கோவித்தலறச்சிலநொய்யவனைப் ※
பாவப்பலமுற்றெலையேயடர்வார் ※

எ - து யமதூதராஞேர்-சிலபாவிகளைநாவினைத்துளைத்ததனடுவேமுளையுங்கடாவியதனேடுபொருந்தக் கயிறுங்கோத்து வருந்தச்செய்தவர்களலறத்தீவினைப்பயன் பலிக்குமெல்லையான யமலோகத்திற் கொண்டுசெல்லுவர் . எ . று .
பண்ணி-யென்னுஞ்சொல் . பணியெனவிகாரமாயிற்று. (எஉ)

நுய்யத்திடையேக யிறுங்கொளுவா ※
நையத்துயரம்பலவு நவிலா ※
மையற்படவே மனமுஞ்சிலனைத் ※
தெய்வச்சமனூர்புரியைச்செறிவார் ※

எ . து . இயமதூதர்கள் . சிலபாவிகளைக்கோசத்தின்கட் கயிறுகொளுவியுடல் வருந்தவுமனமயங்கவுந்துயரங்கள்பலவுஞ்செய்து தங்கள்தேவனுன யமதன்மராசனதுபுரியின்கணடைவர் . எ . று (எங)

துண்டப்புடையிற் றுளைசெய்ததனிற் ※
கண்டிக்கயிறுங்கடிதேயடைவார் ※
புண்டைத்துறவேகவுளும்புகுவார் ※
கொண்டக்கணமேசிலனைக்கொடியார் ※

எ - து கொடுமையையுடையயமதூதர் - சிலபாவிகளை மூக்கின்புறத்திற்றுளைத்ததிலேபாசக்கயிற்றையுங் கோத்துக்கட்டிச் சடுதியிலேகொண்டுசெல்லுவர்கள், சிலபாவிகளைக்கதுப்புக்களிலேபுண்பொருந்தும்வண்ணந்துளைத்துக்கயிறுபூட்டியிழுத்துக்கொண்டந்தக்கணத்திலே யமலோகத்திற்புகுவர் எ -று
கட்டி - கண்டியெனவிகாரமாயிற்று (எச)

மூத்தத்துறவேதுளையுமுளையுங் ※
கொத்திச்சிலனைக்கொடுபோயடைவார் ※
சித்தத்தயர்வுஞ்செறியச்சிலனைத் ※
துத்தத்தொடரிற்சமனூர்தொடர்வார் ※

எ - து இயமதூதர் - சிலபாவிகளை யதடுகளிற்றலையுறும்வண்ணமுலையையும் அடித்திழுத்துக்கொண்டுசெல்லுவர்கள் - சிலபாவிகளைமனத்தின்கட்சோர்வுபொருந்தும்படிவயிற்றிற்கட்டினகயிற்றினோடேயிழுத்துக்கொண்டிடமலோகத்துற்செல்லுவர்கள் எ - று (௭௫)

கன்னத் துளையிற்கயிறுஞ்செறியா *
வென்னித்துயர்தானெனநொந்தழவே *
துன்னப்படுநற்றலையுமறவே *
தென்னற்றிசையிற்புரியைச்செறிவார் *

எ - து சிலபாவிகளை யிரண்டுசெவித்துவாரங்களினுமுருவக்கயிற்றைக்கோத்திழுத்துயர மெந்தப்பாவத்தால்வந்ததோவென்று வருந்தியழவு மதலை நீக்குதற்கோர்சற்றலையுமற்றொழியவுங்கொண்டுசென்றுதென்றிசைக்கணுண்டாயவல்லயமலோகத்திலடைவர் எ - று (௭௬)

ஏகவாயுறவேகயிறும்புணியாத் *
தகவோவெனநொந்தழுவார்தமையே *
யாகமும்புறமுமழியக்கொடுபோ *
யிகமுமறிவானுழையேயிசைவார் *

எ - து யமதூதர்கள் கீழ்வாய்ப்புறத்துக்கயிறுபொருந்தக்கோத்து வருத்தும்பொழுதிதுமுறைமையோவென்றுவருந்தியழுஞ்சிலபாவிகளையுள்ளுமுடலுமழியக்கொண்டுசென்றிம்மைமறுமையிரண்டினுமான்மாக்கள்செய்தபுண்ணியபாவங்களையீதெனப்பிரித்தறியுந் தன்மையையுடையனான யமதன்மராசனருகேயடைவர் எ - று (௭௭)

அங்கத்தெவையுமழியச்சிலரைப் *
பங்கித்தடைவார்பயிலத்துயரும் *
பொங்கப்புலைநீர்புகர்வாண்முதல்கொண் *
டொங்கித்தடிவார்சமனூருறுவார் *

எ - து இயமதூதர்கள், சிலபாவிகளைச்சரீரத்திலுள்ளவுறுப்பெல்லாஞ்சிதையும்படியறுத்தறுத்துக்கொண்டுசெல்லுவர்கள், சிலபாவிகளைத்துன்பமானது மேன்மேலுமுண்டாகவிரத்தமானதுபெருகப்புகரிலையுடையவாள்

முதலியவாயுதங்களைக்கொண்டுவெட்டுவர்களை, இங்ஙனம்வழியின்கட்பெருந்துயரங்கள்செய்தியமபுரியிற்கொண்டடைவர்கள் எ - று

புலைநீர் - இரத்தம் - புகர் - நேரயல்வாய்ப் பாலெழுந்தோர்நிறம் - ஓங்கி - ஓங்கியெனக்குறுகிற்று. (எஅ)

இங்ஙனம்யமதூதர்கள்கொண்டுசெல்லப்பாவஞ்செய்
தோர்யமபுரத்தையடைவரென்றுணர்த்துகின்றார்.

தக்கார்வரவிற்றவறேபுரிவார் *
நெக்கார்வமிலார்நிலையேதுமிலா *
ருக்கேவழியிற்றுயர்வந்துறவே *
புக்கார்வினையத்தருமன்புரியே *

எ - து தம்பாற்பெரியோர்கள்வருங்காலத்தெதிர்கொளல், பணிதல், முதலாயினசெய்யாதிகழ்ச்சிசெய்வோர்களும்யாவரிடத்துமனநெகிழ்ந்தன்புசெய்யாதோர்களுமாயதனுற்றமக்கொருநிலையில்லாதோர்களுமானபாவிகள்செல்லும்வழிக்கண்யமதூதராலிங்ஙனந்துயரங்கண்மேன்மேலும்வந்துபொருந்துகையினாலேயுள்ளமழிந்துசம்திதியிலேயமலோகத்திற்புகுவார்கள் எ - று (எகூ)

இங்ஙனந்தீவினையோரைக்கொண்டுசென்றயமதூதர்கள்
யமதன்மராசன்முன்சென்றறிவிக்குமுறைமையுமினி
மேலிவர்களைச்செய்யுந்திறம்யாதென்று வினவுமுறை
மையுமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு.

அழியாதவாண்மையினாகலாதவாய்மையினரதிபாதகாதிபறிவார் *
வழியாதநாகுசலாமலிமாசுமேவினைமறவாதமாணறிவினோர் *
ஒழியாதவூசலெனவுழல்வார்கள்பூதலமுமொழியாதவாவியுடையார் *
பழியாதபான்மையனைவழுவாததூதுவர்கள்பதிபாதமீதுபணியா *

எ - து ஒருகாலுங்கெடாதவாண்மையையும்யமதன்மராசன்சொல்லியவாக்கைத்தப்பாமற்செய்யுந்தகைமைப்பாட்டினையுமதிபாதகமுதலியபாவமே தங்களைச்செய்வோரையுள்ளபடியறியுந்தன்மையையுமதற்கதற்குச்சொன்னநெறியிலேயவர்கள்யாதனைபண்ணுந்தெளிவினையும்பாவங்கள்செய்தோரைமறவா

யேபொங்காநிற்பானாயிருக்கிறயமதன்மராசனைக்கண்டவளவிலே நஞ்சினையுமிழா நிற்கும் பெரும்பாம்பினைக் கண்டவர்போலக்கலங்காநிற்பர் எ - று - கலுழ்தல் கலக்கம் . (அ௨)

யமதன்மராசனதுதன்மையையும் அவனைக்கண்டோர்மனம் வேறுபடுந் தன்மையையு மையனையமேனியனென்னுஞ் செய்யுள். முதல், ஏவலரு ளெங்கள்பெருமானென்னுஞ்செய்யுளீறாக வொருதொடராகவுணர்த்துகின்றார்

மைபனையமேனியனைவாய்ந்தவறுமூன்று *
கையுடையனைக்கடியனைக்கடியருள்ள *
நையவுமிழ்வெய்யவழலுட்டமுடையானைத் *
துய்யபிறைபோலெயிறுறச்சுளிமுகத்தே *

எ - து அஞ்சனபருப்பதம்போன்றதிருமேனியையும் வலிபொருந்தியபதினெட்டுக்கைகளையு மகிகாரத்தையுந்தூய்மைபொருந்திய விளம்பிறையைப்போன்ற வெயிறுகள்தோன்றச்சீறுகின்றமுகத்தின்கட்டீவினையோருள்ளமழியச்சொரியா நின்றவெவ்வியவக்கினிநேத்திரங்களையுமுடையனாய். எ - று (அ௩)

எற்றுப்புருவத்தினனையிடுடையமேனி *
பற்றிமுகமீதுபெறுபங்கியுடையானை *
முற்றுமயிர்பெற்றமுகமுற்றதரவோட்ட *
நிற்றலறவுற்றபுரணத்தினனேரோ *

எ - து நெற்றிமீதேறுகின்றபுருவங்களையும், வலியையுடையவுடம்பின்கட் டோன்றியமேனோக்கியமுகங்களாய்நிற்குமுரோமபங்கிகளையு, நிறைந்த மீசை பொருந்தியமுகத்தோடுகூடிக்கீழுதடுமேலுதடுநேரோநிற்குந்தன்மையின்றித்துடிக் குந்தன்மையையுமுற்றிருப்போனாய். எ - று (அச)

மேருகிகருன்னதனைவீறுடையதண்டந் *
தாரகனைமற்றையதழற்படையனைத்துங் *
காரணமேதிமிசைகாணவருவானை *
யேருடையசெய்யவுடையாடையனையென்றும் *

எ - து மகமேருவோடொத்தவுயரத்தினையும்,வெற்றியையுடையதண்டாயு தமுமற்றுமுள்ளநெருப்புப்போன்றவாயுதங்கள்முழுவதுந்தரித்திருக்குந்தன்மையி

லையும், யாவருங்காணக்காளமேகம்போன்றகடாவின்மேலேவருஞ்சிறப்பினையு மென்றாளுமழுகும்பொருந்தியசிவர்தபரிவட்டத்தையேதரித்திருக்குமெய்ம்மையுமு டையனும். எ - று (௮௫)

செம்மைபெறுமாலையாதுசேர்முடியிறைனை
வெம்மையிடியன்னகுரல்வீறுமுடையானை
விம்முகடலோடுலகனைத்தையும்விழுங்கச்
சமமதனைனத்தருவனைத்தடைதடுத்தே

எ - து சிவப்புநிறம்பொருந்தியமாலைகளைச்சூடியதிருமுடியையும், வெவ்வி யவிடிபோன்றகுரலின்மேம்பாட்டினையுமுழங்கா நின்றகடலினோடுலகங்களெல் லாவற்றையுங்காவல்கொடுத்துவிழுங்குதற்குவிருப்பமுடையவன்போன்றிருக்குந் தன்மையையுமுடையனும். எ - று (௮௬)

விரித்தமுநின்மேனியமிருத்தியுமிருக்கக்
கருக்கியநிறத்தினொடுகாலனுமிருக்க
நெரித்தபுருவத்தினொடனந்தகனுநீடப்
பரித்தகொடுமைத்தொழில்செய்மாரியுமோர்பாலே

எ - து பரந்தகாளமேகம்போன்றவடிவினையுடையமிருத்தியுமொருபக்கத் திலிருக்கக், கரியநிறத்தினோடுகூடியகாலனுமொருபக்கத்திலிருக்க- நெறிப்பட்டபுரு வத்தினோடுகூடியவந்தகனுமொருபக்கத்தினிலைபெறக், கொடுமைபொருந்திய தொழிலைச்செய்யாநின்றமாரியுமொருபக்கத்திலிருக்க, அரனடுவேவீற்றிருக்குந் தேவனும். எ - று விரிந்த - என்பதனை - விரித்த எனவலித்தது - நீட - என்பதனைமாறிக்குங்கூட்டுக - ஓர்பாலென்பது-கடைநிலைத்தீபகம் - வீற்றிருப்பா னுமென்னுமெச்சம்-வருவித்துரைக்க. (௮௭)

கருக்கியநிறத்தினர்கள்கண்டவர்களஞ்ச
நெரித்தவுருநெற்றியர்கணிட்டுரராட்டர்
தரித்திடுகரத்தினர்கள்சத்திதிரிசூலம்
விரித்துடையபாசமுசலங்குசமும்வேறே

எ - து கண்டோர்நடுங்கும்வண்ணங்கரியநிறத்தினையுஞ்சுளித்தவுருவினையு டையநெற்றியினையுங்கொடுமையினையுமெவர்களையுஞ்சஞ்சலப்படுத்துந்தன்மையி

ளையும்வேலுஞ் சூலமுமொடியபாசக்கயிறுமழல்போன்றதோட்டியு மற்று முள்ளனவும்    எ - று    [அஅ]

தண்டமிளிர்வாளொளிகொள்சக்கரமுமிக்க ❀
வெண்டிகளும்வாளிபிணை தூணிவெழிலார்கோ ❀
தண்டமின்மற்றையதழற்படைகளைத்து ❀
மண்டுதொழில்வீரதரதூதரவர்வந்தே ❀

எ - து    தண்டாயுதமும்விளங்காநின்றவாளுமொளிபொருந்தியசக்கரமும் பேரளவுவிளங்காநின்ற, அம்புகளும்அவையிற்றினைச்சேர்க்கப்பட்டஅம்பறாத் தூணியும்அழகுநின்றந்தவில்லுமானவிவைகளு, மற்றுமுள்ளவக்கினிபோன்றவாயுதங்களெல்லாவற்றையுந்தாங்குங்கையினையுடையர்களாயந்தவாயுதங்களைப்பயிற்றுந்தொழிலின்மேம்பட்டவீரமிக்கோரானதூதவர்கள்வந்து.    எ - து    [அக]

ஏவலருளெங்கள்பெருமானெனவிருக்குந் ❀
தேவனைவிதித்திறமதித்தொருமைசெப்பு ❀
நாவினைநமன்றனைநடுக்கமொடுகண்டார் ❀
மேவலர்களென்னமனம்வேறுபடுவாரோ ❀

எ - று    முன்னர்க்கூறியதிறத்தினையுடையவியமதூதர்கள்வர்தெம்முடைய சுவாமி,யாங்கள்செய்யுங்குற்றேவலருள்வாயாகவென்றுவிண்ணைப் பஞ்செய்யவீற்றிருக்குங்கடவுளாய்ச்சிவனருளிச்செய்தவிதித்திறத்தை, யேகாக்கிரபுத்திபண்ணியந்தவிதிப்படியேதண்டங்கள்செய்யச்சொல்லு நாவினையுடைய வியிருக்கிறயமதன்மராசனையச்சத்தோடுங்கண்டபாவிகள், அந்தயமதன்மராசனுக்குச்சத்துருக்கள்போல, அவன்மனத்துக்குவேறுபடுவர்கள்.    எ - று    (கூய)

இயமதன்மராசனந்தப்பாவிகளைக்கோபிக்குந்திற
முணர்த்துகின்றார்.

வெறுத்தவனைநல்வினையைசெய்யவினைதன்னைச் ❀
செறித்தவனைநோக்கியழல்சிந்தவிழிசித்தங் ❀
கறுத்தியமனச்சரவெனக்கடுவெனத்தன் ❀
னுழுக்குவனறத்தளர்வுறக்கடிதொறுத்தே ❀

எ - து    இயமதன்மராசனல்லபுண்ணியங்களைச்செய்யாதுவிட்டுக்கொடிய

பாவங்களைச்செய்யவிரும்பினபாதகரைத், தனதுகண்களிலேநின்றுநெருப்புப்புறப்படப்பார்த்துள்ளம்வெகுண்டுநெஞ்சினையுமிழாநிற்கும்பாம்புகள்போலவும் ஆலகாலவிடம்போலவுஞ்சீறியவர்கள்தளர்வுறும்வண்ணமிகவுங்கோபித்தடர்த்தக்கறியாநிற்பன். எ-து [௧௧]

பாவிகளானோரந்தயமனையேயன்றிச்சித்திரகுத்தனையுங்கண்டால்
நடுங்குவரென்பதுணர்த்துகின்றார்

வெய்யவினைதன்னையும்விதிப்படிவிளைந்த *
துய்யவினைதன்னையுமறிந்தொருமைசொல்லு *
மெய்யுடையசித்திரநல்குத்தனையும்வீறுக் *
கையரவரஞ்சுவரவன்விழிகள்கண்டே *

எ-து அந்தப்பாவிகளானோர், சிவனருளிச்செய்த வேதாகமங்களிற் கற்பித்த முறையேயவரவர்க்குண்டானகொடியபாவத்தையுந் தூய்மையையுடையபுண்ணியத்தையுமறிந்துள்ளபடியே சொல்லுஞ் சத்தியவாய்மையையுடையநல்லசித்திரகுத்தனையும் வேறுபட்டவனுடையவிழிகளைக்கண்டு நடுங்காநிற்பர். எ-று

வீற்று - எ-து வீறு-என விகாரமாயிற்று. ஆ வீற்றும்பேதமும் விள்ளலுந்திரிபம் வேற்றுமையுங்கொள்பவேறுபடற்பொருட்டே-என்பதனூலறிக. [௧௨]

சித்திரகுத்தன் அவரவர் செய்தபாவங்களையெடுத்துக்கூறியந்தத்
தீவினையோர் நரகத்திலெய்துதற் கொருப்படுமாறு அறிவித்தலை
யுமேலந்தயமதன்மாசனுமெடுத்துக்கூறுமுறையையுமிச் செய்
யுள்முதல்கன்றவெமதூதரொன்றுஞ் செய்யுள்வரையொருமதூ
டாகவுணர்த்துகின்றார்

சித்திரநல்குத்தனெதிருற்றவரைநோக்கிப் *
பொய்த்திறமகித்தவர்கள்போதுகமுறைசீர் *
மத்தகளிறன்னவலியாளுமெலியார்தம் *
வித்தமுதல்கொண்டவர்தமக்கிடர்விளைத்தீர் *

எ-து நல்லசித்திரகுத்தனானவன், தனக்கெதிரேநின்றபாவிகளைப்பார்த்துப் பாவவிதத்தைப்பொருளொன்றாகருதினவர்களே வருவீராக்கீங்கண்முன்னுண் மத

யானையையொத்தபெலத்தினாலேயெளியராயுள்ளோருடைய திரவியமுதலானவ ற்றையபகரித்துக்கொண்டவர்க்குத்துக்கத்தையுண்டாக்கினீர் எ று (௯௩)

அங்கமுற்றுமேன்மையழகாலுமயலார்த    ※
மங்கையர்கடோள்புணருமாதரவுவைத்தீ    ※
ரிங்கிவைகளும்மையணையாதகல்வதெங்ஙன்    ※
சங்கையுறுமின்னிரையமுற்றுடறளர்ந்தே    ※

எ - து அங்ஙனம் பிறர்பொருள்கொண்டதன்றி, யுமதுசரீரத்திற் பொருந்திய அதிகசவுந்திரியத்தினாலேபிறருடையமனைவியர்கள் தோளிணையணையும் வாஞ்சையு ம்பொருந்தியநீர் இங்ஙனங்கூறியதீவினைகளுங்களுடன்கூடிநில்லாமலெங்கே போகாநிற்கு மாகையாலந்தப்பாவங்கள்நீரும்வண்ணம்நரகத்திலேசென்றதனாலு டலிளைத்துத்துக்கத்தையனுபவிக்கக்கடவீர். எ - று

அழகாலுமென்றவும்மையாற்றனமிகுதியாலுமெனவறிக- சங்கை, வருத்தம் (௯௪)

உற்றவர்கள்வெய்யநிரையத்துயரையோரி    ※
லற்றவர்கடீயவினையல்லதறுமாறென்    ※
குற்றம்தனக்குணமெனப்பெரிதுகொண்டீர்    ※
துற்றவிஙனஞ்சிலெஙனீங்கும்வினைசொல்லீர்    ※

எ - து ஆராயிற்கொடியநரகத்தின்கட்டுன்பத்தையனுபவித்தவர்களே பொல் லாதபாவங்களை யொழிந்தோராவர், அங்ஙனம் நரகத்தையனுபவியாமற் பாவங்க ளொழியுமாறெப்படிதீமைகளையேநன்மையென்று மிகவுமுட்கொண்டவர்களேநீ ங்கள் நரகமனுபவித்தற்கிவ்விடத்திலேபயப்படுவீராயிற் செய்தபாவமெப்படிநீங் குமெனக்கதனைச்சொல்லக்கடவீர். எ - று துற்றல்- அனுபவித்தல் (௯௫)

என்றினையவாசகமவர்க்குறவிசைப்பன்    ※
கன்றியமனுஞ்சிறியரைக்கடிதுநோக்கி    ※
யன்றுமனுநீதிமுறையாவையுமயர்த்தீ    ※
ரின்றுநிரையத்துறவிளைப்பதெனிசைப்பீர்    ※

எ - து என்றித்தன்மையையுடையநீதிவசனங்களைச்சித்திரகுத்தன் அந்தத்தீவி னையோர்க்குப்பொருந்தச்சொல்லாநிற்பன் பின்பு. இயமதன்மராசனும்வெகுண்ட ந்தப்பாவிகளைக்கொடுமையாகப்பார்த்து முன்னணீங்கண் மனுநெறிமுறைமையெ

ல்லாமறந்துபாவங்களையேசெய்தீர்இப்போதுநரகத்தின்கட் செல்லுதற்குமனமடிப்பதென்னதனைச்சொல்லக்கடவீர் எ - று (௯௬)

வந்திடுகமண்ணுலகமாண்டதிறன்மன்னர்
வெந்துயரமேயுயிர்களுக்குறவிளைத்தீ
ரெந்தமுறையாலுமிங்ஙனேதுமதுபாலே
வந்துதவியானதுசொலீர்பொருண்மறுத்தீர்

எ - து பூலோகத்தினையாண்டவெற்றிப்பாட்டினையுடைய விராசாக்களே, வருவீராக- நீங்கள்திரவியத்தைவிரும்பியான்மாக்களுக்குத் துன்பங்களுறும்படி கொடுமையேசெய்தீர், அங்ஙனஞ்செய்தவும்மிடத்திலொருவகையிலேயாயினுமின்றியவந்துதவியானதெதுதானதனைச்சொல்லக்கடவீர் எ - று (௯௭)

மங்கையர்களெங்குளர்கள் மற்றையவாதார
மெங்குளர்சொலீர்புரவியானைரதயான
மிங்குவரயாமறியமேபணைகையபொற்றும்
பொங்குபடையெங்கொடியவிங்கெளிதுபோந்தீர்

எ - து உங்களுடையவந்தப்புரத்திலே நீங்கடுணையாகக்கருதிவைத்திருந்த மடவார்களெங்கேயிருக்கிறார்கள், மற்றுமுள்ளசுற்றத்தாருமெங்கேயிருக்கிறார்கள், அதனைச்சொல்லக்கடவீர் நீங்களாண்டகுதிரையும்யானையுமேறினசிவிகையுமிவ்விடத்துங்களுடனேவரக்கண்டோமில்லையே சத்துருக்களைச் சங்கரிக்குநிறைந்தசேனையெங்ஙனேவிட்டுப்போய்த்தனித்துநீங்களிங்கேயெளிதாகவந்தீர் எ - று ஏகாரம் - இகழ்ச்சி (௯௮)

கன்றவெமதூதர்கள்வெற்றுமதுகாவ
லொன்றுமறநீர்களிமையோடிங்குழுமுற்றி
ரின்றுமினியத்தினுளிருத்தவுமிருந்தீ
ரென்றவர்களச்சமுறவேபலவிசைப்பான்

எ - து நீங்களெம்முடையதூதர்கள்கோபிக்கையினாலேவருந்த முற்றும் முடையவாசற்காவலாயுள்ளதொன்றுந்தாங்காமற்போகத்தனிமையோடிவ்விடத்தில்வந்தீர், இப்போதுநரகத்திலிருத்தவுமிராநின்றீரென்றுஅவர்கள்அச்சமுறும்படிபலவசனங்களையுஞ்சொல்லாநிற்பன் எ - று [௯௯]

இப்படியேயவர்கள்சொல்லவந்தப்பாவிகள்நிற்குந்திற
மீளவும்யமதன்மராசன்கண்டுசண்டன்மகாசண்டனுக்
குச்சொல்லுந்திறமுணர்த்துகின்றார்.

மற்றவருமுன்னமுரைவல்வினைகளெல்லா *
முற்றுணர்வினிற்பருனாயற்றுளநடுங்கா *
வற்றொழியமற்றிவராகத்திறமனைத்து *
மெற்றிடுகசண்டமகசண்டகடிதென்றே *

எ - து இங்ஙனஞ்சித்திரகுத்தனும்யமதன்மராசனுமொப்பச்சொல்லவந்த க்கொடுங்கோன்மன்னருந்தாமுன்னாட்செய்தகொடுவினைகளெலலாந்தம்மறிவின் கட்டோன்றிச்சொல்லுதற்கோருத்தரமுமற்றுமனநடுங்கிநிற்பர்கள், மீளவும்ய மதன்மராசன்வாரீர்சண்டமகசண்டரேயிவர்கள்செய்தபாவபேதமெல்லாமனுப வித்துத்தொலையும்படிசடுதியிலடிக்கக்கடவீரென்றுசொல்லுவன் எ - று

அகம் - பாவம் [௱]

யமதன்மராசன்கூறமகசண்டன்முதலாயினோரந்தக்கொடு ங்கோல்மன்னரைத்தெண்டிக்குந்திறமுணர்த்துகின்றார்.

ஓதநமனுறறமகசணடமனமுவாயா *
காதியவர்பாதமிருகைகொடுபிடித்தே *
பேதமுறவேசுழல்பெறுத்திடுவர்விண்ணின் *
மீதேறிவர்பற்றிடுவரொற்றிடவிரைந்தே *

எ - து இங்ஙனம்யமதன்மராசனருளிச்செய்யவவ்விடத்தினிற்குமகசண் டன்முதலாயுள்ளோரந்தக்கொடுங்கோன்மன்னருடையகால்களையிரண்டுகையினு லும்வாரிப்பிடித்தடித்தவர்கள்மனங்கலக்கமுறும்வண்ணஞ்சுழற்றியாகாயத்தின்க ண்ணுமெறியாநிற்பர்கள், மீளவுமவர்களையெரிதழற்கல்லின்கணடித்தற்பொருட் டாகச்சடுதியிலேயேற்றுக்கொள்ளாநிற்பர்கள் எ - து [௱க]

மேலவர்படுந்திறமுணர்த்துகின்றார்.

வெந்தழலையன்னசிலைமீதுகடிதெற்றிச் *
சிந்தவுடல்செங்குருதிசேறுபெறவூற *
நொந்தறவுநோலறுவர்நொய்யவினைசெய்தார் *
மந்திரமெந்தவிதுமெற்றவரையுற்றே *

எ - து பொல்லாதவினையைச்செய்தவேந்தர்களைவெவ்வியவெரிதழற்கல்லி ன்கட்சடுதியிலடிக்குங்காலத்தவர்களுடம்புசிதறவுஞ்சேறுபதியும்படிசிவந்தவிர

த்தம்புறப்படவுமிகவுரொம் துரமதுவலிகெடுவர், அஃதெப்படியென்னில், இளந்தனிரையுடையவிளமரத்தைக் கல்லின்மேலடித்தாலெப்படிசிதறிப்போமப்படிச்சிதறவருந்துவர்கள் எ - று சோல் - வலி - [௱௨]

அவர்களாநகத்திலிருந்திறத்தைமிரண்டுசெய்யு
ளாலுணர்த்துகின்றார்.

அற்றவர்கள்சிந்தனையையாகமதுதன்னி *
லுற்றுலவமாருதமுழண்ணினைவுதன்னைப் *
பெற்றிடலுமற்றவர்களுவினையபேத *
மற்றகலவுய்த்திடுகதார்த்தலவழற்கே *

எ - து இங்ஙனமடிபட்டுச்சிந்தையழிந்துமூர்ச்சித்துக்கிடக்கும்வேந்தர்கள் தம்முடைய சரீரத்தின்கட் டென்றற்காற்றுவந்துவீசவதனாலுள்ளுணர்வுபெற்றமாத்திரத்திலேயிவர்கள்செய்தபாவங்களொழிந்துபோம்படிக்குப்பாதாளலோகத்தினகீழானவெரிவாய்நரகத்திலேபோடக்கடவீர் எ - று (௱௩)

என்றியமனோதுமுரைகொண்டவரையெல்லா *
மன்றியடுதூதர்கொடுசென்றவனியின்கீ *
ழொன்றியவொரேழுதலமொழித்தபுரியின்கீழ் *
நின்றநிரையத்தடைவிறுத்துவரொறுத்தே *

எ - து இப்படியமதன்மராசன்சொல்லும்வசனத்தைத்தூதுவர்களுட்கொண்டு அந்தப்பாவிகளையெல்லாம்பூமியின்கீழ்ப்பொருந்தியபாதாளலோகமேழினுக்குங்கீழானவுலகத்தனிலேபெற்றநரகத்திலேதண்டித்துநிறுத்துவர்கள் எ - று

அரையர்க்குச்சொல்லலேயவருளுமுலகத்தின்கண்ணுள்ளசனங்களுக்குங் ம௫வ(?)தினதாயிற்று (௱௪)

மேல்நரகங்களினதுதொகைவகையுணர்த்துகின்றார்

வேறு

தொகையினிருபத்தெட்டுத்துக்கசாகரங்கள்சொல்லின் *
வகையினற்சதமும்வாய்த்தநாற்பதுமதிக்குங்காலை *
யகலமுமிருபத்தெட்டுக்கோடியேயாயும்போதிற் *
றொகைவகையிரண்டுமிந்தநாலினுட்சொல்லுவாமே *

எ - து துக்கசமுத்திரங்களாகியநரகங்களைச்சொல்லு மிடத்துத்தொகையினு லிருபத்தெட்டாம், அதனையாராயுமிடத்து வகையினால்நூற்றுநாற்பதாம் அதன்வி ரிவைவிசாரிக்குங்காலிருபத்தெட்டிக்கோடியாம்,இங்ஙனங்கூறியமூன்றினுட்டொ கைவகைநரகங்களின்பேர்களையேயிந்நூலின்கட்சொல்லாநின்றேம் எ-று (௱௫)

நரகங்கள்பெயருமுறையுந்தடுமாறிவருவதற்கோர்வழுவமைப்புணர் த்துகின்றார்

பேதமுமுறவேயெண்ணும்பெயர்களுமுறையும்பேசும் ✻
வேதனைக்குழிக்கணாதிவிமலனாலொன்றுக்கொன்று ✻
பேதமுமுறவேதோன்றும்பிரளயமுடிவுதன்னி ✻
லாதலால்விரோதந்தம்மினவற்றிலையாயுங்காலே ✻

எ - து பிரளயமுடிந்தபின்றோன்றுஞ்சிருட்டிகாலத்திலேவேதனைசெய்யும்நர கக்குழிக்குளெண்ணு,முறையும்,பெயரு'மொன்று,க்கொன்று பேதமாகத்தோன்றும் ஆகையினாலேயநாதிநின்மலனாகியசிவனருளிச்செய்தசிவாகமம் . எண்ணையும்பெய ரையுமுறையையுமொன்றுக்கொன்றுபேதமாகவுஞ் சொல்லாநிற்குமதனையாராயு மிடத்தந்தவாகமங்களொன்றுக்கொன்றுதம்மில்விரோதமில்லை எ - று

பேதமுமென்றவும்மையாற்பேதமில்லாமலுந்தோன்றுமெனவறிக (௱௬)

தொகைநரகங்களின்பெயரைநாலுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

கோரமதுதான்முதனரகங்கூறுமதன்கீழ்க்கவின்கோரங் ✻
கோரமதன்முன்னதிகூட்டிக்கூறுமதுமூன்றுநரகங் ✻
கோரதரமேயதனதுகீழ்க்கோரரூபமற்றதன்கீழ்ச் ✻
சேருமதன்கீழ்த்தரளதரஞ்செறியுமதன்கீழ்ப்பயாநகமே ✻

எ - து - வெளி (௱௭)

அதன்கீழ்க்காளராத்திரியேயாகுமதன்கீழ்ப்பயோற்கடமே ✻
யதன்கீழ்ச்சண்டமதுதானேயடையுமதன்கீழ்மகாசண்ட ✻
மதன்கீழ்ச்சண்டகோலாலமாகுமதன்கீழ்ச்சண்டதர ✻
மதன்கீழாகுஞ்சரோருகமேயப்பாற்சலசவதியதுவே ✻

எ - து - வெளி (௱௮)

கூறியவைந்தும்,முதனிரயமாகிய கோரத்துக்குநாயகங்களாமிந்தமுறையேமற்ற விருபத்தேழுநரகத்துக்குமொவ்வொன்றுக்கைவைந்தாகவெண்ணிக்கொள்க. வது ற்றுப்பெயர்களையாஞ்சொல்வாம் எ - று (௩௰௨)

அதிகோரமறவுமிருடைக்கணமற்றம்போசம் *
விதமுடையசஞ்சீவஞ்சடமாயைவிலோமமெனக் *
கதமுடையவீமமெனக்கடங்கடத்தோடிவைபத்தும் *
விதமறுதீவிரவேகங்கராளமெனவிளம்புநவும் *

எ - து - வெளி [௩௰௩]

விகராளம்பிரகம்பம்வெண்கமலம்வீற்றுமுகம் *
பகவீக்குங்கரும்பாசம்பயின்றபிரமருத்தனமே *
புகராயசூசிமுகம்புதைநேமிகாதகமே *
பகவுடற்பீடனங்கும்பீபாகமெனப்பகர்ந்தனவும் *

எ - து - வெளி [௩௰௪]

அதிபாகங்கிரகசமற்றசிதாருவங்காரங் *
குதிகொள்ளுமிரதசச்சிக்குழியிருப்புத்துண்டப்புள் *
கெதமாக்குஞ்சங்வருத்தங்கிரதுவழன்மயச்செங்கற் *
றிதநீங்கவுழத்ததசைதிரபுவெனச்செப்பியவும் *

எ - து - வெளி (௩௰௫)

சோகிக்குமுச்வாசநிச்வாசஞ்சுடர்த்தீர்க்க *
மோகிக்குஞ்சுழலழல்வாள்முள்ளிலவந்துணித்துருட்டஞ் *
சோகிக்குநாதஞ்சுப்பிரவாகம்பிரவகனம் *
வேகிக்குங்கரடிபுருமேடமெனவிளம்புநவும் *

எ - து - வெளி (௩௰௬)

விறலிடபமுட்பன்றிசிங்கம்வியாக்கிரம்யானை *
திறனாய்சூகரமாடுதிடமேதிபிடவமச *
மறவெடியவிருகானமதிகிரகண்கும்பீரங் *
கழுவுளநக்கிராக்கியங்கட்டரவமெனக்கழறுநவும் *

எ - து வெளி (௱௰௭)

உரைத்தபெயர்பின்னுரைத்துமூனமிலையோள்ளழலைப் ✽
பரித்தகடத்தினைமற்றுமொருபொருளைப்பரித்திடலால் ✽
விரித்துணர்வார்க்கரியெனுஞ்சொல்வேறுபலபொருள்விளக்குஞ் ✽
சுரித்தகிழித்தொகும்பொருள்கள்பலவுமுளதுணியுங்கால் ✽

எ - து முன்புரைத்தபெயர்களைப்பின்புரைக்கினுங்குற்றமில்லைய, ஃதெங்ஙனமோவெனில்அழகியவக்கினியைத்தரித்தகுடத்துக்கிலையாகவேறொருகுடமானது மற்றொருபதார்த்தங்களைத்தரித்தாலுங்குடமென்னும்பெயர்குன்றாதவாறுபோலப்பெயரொன்றாயிருந்தாலுங்குணம்வேறுபட்டிருக்கும்அஃதன்றியும்அரியென்னுஞ்சொல்லைவிரித்தறிவார்க்குப்பலபொருளைவிளக்குமதுபோலவுஞ், சுருக்குதலையுடையமடிச்சீலையென்னும்பெயரொன்றாயிருக்கவும்அவையிலிருக்கும்பொருளைவிசாரிக்குங்காற்பலவாயிருக்குமதுபோலவும். எ - று

இச்செய்யுளான்முற்கூறியதைப் பிறகூறினுங்குற்றமில்லையென்றுவழுவமைதிபண்ணினுரொன்க. (௱௰அ)

கூர்மவுருக்கருங்காகங்கொடுங்கழுகுகடுங்கூகை ✽
கார்வாயவட்டைபுலிகவிகட்கங்கண்டகமே ✽
யீர்வாய்ச்சியிரத்தவிழிவிகழ்பூகிமிருத்திகையே ✽
சேர்வாயகணதாமமெனவுறையிற்செப்பியவும் ✽

எ - து வெளி (௱௰௯)

அழலுமிழ்வன்புழுக்குழியமேத்தியமப்பிரதிகரம் ✽
வழுவாபுண்ணீர்த்தானம்வாய்நீர்ச்சிவனசூலைக் ✽
கழியாத்தான்றனைத்தின்னல்கலந்தனத்தமனைத்துமுண ✽
லொழியாததாருணமேயெனவுறைவிலுரைத்தனவும ✽

எ - து வெளி (௱௨௰)

வேதிக்குஞ்சங்கடமேவித்தரமேபிருவிகடம் ✽
வாதிக்குங்கட்பூதங்கரிநெருப்புவறையோடு ✽

பேதிக்கும்வைதரணியிருப்பழற்பாம்பிணித்துறக்க ❋
லேதத்தைத்தருமேகபாதமெனவிசைத்தனவும் ❋

எ - து வெளி [௱௨௧]

அறவருத்தும்பூரணமேயசிதாலவனங்கோர ❋
முறியவெலும்பிணைமுருக்கன்முழுப்பீடைதிலச்செக்கே ❋
யெறியவுறுமியந்திரமேகருப்பாலைபட்டர்ப்பாசம் ❋
மறியவுடன்மருத்தனமேயெனமுறையில்வகுத்தனவும் ❋

எ - து வெளி (௱௨௨)

பரியசுவிநுண்சுல்வி பாறைய்பழவிருப்புமயம் ❋
பொருவரகள்குர்தாரம்யாமளமென்பொருப்பதுவே ❋
யருவருமூத்திரகூபமலக்கூபமறவுமிரு ❋
ளெரியுமறற்சாதனமேயுரலுலக்கையென்பனவும் ❋

எ - து வெளி (௱௨௩)

அரைத்தொறுக்குமியந்திரமேசிலைவண்டிலயக்கலப்பை ❋
வருத்தியிடுந்தாலவனமாமசகமண்டுகமே ❋
தருக்கழிக்குஞ்சம்மோகமத்திபங்கந்தழற்சூல ❋
மிருப்பழலாமுருள்விழுங்கலெனமுறையிலிசைத்தனவும் ❋

எ - து - வெளி (௱௨௪)

பலதுயரமிகுதுயரம்பழுதாயகசுமலமே ❋
நிலவரியசமலமலநிட்டுரவாலாகலமே ❋
விலகரியமிதவிருபம்விகிர்தமியமானுகமே ❋
யிலகியிடுமொருபாதந்திரிபாதமென்பனவும் ❋

எ - து - வெளி (௱௨௫)

அறக்கொடியதீவிரமேயவீசியெனவுறைந்தனவுஞ் ❋
செறித்தறிகவொருநூற்றுநாற்பதெனத்திண்ணமுற ❋

வொறுத்துயிர்க்குப்பாவவிதமொழிக்கவொழுக்கியநிலையத் *
திறத்தினுக்குநாயகங்கடெருளவெனுஞ்சிந்தையரோ *

எ - து தீவிரம்- அவீசியென்றிங்ஙனங் கூறியது கூடனூற்றுநாற்பதாகவேவற்றி யாசரகங்களைநிச்சயமாகப்பிறித்தறியுஞ் சிந்தையினையுடையோர் ஆன்மாக்களுக்கு ப்பாவவிதமொழிக்கநிறுவியாசரகபேதங்களுக்குஒன்றுக்கைவைந்நாயகங்களெ ன்றறிக எ - று (௩௨௬)

மேலிராசநரகங்களையுணர்த்துகின்றார்

இருள்புழுதிவடிவாகியிடர்மிகுத்தரௌரவத்தை *
யாரையனெனவறிந்திடுகவருந்துயரந்தனைக்கொடுக்கு *
மெரிமயக்கும்பிபாகமிதற்குமிறையெனவெனுக *
கிருமிசெறியவீசியிறையெவற்றினுக்குங்கிளக்குங்கால் *

எ - து இருண்டபுழுதிவடிவாகிமிகுந்ததுயரத்தைச்செய்யும்ரௌரவத்தையெல் லாநரகங்களுக்குமிராசநரகமென்றறிந்திடுக,அரியதுயரத்தைச்செய்யுமக்கினிச்சு வாலைபோன்றகும்பிபாகமென்னுநரகம்இந்தரௌரவத்துக்குமிராசாவாதலாலிரா சராசநரகமெனப்பெயர்பெறுமெனவறிக, புழுப்பொருந்தியஅவீசியென்னுநரக த்தைச்சொல்லுங்காலெல்லாவற்றுக்குமிராசாவாமாதலாலி ராசாதிராசநரகமெ னப்பெயர்பெறும் எ - று (௩௨௭)

மேற்பாவிகளைநரகத்திலனுபவிக்கச்செய்துகளைவேற்றுமுறைமையை
யுவமையாலுணர்த்துகின்றார்

செய்தசெய்ததீவினையின்றிறத்திசையவிவற்றழுங்கி *
மையலுறுமவர்துயரமுடிவின்கண்வல்வினைகள் *
பையவிடவெடுத்திடவும்படுவரழற்படிகனகம் *
வெய்யவழலினைவிடுமேகளிம்பறலும்விளங்கிடுமே *

எ - து அழலிற்போட்டகனகமானதுஅக்களிம்பற்றமாத்திரத்திலே யந்தவெய் யவழலினின்றுஞ்சொன்னகாரராலேயெடுக்கப்பட்டு விளங்கும்,அதுபோலத்தாந் தாஞ்செய்தபாவவிதத்துக்கிசைய- அவீசிமுதலியநரகத்திலழுந்தி மயக்கமுறுமா ன்மாக்களும் பாவபலமுடிவிலே பலவினைகண் மெல்லவிடவ் யமதூதர்களாலேய வைகளினின்றுமெடுக்கப்படுவர்கள் எ - று

சொன்னகாரரொன்றும் யமதூதரொன்று மெச்சம்வருவித்துரைக்க (௩௨௮)

இயமதூதர்கள் அப்பாவிகளைத்தண்டிக்க அவர்கள் துன்பத்தைப் பொருந்தும்வகையினையிருபதுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

மறுத்தருட்டமக்குவைத்தவத்தனித்தன்வாய்மையும் *
வெறுத்தறத்தினைத்தவத்தைவிட்டகட்டதுட்டனாக் *
கறுத்துளத்தறச்சிவத்தழற்கலித்தகண்ணரா *
பொறுத்தொறுத்துறுக்குவார்கடூதராயுதத்துமே *

எ - து தம்மிடத்திலேயருளைவைத்த செகத்பிதாவாகிய சிவனதுவாக்கியப்பிரமாணத்தையுமறுத்துத்தனக்கேற்றதன்மத்தினையுஞ்செய்யாது வெறுத்துத்தவத்தினையும்விரும்பாதுவிட்ட பொல்லாததுட்டனை, யமதூதராஞோர் மனங்கறுத்துமிகவுஞ்சிவந்தழற்சொரியாநின்ற கண்ணினையுடையரா,யாயுதங்களினாலேகுத்திக்குத்திக்கொவிப்பர் எ - று (௩உக)

இருப்பழற்றொடர்ப்பிணித்திடர்ப்படக்கரத்தினும *
பரித்திடப்பணித்தவண்பழிப்புடற்பதைக்கவே *
துரக்கமெய்ச்சுழன்றுருண்டதுக்கனைத்தொகுத்துவிண் *
டருக்கறச்சதத்திருப்புருட்பிணிப்பர்தாளிலே *

எ - து அழல்போன்றவிருப்புச்சங்கிலியினாலேகைகையையுங்கட்டியச்சங்கிலியைத்துக்கமுறவேந்துவித்து, அங்ஙனம்பழிப்புண்டாகியசரீரம்பதைக்கத்துரத்தவோடமாட்டாமற்றமதுடல்சுழன்றுவிழுந்துபுரண்டதுக்கத்தையுடையபாவிகளைமீளவுங்கூட்டிப்பிடித்துமிகுந்தகெருவமறும்படிக்குநூறிருப்புண்டையையிரண்டுகாலினுங்கட்டிமீளவுந்துரத்துவர்கள் எ - று விண்டருக்கு - மேலானகெருவம் (௩௩ய)

உன்னுவார்கண்முன்னைவல்வினைத்திறமுளத்துளே *
யென்னைசெய்யலாவதென்றுமெண்ணிநொந்திளைப்பருந் *
துன்னுவாருமில்லையுற்றதுக்கநோய்துடைக்கவு *
மன்னுமாமனத்தொடல்லதில்லையூடல்வாய்மையே *

எ - து முற்கூறியபாவிகளானோர், தாம்முன்னேசெய்த கொடுவினையினதுதிறத்தைவிசாரிப்பர்கள், அதற்குப்பரிகாரம்யாதுசெய் வோமென்று தமதுமனதிலேயெண்ணியுள்ளழிந்திளைத்தலையுஞ்செய்வர்கள்,தாம்பொருந்தியதுக்கநோய்

டைப்பதற்கவ்விடத்தொருவர்,வருவாருமில்லையாதலாலுடலுந்தமது மனத்தோ டன்றிவேறொருவருடனுமில்லை,யிவைகளுண்மையே. எ று (ஙகூக)

சித்தமுந்திகைக்கவேயிரத்தமுந்தெறிக்கவே *
மொத்துவாரழற்கசைக்கொழுந்தழுந்திமூளவுன் *
குத்துவாரிருப்புலக்கையைக்கரத்தினிற்கொடே *
மத்தரானதூதர்பாவமேவினோவாடவே *

எ - து மதத்தையுடையயமதூதர்கள், பாவஞ்செய்தோரைமனந்தடுமாற இரத்தமுந்தெறிக்கவக்கினியைச் சொரியாநிற்கிறகசையிற்கொழுந்தானதுதசை யைப்பீறியூனிலேசென் றுதைக்கவடிப்பர்கள், பின்பிருப்புலக்கைகைக்கையிலே யெடுத்துக்கொண்டுஅவர்கள் தளர்வுறும்வண்ணமுதுகிலேகுத்துவர்கள் எ - று கசை - குதிரைச்சம்மட்டி. (ஙகூஉ)

ஒழுக்குவார்கள்காரநீருமொள்ளழற்குழம்புமோ *
தெழித்திரத்தவெள்ளமுந்திறக்கமெய்மறக்கவே *
யழுத்திவாளையங்கமெங்குமன்றிநின்றறிந்துடற் *
புழுக்குவாரொணைத்தடக்குடத்தினுட்புகுத்தியே *

எ - து இங்ஙனமடிபட்டுப்புண்ணாகியதேகத்திலேயுப்புமுதலியகாரநீரையுமக் கினிக்குழம்பையும்அதட்டிவிடுவர்கள்,அஃதன்றியுமிரத்தவெள்ளமுந்திறந்தோடநி னைவுமறக்கவாள்கொண்டறுத்துச்சரீரமெங்குஞ்சின்னஞ்சின்னமாகவரிந்துபெரி யவெண்ணெய்க்குடத்துக்குள்ளேயடைத்துவேகவைப்பர்கள் எ - று அழற்குழம்புமோவென்றவோகாரத்தினாற்புளிநீர்முதலியவுமெனவறிக. (ஙகூஙு)

விட்டைமிக்ககூபவாய்விழுங்கவேயழுங்குவார் *
கட்டமிக்கமேதைசிக்கலந்துளங்கலங்குவார் *
நிட்டுரப்புழுக்குழிக்குணின்றயர்ந்துநீங்கிலார் *
விட்டறத்தினைக்களித்தவம்புரிந்தவீணரோ *

எ - து தன்மத்தினைச்செய்யாதொழித்துஅதன்மத்தைச்செய்தவீணராகோ ரிற்சிலரை. யமதூதர்கள்மிகுந்தமலகூபமாகியநரகத்திலேபோடவதன்கண்மூழ் கிக்கிடந்துதுக்கிப்பர்கள், சிலர்தன்பத்தைமிசவுங்கொடாநின்றவூனுஞ்சீயுமு டையநரகத்தைப்பொருந்திக்கிடந்ததிலேயுள்ளங்கலங்குவர்கள், சிலர்கொடு

மையானபுழுக்குழிநரகத்துணின்றுசோர்ந்ததனைநீங்கமாட்டாதுகிடப்பர்க ள் எ - று (௱௩௪)

கூரிதாயவாயவாயதாங்கோதிமேனிபுழு ✻
மீரவீரவாறுபோலிரத்தமும்பாய்க்கவே ✻
தீருமாறுதேடுவார்கடையபாவமேவினோர் ✻
வீரமாயநாயுமாயவாயினால்விடக்கவும் ✻

எ - து தீவினைகள்செய்தோர்,கூரியவாயினையுடைய காக்கைமுதலாயினபுட்கள், காலாலடித்துமூக்கினாற்கொத்தியுமறுக்கவறுக்க வீரத்தினையுடைய நாயுங்கூரியவாயினாற்றமதுசரீரத்தைக்கடிக்க,விரத்தமானதாறுபோலோடத்துக்கித்திந்தத்துயரமொழியுமாறெங்ஙனமென்றுவிசாரிப்பர்கள் எ - று (௱௩௫)

செக்கிடைத்திலத்தினுக்குமொப்பெனத்நெருக்குவார் ✻
இக்கினுக்குமொப்பெனக்கலைப்பர்வைத்தியந்திரத் ✻
தப்பினைக்கலந்தவுப்பெனத்தழற்கழுத்துவார் ✻
தப்பறத்தமக்கறம்புரிந்திலார்கடம்மையே ✻

எ - து யமதூதர்கள- தமக்கென்றுகருதிக்குற்றமறத்தன்மஞ்செய்யாததுட்டரைச்,செக்கிற்போட்டுஎள்ளுப்போலவரைப்பர்கள்,அதுவுமின்றியாலையிட்டுக்கரும்புபோலவுநருக்குவர்கள் அதுவுமன்றி நீரிலேகலந்தவுப்பானதுபின்னமன்றியிருக்குமாறுபோலவிவர்கள்,சரீரத்தையக்கினியென்றுஞ் சரீரமென்றும் பின்னம்பண்ணுமலக்கினிச்சுவாலையாகியநரகத்தின்கண்ணும்போடுவர் எ - று

கலைத்தல் - நருக்குதல் - இயந்திரம் - கருப்பாலை [௱௩௬]

பொய்ம்பினைப்புகன்றபுல்லர்வாயினைப்புடைத்துநாக் ✻
கொய்வர்துக்கபேதமுங்கொடுப்பர்தூதர்கோணனு ✻
வெய்யர்முன்புசொன்னபொய்வினைத்திறம்விளங்கவே ✻
நைவவொன்னைசெய்வமென்றுதிருமாறுநாடியே ✻

எ - து யமதூதர்கள்பொய்சொல்லியவர்வாயிலேயடித்துஅவர்கள்நாக்கினையுமறுத்துப்பலதுக்கத்தையுமுறுவிப்பர்கள்அப்பொழுதந்தப்பொய்சொல்லியகொடியோர்- தாமுன்புசொன்னபொய்களெல்லாந்தம்மனதிலேயுதிக்கவுதித்தலாலேய தனாலுண்டாகிய பாவபலம்போமாறுவிசாரித்ததற்கென்செய்வோமென்றுள்ளமுமெலிவர் எ - று [௱௩௭]

வேதமாகிநாரிலுள்விதித்தறத்தினைப்பழித்
தேதமானநாரியம்புமீனர்காவெழுந்துபோய்க்
காதமோடணைத்துராங்கமிக்கவெங்கலப்பையால்
வாதைகூருமாறுகிழியூறுசெய்யமாய்வரோ

எ - து வேதாகமபுராணத்திலுண்டாகியவிதிமுறைமையைப்பழித்ததற்கு விபரீதமாகியநூலினைச்சொல்லு மற்பர்நாவானது ஒன்றனைககாதவழிதூரமெழுந்துவளராநிற்குமங்ஙனம் வளர்ந்தநாவிலேயவர்கள்துயருறும்படி யமதூதர்கள் கொடியகலப்பையினாலேயுழுதுபுண்படுத்தவருந்துவார் எ - று (௱௯௮)

வேறு

விதித்திறத்தைச்செவிப்புலத்துள்விளைத்தருள்செய்வேதியனைக்
கொதித்ததட்டுமவர் முகத்தைக் குடைந்திரத்தங் குடித்திடலும்
பதைத்திடுவரட்டைபலபற்றியபின்னுமுற்காரம்
விதிர்த்தலறவிட்டிடுவர்தாமிரத்தின்வெவ்வாறலும்

எ - து வேதாகமபுராணங்களிலேவிதித்தமுறைமையினைத்தன்செவியிலே புலப்படவருளிச்செய்தவாசாரியனைக்கோபித்துப்பார்த்ததட்டும்பாவிகள்முகத்தை, யட்டைகள்குடைந்துஇரத்தங்குடிக்கயதனுறும்பதைத்துவிழுவார்கள். அவ்வட்டைகள்குடித்துவிட்டபின் அகயமதூதர்கள்சுடுகின்றதாமிரமுருக்கினசெம்பும் அவர் மெய்நடுங்கியலறும்படிகாய்ச்சிவிடுவர்கள் எ - று

வேதியன் - அறிவிப்பவன் - புலம் - அறிவு (௱௯௯)

உருகியபித்தளைத்தழலுமொழுக்கிடுவரதன்பின்பு
விளையவழலூறுதயிலமதுதனையும்விட்டிடுவர்
பொருகிருமிமலவளறும்பூரிப்பர்புல்லியரை
வெருவுறத்திசமன்றூதர்விதியிகந்தவினைவிடவே

எ - து யமதூதர்கள், வருணாச்சிரமத்துக்கேற்றவிதியினைவிட்டோருடைய பாவம்போம்படிக்கந்தவற்பனைப், பயமுறுத்திப்பித்தளையுருக்கியிடுவர்கள், அதன்பின்பு, எண்ணெயினையுங்காய்ச்சிச்சொரிந்தியிலேவிடுவர்கள், அதுவன்றிப்புழுக்கணெருங்கியமலச்சேறுகியநரகத்திலுமழுக்குவிப்பர்கள். எ - று (௨௱)

உற்றிடுவெருணாத்ததுயரனைத்தினையுமொருவாதே
பெற்றெடுத்ததாய்தன்னைத்தந்தைதனைப்பேணாரைப்

பற்றறவேபாடித்துக்கொதி த்ததட்டும்பாவியருங் ※
குற்றமவர்செய்திடினும்பொறுத்திடுகைகுண்மன்றே ※

எ - து பெற்றவளர்த் தமாதாபிதாவையும் மகாத்மாக் களையுமவர்களிடத்து நேசமில்லாத வசனத்தைச்சொல்லிக் கோபித்திருக்கும்பாவிகள், முன்சொன்ன நரகங்களெல்லாவற்றையும் நீக்கமின்றியனுபவிப் பார்கள் ஆகையினாலேயவர்கள் குற்றஞ்செய்யினுமதனைப்பாராட்டாமற்பொறுத்தலேநன்மையாவது எ-று(௱சக)

உத்தமரைமதியாதேயுபானபதத்தொடுநடக்கு ※
மத்தரையுமழற்சுரிமுள்ளிலவமரமதுதன்னிற் ※
பொத்திடுவர்முதுகறைவர்புணரிருப்பு முளைத்தண்டாற் ※
கொத்திடுவரங்குசத்தாலீர்வாளாற்குறைப்பருமே ※

எ - து பெரியோர்களைமதியாமலவர்கள்முன்னே மரவடி செருப்பு முதலிய வற்றைத்தொட்டு நடக்குமறிவில்லாதோரை யமதூதர்களக்கினி சொலிக்கிற முள்ளிலவமரமாகியநரகத்திலே முகங்கீழாகப்போட்டு இருப்பு முளைகளை நெருங் கக்கடாவியதடியினாலே முதுகிலேயடிப்பர்கள் அஃதன்றிக் குடாரியினாலுங்கொ த்தியீர்வாளாலுமறுப்பர்கள் எ - று (௱சஉ)

உற்றிடுவருரைத்ததுயரனைத்தினையுமுயிர்க்கிரக்க ※
மற்றுவதைத்தவைதன்னையவலமெனாதவற்றானைத் ※
துற்றினருமற்றுமுளகொலைபுரிந்ததுசினரும் ※
பற்றுமிலர்படுந்துயர்க்குக்கடுந்தூதர்வலிப்பட்டே ※

எ - து உயிர்க்கிரக்கமற்றுத் தமக்குப்பொசித்தற்கருகமாகிய மிருகமுதலியவு யிர்களைவதைத்தவையிற்றினூன்களைக் குற்றமென்றுகருதாமற் பொசித்தவர்களும் பொசித்தற்கருகமல்லாதவுயிர்களை வதைத்தபாவிகளும், யமதூதர்வலியிலேயகப் பட்டுஅவர்கள்படுந்துயரத்துக்காதாரமுமற்று முன்சொன்னநரகங்களெல்லாவற் றையுமனுபவிப்பர்கள் எ - று (௱சங)

அரிந்தரிந்தேயுடலூனையருத்திடுவெரிரத்தமெலாஞ் ※
சொரிந்துகுடித்திடச்சொலுவர்தூதர்பசிதோன்றவன ※
மிரந்தவர்க்குப்பசிதணியாதிருந்தருந்துமீனரையும் ※
அருந்தியிடக்குளிர்ந்தபுனலுதவாதவவலரையும் ※

எ - து இயமதூதர்களானோர். பசித்துவந்தவர்களுக்காகாமிடாமற்ற னேதனித்திருந்துபொசிக்குமற்பனையுந் தாகித்தபேர்களுக்குத்தண்ணீர்கொடாத பொல்லாதவர்களையும்அவர்களுடையமாங்கிசங்களையரிந்தரிந்துபொசிப்பித்துச் சரீரத்தையுங்குடைந்துஇரத்தத்தைவாங்கியவர்களைத்தானேகுடிக்கச்சொல்லுவ ர்கள். எ - று (௱௬௬)

பின்னுமவர்தமையாலைக்கரும்பெனவேபிழிப்பர்
துன்னுமசிதாலவனத்துடற்றுணியத்தொடுத்திழுப்பர்
பின்னமுறவுடலூன்றசூசிபலபொறுத்திடுவர்
கொன்னவிலுந்தழற்சூலக்கொழுந்திலுமெய்கொளுத்துவரே

எ - து வெளி அசிதாலவனம் - வாள்போலருகின்றமட்டை யினையுடையபனங்காடு - சூசி - ஊசி - கொன் - அச்சம் (௱௬௭)

அறுத்தொறுப்பருறுப்பினைத்துயிர்வாளாலகத்தெலும்பு
முறித்திடுவர்கண்கலங்கமுகத்தறைவர்மூரணுரியப்
பொறுப்பரியதுயரனைத்தும்பொருத்திடுவெரித்திடுவார்
கறுத்திடுவிரங்காதகரிசுதனைக்கழித்திடவே

எ - து வெளி — அகம் - சரீரம் - மூரணம் - வலி - கறுத்தல் - கோபித்தல். (௱௬௮)

நிறுத்திடுவ✠ருச்வாசநிருச்வாசநிலையுந்தும்
வறுத்தமணன்முகத்தறைவர்மாறொளரவத்து
முறுத்திமிகவொறுத்திடுவொள்ளழற்கூரிருப்புழா
செறித்தறைவர்கோசத்தின்முகமதனிற்சிரத்திலுமே

எ - து வெளி (௱௬௯)

பதத்தறைவர்குதத்தறைவர்பதைத்தாழுங்கவுரத்தறைவர்
விதிர்த்தகரத்திலுமறைவர்வெய்யவழற்செங்கனிலுறு
மிதித்திழுப்பருதகானமுதவாதவெட்டியனைக்
கதத்தெழுந்துமறுணைகடவாதகடுந்தூதர்

எ - து வெளி-உதகானம்-உதகம்-அன்னம்-கதம்-கோபம் (௱௭௦)

---

✠ உச்சுவாசம்-சுவாசம்விடுதல்-நிருச்சுவாசம்-சுவாசமடக்குதல்

மேற்பரதாரகெமனம்பண்ணும்புமானையுமந்நாரியை
யுமியமனூதர்கள்துய்ப்பிக்குமுறையையாறுசெய்யுளானு
ணர்த்துகின்றார்.

பரிவுடையபரதாரியழலிருப்புப்பாவையினை *
யுருகிபிடவுடன்முழுதுந்தழுவியழுதுளைந்திடவெ *
னுரியவனையொழிந்தொருவற்குடல்கொடுத்தவொண்டொடியு *
மெரியுருவப்பாவையவனெனத்தழுவிபிளைப்பாளே *

எ - து வெளி அழலிருப்புப்பாவைசொரனாரிரூபமாகிய-இருப்பழற்பா
வை - உளைதல் - துக்கித்தல் - எரியுருவப்பாவையவன் - புமானுருவமாகிய - இரு
ப்பழற்பாவை. (௱௪௯)

பிரிந்திடவேவிளைந்திடுமப்பேதைதனைப்பிரியாதே *
பொருந்தியிடவழலுருவிற்புணர்த்திடுவர்கணவனை நீ *
பிரிந்தனையேபுணர்ந்தனையேபிற்றுருநின்பெரும்பாவம் *
பிரிந்திடுநாட்பிரிந்திடுநீயெனத்தூதர்பேசுவரோ *

எ - து வெளி (௱௫௰)

மற்றவனுமழன்மயத்தவடிவுசுடவழிவுசெய *
லற்றழிந்துபிரிந்திடவேயாதரிப்பனவன்றனையு *
மற்றொருவன்மனைமகிழ்ந்தவல்வினைநின்றனைப்பிரிந்தே *
யற்றிடுநாளகன்றிடுநீயெனக்கடுகியழுத்துவரோ *

எ - து வெளி மற்று - வினைமாற்று - ஆதரித்தல் - விரும்பல (௱௫௧)

இனையகடுவினைய்தனையியற்றினளாயிரும்பாலே *
வனைகுடத்துட்புகுத்தியதன்வாயடைத்துவன்றூதர் *
கனன்மிசையேவைதெரிப்பர்கன்றவுடலுருகிடிப்ப *
ரனலொழுகுசிலைதனிலுமுடற்சிதறவுறைவாரோ *

எ - து வெளி வனைதல் - பண்ணுதல் (௱௫௨)

வெருளவிருட்கூபத்தும்விட்டிடுவர்விள்ளவுடற் *
பிரமரங்கள்பெறுத்திடுவர்நிறுத்திடுவர்பெருங்கிருமி *

எ - து வெளி - உற்பவம் - உண்டாக்குதல் (௱௫௭)

அழுத்திடுவர்கிருமிசெறியவக்குழிக்குமதன்மீட்டே ✻
யுழுத்ததசைக்குழியுள்ளுறுத்திமிகவொறுத்திடுவர் ✻
மழுக்கறவேபொருகிரியினிடைநெருக்கிவருத்திடுவ ✻
ரழற்குழியினதோமுகமாவழுத்திடுவரவர்தமையே ✻

எ - து வெளி - உழுத்ததசை - நாற்றமாங்கிசம் - பொருகிரியினிடைநெருக்கல் - இரண்டுமலைபிறுலைநெருக்கல் - அதோமுகமாவழுத்தல் - தலைகீழாகப் போடுதல். (௱௫௮)

பரிவோடன்றியிடுவோரதுபானான்னத்தைப்பொசித்தோர்
படுந்துயரமுணர்த்துகின்றார்.

அரவொடுநமிருப்புண்டையவைவிழுங்கவடித்திடுவர் ✻
மொழியிடலுமிரவெளங்கசையாலுமொலித்திடுவர் ✻
பழுதறவேபரமனியாதிடுசோறுண்பரிவிலனா ✻
யழுதழுதுகதறியவர்வீழ்ந்திடநாதுவரநிர்த்தே ✻

எ - து வெளி (௱௫௯)

ஆலயமுதலியவற்றுள்மலவிசர்க்கமுதலியசெய்தோர்
படுந்துயரமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

ஈசர்திருவாலயத்துமிடர்கடியும்புனற்றடத்தும் ✻
வாசமலர்த்திருநந்தவனத்திடையுமடத்தினுளும் ✻
மாசுகளைந்தருந்தியானமைதனமற்றையதொழிலுங் ✻
கூசமறப்புரிகின்றகொடியாரைமிகக்கொதித்தே ✻

எ - து வெளி - மாசுகளைதல் - மலவிசர்க்கமுதலியனசெய்தல், மற்றைய தொழில் - சயனாதிகள் - கூச்சம் - கூசமெனக்குறுகியது. (௱௬௰)

இக்கணமேசெக்கிடையிட்டியந்திரிப்பர்யமதூதர் ✻
துக்கமுறநரகவிதமெனைத்தனைத்துந்தொகுத்தொறுப்பர் ✻
உக்கிரவாரழனிரையத்தொடுக்கிடுவருருகிவிழத் ✻
தக்கதிர்மதியளவுமவரதனிற்றவிப்பாரே ✻

எ - து வெளி- உக்கிரவாரழனிரயம்- கருமாகியவெரிவாய்நரகம் (௱௬௧)

ஆசாரியனை நிந்தனைபண்ணக்கேட்டிருந்தவர்களுஞ்சிவயோகிகள் தபோதனரிவர்கட்கபராதம்பண்ணினவர்களுமனுபவிக்குந் துயரத்தையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

குரவனையுநிந்தனைகள்கூறியிடக்கேட்டார்த
மிருசெவியிற் றுளையுறவேயெரியிருப்புறுளையறைவர்
உருகியதாமிரமற்றுமொழுக்கிடுவரவற்றுளுறப்
பருவரலுற்றிடநிரையவிதத்துமுறப்பதிப்பாரே

எ - து வெளி - பருவரல் - துக்கம் (ரசுஉ.)

உற்றிடுவர்செவிப்புலத்திலுறுதுயரமெனைத்தனைத்து
மற்றுமுளவிந்திரியத்தபராதமருவினர்க
ணற்றிவிழிநிருமலனைநினைந்துலகவியற்கையினை
யற்றவருந்தபோதனர்க்கும்புரிந்தாருமபராதம்

எ . து அந்தவாசாரியர்க்குமற்றுமுள்ளகண்முதலியவிந்திரியங்களினாலேயபராதம்பண்ணினோர்களுமுதற்கட்செவிப்புலத்தினுக்குக்கூறிய துயரமெந்தனையுண்டத்தனையுமந்தந்தவிந்திரியங்களிலேயனுபவிப்பர்கள், உலகவியற்கையையொழித்துச்சிவத்தியானம்பண்ணியிருக்குஞானிகளுக்குஞ்சாதகர்முதலியதபோதனர்க்குநிந்தைமுதலிய வபராதம்பண்ணினவர்களுங் குருநிந்தைசொல்லக் கேட்டிருந்தோர்க்குச்சமமாகவநுபவிப்பர்கள் எ . று (ரசுரு.)

பிறர்மனையாளையிச்சித்துத்தீண்டினோர் துயரமுணர்த்துகின்றார்

மற்றொருவன்மனையாளைவாஞ்சையுறப்பரிசித்த
நற்றமறக்கூரழல்வாய்ச்சூசியினுறைத்திடுவர்
முற்றுமுடற்றுமிரத்தின்முழுக்கனலுமொழுக்கிடுவர்
மற்றுமுளநிரையவிதத்தினுமழுத்திவருத்துவரே

எ து - வெளி (ரசுச)

பிறர்மனையாளையிச்சித்தநிகாரத்தாற் பார்த்தோரையமனுதர்கள்துய்ப்பிக்குமுறையுணர்த்துகின்றார்

மனமுறாகவிழிகுரிரவாஞ்சையுறப்பார்த்திடினு
முனமுரைத்ததுயரனைத்துங்கண்டனிலுமுற்றுவிப்பார்

தன்னுடையபசும்பாடினுஞ்சங்கரர்க்குக்குறித்தபொரு *
ளின்னிசையவாகமமென்றியம்பிப்டுமிவைதனினும் *

எ . து . வெளி (௱எ௩)

கரமதனிற்பதமதனிற்காரவழற்கவிழ்த்திடுவ *
ருருகியதாமிரத்தினையுமொழுக்கிடுவர்வழுக்கறவே *
வினையவிதமெனைத்தனைத்துமுணர்வறவேயிறுத்திடுவர் *
கரவினையும்பதவினையுங்கட்டதரங்கட்டதரம் *

எ - து - வெளி . வழுக்கு . நீக்குதல் - கட்டதரம் . மிகுந்தகொடுமை (௱எ௪)

சிவாலயமுதலியவற்றின்மலமூத்திராதிக்கவிட்டோரையமனுதர்கள்து
ய்ப்பிக்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஈசர்திருவாலயத்துமெழிலுறுநந்தனவனத்து *
மோசகனைமலமதனைமூத்திரமும்முரணழித்துக் *
கோசமதிற்பிசமதிலயோமயத்தகூறுந்தண்டா *
லோசையுறநமன்றூதர்நருக்கிமிகவொறுப்பாரே *

எ - து - வெளி . அயோமயத்ததண்டு - இருப்புத்தடி (௱எ௫)

அனலொழுகுஞ்சூசிபலவழுத்திடுவரவைதன்னிற் *
கனலொழுகுமயோமயத்ததண்டமதிற்கண்டகமு *
மினனுறவேகுதத்தியற்றிச்சிரத்தின்மிசையெடுவேற்றி *
வினைவழியவவிதொலையத்துயரவிதமிறுத்துவரே *

எ . து . வெளி . கண்டகம் . முள் - இன்னல் துக்கம் ஆதனையினலென்றது இ
டைக்குறை (௱எ௬)

கனலனையகாரவழலவைதன்னிற்கவிழ்த்திடுவே *
ரனலொழுகுதாமிரமுமலமிடவேசொரிவார்க *
ளினையதுயர்மற்றுமுளவிந்திரியத்தியற்றிடுவர் *
வினையவலமவற்றுமும்விதியிகந்துவிளைத்தவர்க்கே *

எ . து . வெளி . மற்றுமுள்ளவிந்திரியம் எ - து . மற்றைய தென்பது . சுட்டிய
தற்கினம்- என்பதனால்வாக்குமுதலியதெனவறிக . (௱எ௭)

மாக்கிடுவர்நாக்கினைடுத்துளைத்தழன்றவயத்தொடரால் *
வீக்கியதிபாரவிருப்புண்டைபலவிடுவாரே *

எ - து வெளி - கிருமி - புழு - அயத்துண்டக்காக்கை - இருப்புமூக்கையுடையகாக்கை - அயத்தொடர் - இருப்புச்சங்கிலி - வீக்குதல் - கட்டுதல் ௱௮௧

கட்டிடுவர்பீசத்துங்கோசத்துங்காடியதொடர் *
விட்டதனைநான்றிடவேவியனிருப்புக்கட்டியினைக் *
கட்டிடுவரதன்முடிவிற்கரத்துமிவற்றிரட்டிரட்டி *
கிட்டிரணாநிதியுதவக்கருதாதநெஞ்சரையே *

எ - து இயமதூதர்கள்திரவியத்தைத்தன்மத்தின்கட் செலுத்தவிசாரியாதநெஞ்சினையுடையகொடியபாவிகளது பீசத்திலுங்கோசத் திலுமிருப்புச்சங்கிலியைக்கட்டிவிட்டதனுனியிலே முற்கூறியவிருப்புண்டைகளிலிருமடங்குகனமுள்ளவிருப்புக்கட்டியைக்கட்டி நாலவிடுவார்கள் அதற்குபின்பு கைகளிலுமிருப்புச்சங்கிலியைப்பூட்டி நான்மடங்குகனமுள்ளவிருப்புக்கட்டியைக்கட்டிவிடுவர்கள் எ - று (௱௮௨)

அரிந்தரிந்தேயவராகந்திலமெனவேயருத்திடுவர் *
சொரிந்திரத்தங்குடித்திடவுஞ்சொல்லிடுவர்சூசியினு *
லெரிந்தொழுகுங்காரவறலிறைத்திடுவர்தாமிரமுருஞ் *
சொரிந்திடுவரழலொழுகுந்தயிலமும்பின்சொரிவாரே *

எ - து இயமதூதராநோரந்தப் பாவிகள்சரீரத்தை எள்ளுப்போலவரிந்ததனைத்தின்னச்சொல்லுவர்கள் அஃதன்றி சூசியினுலுமவர்கள் சரீரத்தைக்குடைந்திரத்தத்தையேற்றுக்குடிக்கச் சொல்லி யந்தப்புண்வாயிலே யக்கினிச்சுவாலைபோன்றகாரங்களையிறைத்துச்செம்பினையுமுருக்கிவிடுவர்கள் அதற்குப்பின்யெண்ணெயினையும்நெருப்புப்போலக்காய்ச்சிவிடுவர்கள் எ - று (௱௮௩)

அதிதூரவழலிடையுமழுத்திடுவரதன்பின்பு *
கொதியாமற்றையநிரயத்துயரனைத்துங்கொடுத்திடுவ *
ருதராங்கிதனைமிகவுமுதிப்பித்தேயொறுத்திடுவ *
ருதகாசையுறத்தபனவழலினையுமூதிப்பிப்பார் *

எ - து இயமதூதர்களாநோர் அந்தப்பாவிகளைமிருந்த ஆழத்தினை யுடைய

வெரிவாய்நரகத்திலுமற்றுள்ளபொங்காநிறசிற நரகங்களிலும்போட்டுத்துக்கங்களெல்லாவற்றையுமுறுவிப்பர்கள் பின்பு அநிதிகள்பசித்திருக்கப்பொசித்திரொன்றவர்களுதரத்திலேமிகவும் பசியையுண்டாக்கித்தண்ணீர்மேலாசையுண்டாக்கும் வண்ணந்தாகத்தையுமுண்டாக்கிவாதைப்படுத்துவர்கள் எ - று

தபனவழல் - தாகம் (௱௮௪)

நரகயாதனைகளையளவிடப்படாதென்று முடித்துணர்த்துகின்றார்

ஒருநிரையத்துயர்பலவோபுகைப்பனவோவுரைத்திடினு *
நிரையவிதமனைத்திலுக்குநிரந்ததுயர்நிச்சயித்து *
வருடமொருசதமுறினுமதித்துரைக்கவலரிலரே *
யருநிரையக்கடற்றுயரப்பெருவெளத்துக்களவுண்டோ *

எ - து இவ்வொருநரகயாதனையைவிசாரிக்குமிடத் தனந்தமாயிருக் குமதனைச்சொல்லப்படுமோ சொல்லுமிடத்து நரகங் களெல்லாவற் றிற்கும் பொருந்தியயாதனையையளவிட்டுநூறுவருடஞ்செல்லினும் அமைத்துச் சொல்லவல்லவர்களில்லையே, ஆதலாலுரைத்தற்கரிதாகியநரகக்கடலிற்றுக்கமாகியபெரு வெள்ளத் துக்கு முடிவுண்டோமுடிவில்லை எ - று (௱௮௫)

நரகயாதனையினதிசயமுரைத்துகின்றார்

வேதத்திலாகமத்தின்விதியிகந்துவிடுத்தார்கள் *
வாதிக்கப்படுவரவற்றனைத்திலுந்தாமரியாரும் *
மேதைக்குன்மாறுரியர்கேட்டவுடன்வீவனெப் *
போதுக்குங்கடுந்துயிற்கொடுவினையார்புகுவாரோ *

எ - று வேதாகமங்களிலேகற்பித்தவழிநடவாததனையிகந்துவிட்டோரிங்ஙனங்கூறிய நரகவிதங்களெல்லாவற்றிலும் யமதூதர்களாலேவாதைபண்ணப்படுவர்கள் அங்ஙனம்வாதைப்படினுஞ் சாகவுஞ்செய்யார் புத்தியினாலேமிகவுங் கூரியராகினுமிந்தயாதனையைக்கேட்டமாத் திரத்திலேதானே சாவரொன்றுவேதாகமங்கள்சொல்லுமாதலாலறக்கொடியதுன்பங்களைச்செய்யாநின் றவனல்லோன் றநரகத்திலேயார்தான்புகுவர் எ று வீதல் - சாகுதல் (௱௮௬)

இயமதூதர்கள்நரகத்திலேகிடந்துவேதனையுறுமான்மாக் களுக்கு
அவர்கள்முன்செய்தபாவங்களையெடுத்துக்கூறியறிவுறுத்துந்திறத்
தைப்பதினொருசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

வித்தகனற்றுணையென்றுமதித்துவிரும்பீரோ *
பொத்தையுடற்பொறைநிற்குமெனப்பொய்புகன்றீரோ *
மொத்துமருற்றதுயக்கமயக்கமொழித்தாரோ *
மித்திரரைப்பரிவுற்றகன்மத்தைவிளைத்தீரோ *

எ - து வெளி-வித்தகன்-சிவன்-உமர்-சுற்றத்தார்-மித்திரர்-இட்டர் [௱௮௭]

யாதனையுண்டுகொலென்றுதுயங்கியிருந்தீரோ *
நாதனுமுண்டுகொலென்றுகயந்துநவின்றீரோ *
யோதனமுண்டுகொலென்றவர்தம்மையொழித்தீரோ *
வேதனைகண்டுவியந்துபயந்துவிழுந்தீரோ *

எ - து வெளி-உண்டுகொலென்பது-உண்டோவென்னுமையம்-துயங்குதல் அறிவுவேறுபாடு-கயத்தல்-தூடணம்-வியப்பு-அதிசயம் (௱௮௮)

கண்டகரோடுகளித்தறநீதிகறுத்தீரோ *
யுண்டொருதெய்வமுமென்றவர்தம்மையுவர்த்தீரோ *
யண்டர்குமாரனையமராமற்றுமறுத்தீரோ *
மண்டவில்லார்மனைபுக்கெளியானைவதைத்தீரோ *

எ - து வெளி - கண்டகர் - துட்டர் - கறுத்தல் - நீக்குதல் - உவர்த்தல் கோபித்தல (௱௮௯)

பஞ்சகபாதகமன்றெளிதென்றுபயின்றீரோ *
நஞ்சனவெஞ்சொலைநற்றவரோடுநவின்றீரோ *
வஞ்சகநெஞ்சகமாதர்களிப்புமதித்தீரோ *
யஞ்சனவேல்விழியார்குறுகற்புமழித்தீரோ *

எ - து வெளி (௱௯௰)

ஓரவழக்கினைமன்றிலிருந்துரைத்தீரோ *
யாரொடுமொன்றுமையேமிகமேன்மையறைந்தீரோ *
பாவனவேபொறையானையுநொய்மைபகர்ந்தீரோ *
கோனவேபிணியாளையும்வெல்லநினைந்தீரோ *

எ - று வெளி - நீரொணவேயினியார் - தண்ணீர்போலவிளிவுசெய்யாநின்ற சாத்துவிதகுணத்தையுடையவர்கள். [௱௯௧]

உற்றவிடுக்கணொழித்தவர்தம்மையுமோரீரோ
மற்றவர்காணியுமெம்மதுவென்னமறித்தீரோ
சிற்றினமேயினமென்றுதெளிந்துசெறிந்தீரோ
மற்றினமொன்றிடினன்புமறுத்துமருண்டீரோ

எ - று வெளி - சிற்றினம் - அற்பர் - மற்றினம் - பெரியோர் [௱௯௨]

ஆதுலருற்றிடினேசமவர்க்குமறுத்தீரோ
வாதவிரோதிகள்வந்துறினிசையவைத்தீரோ
யேதிலர்குற்றமெடுத்தீர்பாமமிசைத்தீரோ
சூதுபொருந்தொழினன்றெனவஞ்சமுதுவிநந்தீரோ

எ - று வெளி - ஆதுலர் - மிடியர் - ஏதிலர்-சுற்றமில்லாதவர்கள் [௱௯௩]

ஊழியொக்குமெனுதுயிர்மெய்யையொறுத்தீரோ
வேறலவெம்முடலோடுமெனுதுமிசைந்தீரோ
பேறுணவல்லதுயில்லையெனக்கையமைத்தீரோ
சீறுதலேபொருளென்றுயிரன்புசெகுத்தீரோ

எ - று நம்முடையதேசத்திலேபுண்யதில்சோமாறுபோலவல்லவோவவர்க்கு மென்றுவிசாரியாமற்பிறிதுயிருடல்களைக்கொன்றீரோ, நம்முடையசரீரமுமவருடையசரீரமும்பேதமல்லவென்றெண்ணுதலைவிரும்பித்தின்றீரோ, யிங்ஙனம்பொசிப்பதேபரமமானபேறல்லாமல்வேறில்லையென்றுதன்மனத்தியைவிட்டீரோ, கோபமேமேலானதென்றுசீவன்மாக்களிடத்துக்கிருபையையாதுவிட்டீரோ எ - று
மிசைதல் - பொசித்தல். [௱௯௪]

ஈயுமவர்க்கிடையூறுகடேறவிசைத்தீரோ
காயுமவர்க்கனுபந்தருமாயுள்களித்தீரோ
நோயுமுறப்பிறர்தீமையுடற்குதுவன்றீரோ
தாயரியற்றியிடாவலவெப்பலசொன்னீரோ

எ - று ஒருவர்க்கொருவரொன்றையுகந்துகொடுக்குமிடத்தவர்கண்மன

பேதிக்கவிக்கினங்களைச்சொன்னீரோ, யொருவனையொருவன் கோபிக்கும்போது அவனைத்தடாமலதற்குடன்பட்டுச்சந்தோஷத்தையடைந்திரோ, பிறர்சரீரத்துக்குவருத்தமுறப்பொல்லாப்புகளையேசொன்னீரோ, சுத்தான்மாக்களானோர்செய்யாத பொல்லாப்பைச்செய்தாரென்றுபலவாகச்சொன்னீரோ - எ - று -
அனுபந்தர்வடமொழி. (௱௬௫)

ஒழுக்குடையாரதிமேதையர்தம்மையுமோராதே *
புழுக்கமழுக்குமனத்துறவெம்மைபுகன்றீரோ *
சழக்கெழுவாய்வினைவாதனைபுற்றமைதன்றாலே *
யழற்குழியாங்களழுத்தவழுங்கியழிந்தீரோ (௱௬௬)

என்றழல்வாயழிவாரொடுதூதரிசைப்பார்க *
ளன்றறியோமிவையென்றவர்தாழுமயர்ந்தாழ்வர் *
பொன்றுவரோவினைபோமளவுந்துயர்பூரித்தே *
நின்றுறுவார்முனைவலவினையாவுநினைந்தேதாம் *

என்பன ஒழுக்கமுடையோரையுமிகுந்தவறிவுடையோரையுமவர்கள் மகிமையை விசாரியாமல் உம்முடைய பொல்லாமனத்தின் கட்கமறுதலைப் பொருந்திக கொடுமைகளைச்சொன்னீரோ,நீங்கண்மனக்கோணல்முதலியவற்றாலியற்றியபாவத்தினதுவாதனையாலே யழற்குழியாகிய விந்தநரகங்களிலே யாங்கள்வீழ்த்தவிப்பொழுது வீழ்ந்திறந்தீரோ வென்றிங்ஙனங்கூறிய பலவற்றையுமழல்வாய்த்நரகத்திலழிவாரொடியமதூதர்கள்சொல்லுவர்கள் அந்தப்பாவிகளுமன்றிதனையறிந்தோமில்லையென்று சோர்ந்துவிழுவர்களிங்ஙனம்வேதனைப் படுகையினுமுயிர் விடுவரோ வுயிர்விடுவதுஞ்செய்யார்பின்பு தாஞ்செய்தபாவந்தொலையுமளவுந்துக்கத்தையே நிறையப்பொருந்தி முன் தாஞ்செய்த கொடுவினைகளெல்லாந்தம்மனத்தின்கணினைத்தந்நரகங்களிற்கிடந்துதுயருறுவர்கள் எ - று (௱௬௭)

அதிபாதகமுதலியபாதகத்தைச்செய்தோரனுபவிக்குங்கால
மூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

உற்றிடுவொழுநான்குகோடியினுமொருவாதே *
பற்றியதிபாதகத்தைப்புரித்தார்கள்பாரினையு *

துதலேசாந்திராயணவிரதமாகும், பதத்துணவுநீருணவு மின்றிப்பன்னிரு நாட்பட்டினியேபராகமிளிப்பிராசாபத்தியந்தா, ஜுகித்தபகன்மூன்றாண்ம ற்றயாசகபு மொருமூன்றெருமூன்றுநிசியுண்புப்பகலனிலனுணலாம் ❋

எ-து. பூருவபக்கத்துப் பிரதமைமுதலாகப் பதினைந்துநாளுஞ்செலத்தைவல துகையாலேயொவ்வொருசிறங்கையாக நாடோறுமேற்றியேற்றிப்பொசித்து அப ரபக்கத்துப்பிரதமைமுதலுடோறுமொவ்வொருசி றங்கையாகக்குறைத்துட்பன ம்பண்ணிமுடிக்கிறது செலசாந்திராயணவிரதமெனவறிக உதகோதனமென்னுமி ரண்டினையும்பொசியாமற் பன்னிரண்டுநாட் சுத்தப்பட்டினியே யிருக்கை பராக மென்னுங்கிருச்சரமாம், ஆசித்தியனுதியாநின்றபகலிலே மூன்றுநாண்மத்தியான மொருநேரம்பொசித்தலு மதற்கடுத்த மூன்றுநாளொன்றுந்தொடாமல் அயாசக மாய்வந்ததைப்பொசித்தலுமூன்றுநாளிராத்திரியொருநேரம்பொசித்தலு மூன்று நாள்வாயுவேயாகாரமாகப்பொசித்தலுமாகப் பன்னிரண்டுநாளுமடைவேதொடரு த்தல்பிராசாபத்தியமென்னுங்கிருச்சரமாம். எ-று. (௨௪)

இதுவுமது.

அருந்துகவாரபு ற்றேயமொரு மூன்றுபகலுளபு னிகவுமாலின்பாலரு ந்துகபுப்பகலு, ளருந்திடுகவுமனிகவுமானெய்புப்பகலுளருந்தாதேயா தேனுமாகபகன்மூன்றுள், வருந்துதலிம்முறைதன்னின்முன்னுன்குநிரை முமநித்திடுகதத்தகிருச்சரமென்றேமதியோ, ரருந்துதன்முப்பலப்பான் மூவைந்தாறுநிரைமுமந்தபனமரவென்றேயுப்பகரிசறுப்பார். ❋

எ-து தாஞ்செய்தபாவத்தைப்போக்கவேணுமென்றறிந்தவர்,வெந்நீரைமூன்று பகலுஞ்சுடுகிறபசுவின்பாலைமூன்றுபகலுஞ்சுடுகிறபசுவினெய்யைமூன்றுபகலுமரு ந்துக வொன்றும்பொசியாமல்மூன்றுநாளுமிருக்க,இப்படியேவருத்தமுற்றுப்பன்னிர ண்டுநாளிருப்பது தத்தகிருச்சரமெனவறிகஇருபத்தொருநாண்மூன்றுபலப்பசுவின் பாலைப்பொசிக்கிறதுஅதிதபனமென்னுங்கிருச்சரத்தின்முறைமையென்றறிக எ-று

வியாதிமுதலியவற்றாலிவ்விரதனுட்டித்தற்குஅசத்தராயிற்பிராசாபத்தியத்துக்கொ ருபசுவுஞ்சாந்தபனத்துக்கதிவிரட்டியுமதிகிருச்சரம்பராகந் தத்தகிருச்சரமிதற் கும்மூன்றுபசுவுஞ்சாந்திராயணத்துக்கெட்டுப் பசுவுங்கொடுக்க, தரித்திரனுக்கி லதற்குமூன்றுபசுக்கொடுக்க, பசுக்கொடுக்கமாட்டாதார்கோமூலியம் பன்னிரண் டுபணங்கொடுக்க, இம்முறையேகொடுக்கிலந்தந்தவிரதமனுட்டித்தபலத்தைக்கொ டுக்குமெனவறிக. (௨௫)

## திருவிழாமுதலியவற்றிற்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

தேவனது திருவிழவற் சேவிக்கயாருந் திரண்டதிருவீதியிற்றீண் டார்தீண்டிடினும், பாவமில்லைப்பரமேசன்பதிவணங்கச்செல்லும்பரிசினுமா மகந்தனினும்பணிமொழிதன்பாணி, மேவியிடும்விவாகத்தும்வெண்பொடி ப்பூசிடுக விரிபுனலின்மூழ்கிடுக மற்றையன வேலைப், பாவியரைப்பார்த்தா னேலகோரசதாட்டகத்தைப்பகர்ந்திடுகபரிசித்தான்பகர்கபுனல்படிந்தே. ※

எ-து. சிவனது திருவிழாவிற்றிருவீதியின்கணன்மாக்களை நெருங்கிச் சேவை செய்யுமிடத்துத் தன்சாதியாயினும் பிறசாதியாயினுந்தீண்டில்அக்காலம் பரிசன தோடமில்லை சிவஸ்தலதரிசனத்துக்குப்போகுங்காலத்தும்அக்கினிட்டோமமுதலி யயாகத்தின்கண்ணும் பார்ப்பார்முதலாயினோர் விவாகஞ்செய்யுங்காலத்துந்தீண்ட அருகரல்லாதோர்தீண்டினக்குற்றம்போம்படிக்கு விபூதியுத்தூளனம்பண்ணுக, இ ங்ஙனங்கூறியகாலங்களின்றியொழிந்தகாலங்களிற்பரிசனமாகிற்றடாகமுதலிய வற்றின்மூழ்கிற்குற்றம்போம், அதிபாதகமுதலிய பாவங்களைச்செய்த பாவிகளைப் பார்த்தானாகிலகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்க, அவர்களைத் தீண்டினானாகின்மு ழுகியகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்க. எ-று. (உ-கூ)

## அதிபாதகாதியரன்னமருந்திற்குற்றமுணர்த் துகின்றார்.

அருந்தினரேலக்கணமேபதிதரெனவறிகவதிபாதகாதமரர்ப்பழிப்பா ரன்ன, மருந்தினரேலொருமாதமுறப்பதிதராவரபவாதர்பிசினர்பிறையற்று ளொன்றிவர்சேர், றருந்தினரேல்வருடமுறப்பதிதரெனவறிகவஞ்சாசகுத் திரர்கரிசுக்கழியில்லாவவரையர், பொருந்துமணம்புணர்நாண்முன்புரிவார் புல்லறிவரொனுமிவர்தமன்னத்தைப்புசித்தார்கடாமும். ※

எ-து சிவநிந்தைபண்ணினவர்களன்னத்தைப்பொசித்தவர்களந்நேரமேபதிதரா வர்கள்தேவர்களைத்தூடணஞ்சொன்னவர்களன்னத்தையொருமாதமிடையறாது பொசித்தவருமந்நேரமேபதிதராவர்கள், ஒருவர்சொல்லாத வார்த்தையைச்சொ ன்னோனொன்றுபடித்தூறாகச்சொன்னவர்களன்னமும்பிராசகரத்துடனேகோட்சொல் லுதிறவரன்னமுமலடியன்னமுமொருவருடமிடையறாதுபொசித்தார்களாகிலவ ர்கள்பதிதரெனவறிக, பாவத்துக்குப்பயப்படாதசூத்திருடைமையுமான்மாக்க ளிடத்திலிரக்கமில்லாதவிராசாக்களுடைமையும்விவாகம்பண்ணுவதற்குமுன்

ளுகப்பிராமணர்மாயேசுரர்க்கென்றுதெத்தம்பண்ணினஉடைமையையுமுயர்ந்தசாதியாயினுமிழிந்தசாதியாயினுமற்பராயதியில்லாதவர்களாயினவர்களுடைமையையும் ஒருவருடம்படையாமற்றுபொசித்தவர்களும்பதிதராவர்கள். எ - று (உஎ)

இதுவுமது.

கன்னிகையைவிற்பார்கள்பரதாரந்தன்னைக்காமுறுவார்மனைவிகுறைகண்டறிந்துந்துறவார், பொன்வினைசெய்கொல்லர்மரக்கொல்லர்பொருட்பெண்டிர்புலைவினைஞர்மதுவினைஞர்புரந்தாரைமறந்தார், தென்னனவேபாடுமவராடுமவர்வாளாற்சேவிப்பார் பூவிற்பார்செக்கார்சொக்கிநிவா, மொன்னுமிவரொழுவாயரன்றாகியருந்தேவிழுக்கானவனமுளத்தையழுக்காக்கிவிடுமே. ✻

எ - து உத்தமமாகியபிரமமுதலியவற்றிலொன்றாற் கன்னிகையைத்தானஞ்செய்யாமற்பணம்வாங்கிவாழ்க்கைப்படுத்துமவரும் பரதாரங்களையிச்சிக்குமவருமனைவிபிறர்முகம்பார்க்கவவளைநீக்காதுவாஞ்சித்துக்கூடுமவரும் பொன்முதலியபஞ்சலோகங்களைப்பணிபண்ணுந்தட்டார்தச்சர்முதலாயினாரும் பரத்தையரும் ஆட்டுவாணியருங்கள்வாணியருஞ்செய்ந்நன்றிகொன்றினவரும்பலரையுமழகாகப் பாடித்திரிகிறவருங்கழைக்கூத்தாடியரும் வாளாற்சேவகஞ்செய்கிறவருநந்தவனத்துப்பூவையெடுத்துமுடிபூவுக்குவிற்கும்பூவாணியருமெண்ணெய்வாணியருநித்திரையிற்சொக்குப்பொடிபோட்டுக்களவுசெய்பவருமாகியவிவர்கள்முதலாயினாரன்னமுதலியவற்றைவாங்கியொருக்காலும்பொசிக்கக்கடவனல்லஇவர்களன்னங்குற்றமுள்ளவாதலாலதனைப்பொசித்த வான்மாக்களுக்குச்சித்தசுத்தியைப்பண்ணாமற்பாவத்தையுண்டாக்கும். எ - று எழுவாயர் - எ - து - கண்ணார் - கொல்லர் - வண்ணார் - குருநிந்தனைசெய்வோர் - பாஷாண்டிமுதலாயினோரெனவறிக. (உஅ)

அதற்கோர்புறனடையுணர்த்துகின்றார்.

அழுக்குளமேபாவத்தையாக்குதற்குத்துணியுமவ்வினையானிரையத்தினழுங்கியழுந்துவரே, யிழுக்கானமொழித்தவரோயிச்சிப்பார்சுகிர்தமேறிடுவர்பரலோகமின்புறவேயிருப்பர், வழுக்காயமொழிக்கமணில்வந்துதவம்புரிந்துமறந்திடுவர்பிறப்பினையுஞ்சிறந்திருப்பர்சிவன்றாள், சழக்கானமனத்தாரோசடலத்தைப்பேணித்தமக்குவருந்துயரத்தைச்சாற்றினுந்தாங்கேளார். ✻

எ - து அந்தஅழுக்கானவுள்ளமேயான்மாக்களுக்குச்சித்தசுத்திபிறவாமற் பாவத்தைச்செய்தற்கொருமைப்பாட்டினைக் கொடுக்குமதனாலேபாவத்தையே செய்துநரகத்திற்போடவருந்துநோயவர்கள், ஆதலாற்பொல்லாதென்றவவர்கள ன்னத்தையொருக்காலும் புசியாமற்றள்ளினார்களாநல்வினைப்பயனையடைய க்கருதுமவர், அதனாலேசுவர்க்கமுதலியவுலகங்களையடைந்தாண்டுள்ள போகங் களைப்புசித்திருப்பர்கள், குற்றத்தையுடையசரீரத்தைமேலெடாதபடிக்குப்பூ மியின்கண்ணேவந்தரியதவசுகளையுஞ் சிவபூசைகளையும்பண்ணியதனாலே யொ ருகாலுஞ்செனனமெடார்களாதலாற்சிவனது திருவடிநிழலின்கீழே சிவானந்தா னுபூதியை யனுபவித்துக்கொண்டிருப்பர்கள, மனக்கோணலுடையபொல்லாத வர்களிம்மையின்கட்சரீரத்தையே போற்றிப்பொல்லாதவர்களன்னத்தைப்புசி த்ததனாலே மறுமையின்கண்ணரகத்திலேவிழுந்தழுந் துமுறைமைகளைநூல்களினு லேபலகாற்சொல்லினுமதனைக்கேளார்கள். எ - று பிறப்பினையுமென்றவு ம்மையான் - மரணத்தையுமுறுர்கள். (௨௧)

விவாகமுதலியவற்றிற்புசிக்கிற்பரிகார முணர்த்துகின்றார்

அருந்தினனேல்விவாகத்தி லகோரசதமஷ்டைகவாபிரப்யுச்சரிந்திடுகநா
லாநாளருந்தி, னருந்தினன்சீமந்தத்துமாயிரமுச்சரிக்க வவ்வளவே நாமகர
ணைத்தருந்தினனு, மருந்தினனேலன்னத்தையருந்திடுநாளு மவ்வளவேயு
ச்சரிக்கவறைந்திடுசவபுத, மருந்தினனேற்சிராத்தத்திற்சபிண்டிதனிலருந்
திலாயிரமப்பாலருந்திலறைகவொருநூறே.

எ - று. ஒருவன்விவாகத்திலஞாதியல்லாதார்புசிக்கிலகோரநூறுருச்செபிக்க, நாலாநீர்ச்சடங்கினுஞ் சீமந்தக்கலியாணத்தினும் நாமகரணகாலத்தினும் ஊட்டுக்கலியாணத்தினும்புசித்தானாகி லகோர மாயிரமுருச்செபிக்க, ஏகோதிட்டத்திற்புசித்தானாகி லகோரம் பதினாயிரமுருச்செபிக்க, சபிண்டிகரணத்திற்புசித்தானாகிலகோரமாயிரமுருச்செபிக்க, வருடந்தோறுஞ்செய்யுந்திவசத்திற்புசிக்கிலகோரநூறுருச்செபிக்க. எ - று.

வந்ததுகொண்டுவாராதது முடித்தலென்னுந் தந்திரவுத்தியால் திரையிபக்ஷகம். ஊனமாசிகம். ஊனஷாண்மாசிகம். ஊனாப்திகம் இவைகளிற் புசித்தானாகிலகோரமொவ்வொன்றுக்காயிர முருச்செபிக்க, பும்சவனத்துக்கு நூறுருச்செபிக்க வெனவறிக. [௩௰]

இதுவுமது

அறிவழிந்துவீரியத்தையவலமலசலத்தை யருந்தினனுமதோசாதியகத்தினருந்தினனு, மெறிவிழிப்பட்டிரங்கிமனம் புலைச்சியிணைத்தோளிணைங்கவெனுமிழுதைபுமென்றியம்பியவெல்லோரு, மறிவுறவேயகோரத்தையபுத புறவறைந்தேயருந்துகவானேந்தினையுமமலனணிமுடியிற், செறிவுறவே திளைத்தாட்டியுப்பொழுதும்பூசை சிறப்புறவேசெய்விக்கவவ்வினைகடீரும்.

எ-து. சித்தோன்மத்தத்தினாலேயறிவழிந்துயிந்திரிய முதலியவற்றைப்பொசித்தவனுந்தான் பொசித்தற்கருகமல்லாத வீனசாதிகள் வீட்டிற்பொசித்தவனும்வெருவுதலையுடையவிகாரப்பார்வையினாலேமன திரங்கியந்தப் புலைச்சியைத்தீண்டக்கருதுமறிவிலனுமாகியவிம்மூவரு மிப்படிசெய்தோமென்றிரங்கியகோரத்தைப்பதினாயிரமுருச்செபித்துமூன்றுசாலமுஞ்சிவனுக்கு விசேடபூசையாகப் பூசிப்பித்துக் கௌவியத்தையாட்டியதனைப்பொசித்திருக்கிலக்குற்றம்போம். எ-று. திளைத்தல் பலகாற்செய்தல் (௩௧)

கனகமுதலியபாத்திரங்களினதுசுத்தியிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அருங்கனகபாத்திரமுன்மரப்பலகையீறாகமழனீராற்சுத்தியுறுமருவருப்புண்டாகிற், பொருந்திடும்புளிதங்கோசலத்தான்மண்ணீராற்பொருகரியின்மருப்புவளைசுத்திமுதற்புளித, மரிந்துகடைந்திடவுரியாணீரானேடோறுமாமபுளிதங்கோமயத்தாமறலாணுமாகு, மெரிந்தபுனன்மண்ணிவற்றானிலங்கிடுமவலமெய்திடிற்புளிநீராற்றுமிரந்தானிலங்கும் ※

எ-து பொன்முதலியபஞ்சலோகங்களினாற்பண்ணப்பட்ட பாத்திரங்களுந்தாருவினாற்பண்ணப்பட்ட சுருக்குச்சுருவமுதலானதும்வெந்நீராற்கழுவிற்சுத்தி, மகளிர்சூதகமுதலியவருவருப்புற்றால் வெள்ளிமுதலியபாத்திரங்கோசலத்தாலுமூவர்நீராலுஞ்சுத்தி, போரிற்பொரப்படாநின்றயானைக்கோடு-சங்கு, முத்துச்சிப்பியிவையரிந்துகடைந்திடின்முதற்சுத்தி, நித்தியசுத்தியுமிக்காந்தலாற்றன் அவைகளிலசுசியுறிற்கோமயத்தாலுநதண்ணீராலும்வெந்நீராலும்புற்றுமண்ணாலுஞ்சுத்திசெய்க, செம்பிலசுசியுண்டாகிற்புளிநீராற்சுத்தியுறும் எ-று

அவலம் - என்பதனையிருபாலுங்கூட்டுக, உரையிற்கோடலென்னுமுத்தியாற்பொன்மஞ்சட்பொடியாலும்வெள்ளியுப்புத்தடவிக்காச்சலாலுஞ்சுத்தியென்க (௩௨)

வெண்பொடியாற்றண்புனலால்வெண்கலமுன்விளங்கும்வெதுப்பிய
நெய்தடவியழலமூத்திபிடவிளங்கும், திண்கலசவெண்கலமுன்றீண்டியபி
டிற்காகஞ்சிறப்புடையகௌசிகமும்பெருங்கடுகுசெறிந்த, தண்புனலாற்
குதபாதிபரிட்டத்தைக்கலந்ததண்ணீரால்சிறிதடங்கினாநீர்தன்றன், ம
ண்பயிலக்கோசலமும்வாரியும்வார்த்திடினேமலினமுறினசினத்தீற்புனிதமி
கவாய்க்கும். *

எ - து வெண்கலபாத்திரமுதலானவைவெண்ணீற்றாலுஞ்சலத்தினாலுஞ்சு
த்தி, யவற்றைக்காக்கைதீண்டிற் பசுவின்வெண்ணெயுருக்கித்தடவியழலிற்காய்ச்
சிற்சுத்திசிறப்பினையுடையபட்டாடைகள்வெண்கடுகுகூடினநீராற்சுத்தி,தருப்பை
முதலாயினமோர்சேர்ந்தசலத்தாற்சுத்தி, புலித்தோன்முதலான வைடேரியமுள
ங்களிற்றேய்த்தெடுக்கிற்சுத்தி, தோன்முதலியவற்றிலசுசிபடிற்புற்றுமண்ணாலு
நதண்ணீராலுங்கோசலத்தாலுங்கழுவிற்சுத்தியாம் எ - று கவுசிகமென்ற
வும்மையால்வெண்பட்டுமல்லிலுண்டானசெம்மறியாட்டுக்கம்பளமுங்கவரிமாம
யிருமுதலாயின பூவம்பழத்துடன்கூடினநீராற்சுத்தி. அசிறுதியெனறதனான்மர
வுரியுமூங்கிலாற்செய்தனவுமெனவறிக (௩௩)

அன்னசுத்தியுரைக்கின்றார்

பாண்டத்திற்பதமதனைப்பற்றிடினேவாயாற்பன்றிகரநாய்பூனைகாகமி
வற்றொன்று, வேண்டற்கபாண்டத்தோடன்னத்தைவிடுகம்க்கவிராசியினே
கதேசத்தின்விரவிற், கிண்டெற்றிச்சேடத்திற்றிருநீறு கொழமிக்கெவ்வியத்
தூம்புரோக்கிக்கவுண்கலத்திற்கொழுமின், மாண்டற்றமசகாதியுறும்புறத்தை
மாற்றிமற்றையபாற்றிருநீறுமருவுதலின்வரமே. *

எ - து. பன்றி. கழுதை. நாய். பூனை. காகம். இவற்றொன்று பாண்டச்சோற்றி
ல்வாயிடிலதனைப்பாண்டத்துடனேபுறம்பேயெடுத்துப்போடுக, பாவாடையிற்சொ
ரிந்திருக்கிறமிகுந்தவன்னத்திலொருபுறத்திற்பன்றிமுதலியவாயிட்டுதாகிலவ்வாய
ளவுமெடுத்துப்புறம்பேபோட்டுநின்றவன்னத்தைத்திருநீற்றாலும்பஞ்சகௌவியத்
தாலுஞ்சுத்திசெய்க, அசனஞ்செய்கையி லுண்கலத்துக்கொசுகுமுதலாயினவிழுந்
துசெத்ததாகிலவ்வளவுமெடுத்துப்புறம்பேபோட்டுக்கையைக்கழுவிக்கொண்டுசே
டித்தவன்னத்தைத்திருநீற்றாற்புரோக்கித்துச்சுத்தி செய்யிற்பொசித்தற்குச்சிறப்
பாம் - எ - று

உரையிற்கோடலென்னுமுத்தியாற்பூனை-கிரி-பெருச்சாளி- முதலாயினவன்னமுன்

ளபாண்டத்தில்வாயிடிலபபாண்டத்தையேழுதரமந்திரமந்திரத்தாற்கழுவிப்பின்பு தருப்பையாற்பரியக்கினிகரணஞ்செய்யிறசுத்தியாம்,அன்னமில்லாதபாண்டமாயி னதற்கதற்கேற்றசுத்திசெய்க. (௩௪

தேன்முதலானவைக்குச்சுத்தியுணர்த்துகின்றார்.

தேன்வடித்துச்செந்தழலிற்செறிக்கவுறும்புனிதந்தெண்ணீரிற்செறி த்துப்புக்காய்ச்சியிடச்சிறக்கு, மான்வெண்ணெயாமபுனிதமழலின்வெது ட்பிடலுமறலெண்ணெயாதியருக்கியத்தானைம்புனிதங், கான்மலிந்தகற்பூ ரங்குங்குமங்கத்தூரிகமழ்சாந்துபுழுகுசவாதெனுமிவைபுங்கமழு, மான் பாலும்புனிதங்கன்றருந்தியபின்முலைபுங்கழுவியறலாற்கரக்கேவெதுப்புத லுமழலின். *

எ - து தேனைவத்திரத்தால்வடித்துக்காய்ச்சிற்சுத்தி, யுப்பைத்தண்ணீர்வா ர்த்துக்கழுவிக்காய்ச்சிற்சுத்தி,பசுவின்வெண்ணெயையுருக்கிவடிக்கிற்சுத்தி, திரு மஞ்சனமுஞ்நல்லெண்ணெமுதலாயினவுமணம்பொருந்தியகற்பூரமுதலாயினசுக ந்ததிரவியங்களுமருக்கியபுரோக்கணத்தாற்சுத்தி, கன்றூட்டியாவின் முலையையுங் கழுவிப்பாலைக்கறந்துகாய்ச்சிற்சுத்தியாம். எ - று ஆகியென்றது குற்றிரணைகாட் டமுதலாயினவுமுலைபுமென்றவும்மைபாற்கைகளையுமெனவறிக. (௩௫)

இலிங்கசுத்திமுதலியவற்றைபுணர்த்துகின்றார்

தெண்ணீராற்கோசலத்தாற்றிருநீற்றான் மயத்தாற் சிறந்ததிலப்பூற்றும றைச்சிவலிங்கஞ்சுத்தி, விண்ணிவந்தவில்வத்தின்பத்திரத்தின் சாற்றான் மி சேடித்தசுத்திநிவேதனம்பொன்மாதி, புண்ணியவர்க்கியசலத்தைப்புரோக்கிக் கப்புனிதம்பொருவரியபரமசிவன்பூரணத்தைப்புரிபி, னெண்ணவலார்க்கு யிராச்சுத்தியேனையதத்துவத்துமியைந்தமுறையமிரிவைகளுஞ் சுத்திசெ ய்தும். *

எ - து கோசலங்கோமயம் திருநீறு சுத்ததலத்துப்புற்றுமண்குளிர்ந்ததிரு மஞ்சனமிவைகளாற் சிவலிங்கஞ்சுத்தி, யிதுசாமானியசுத்தி யாகாசவளவாகவள ர்ந்தவில்வப்பத்திரத்தின்சாற்றினாலே சிவலிங்கத்தையபிடேகஞ்செய்யிற் பிராயச் சித்தத்திலதற்குவிசேடசுத்தியாம், சிவனுக்குநிவேதனம்பண்ணச்சமைத்தஅன்னு தி, யருக்கியசலத்தினாற்புரோக்கிக்கிற்சுத்தியாம், ஞாதாக்களானவர்கள் ஒப்பில் லாதபரமேசுரன் றூன்மாக்களிடத்தில் வியாபித்திருந்தமுறைமையை யுள்ளபடிய

றியினவர்களுக்குயிர்ச்சுத்தியாம் சாதிமுதன்மண்ணீறாறதத்துவங்களிலேசிவன்வி யாபித்திருக்குமுறைமையெண்ணியுள்ளபடியறிவிற்றத்துவசுத்தியாம் எ - று (௬௪)

நித்தியானுட்டானப் பூசைதவறிற் பரிகாரமுணர்த்துகின்றார்.

சாற்றிடுகதவறிடினோர்சந்தியசாதத்தைச்சதமும்வேசதுர்த்தியெனுஞ் சந்திநிலைதவறி, னேற்றியொருநாற்குணிதமியம்பிடுகதவறினெழிற்பூசை யகோரத்தையெண்ணுகவாயிரத்திற், போற்றியுடன்பூசையினைப்புரிந்தி டுகவிரிந்தான்புகன்றிடுகவிருகுணிதம்புசிப்பொழிகவழலி, னேற்றியவி யியற்றிடுகவன்றேனுந்தவறினிந்தமுறையறிந்தியற்றப்பூசனைவாய்த்திடு மே.

எ - து முதற்காலம் அபுத்திபூருவமாகச்சந்தியாவந்தனம் பண்ணுதொழி யினக்குற்றம்போம்படிச்சத்தியோசாதத்தை நூறுருச்செபிக்க, நாலாஞ்சந்திதவ றில் அம்மந்திர நானூறுருச்செபிக்க, புத்திபூருவமாகி லிருமடங்குசெபிக்க, ஒ ருகாலஞ்சிவபூசையையபுத்திபூருவமாகச் செய்யாதொழியிலகோரத்தையாயிர முருச்செபித்துப்பின்பு சிவபூசைசெய்யிலக்குற்றம்போம், புத்திபூருவமாகவொ ருகாலம்பூசைபண்ணுதொழியினுபவசியாயிருந்து அம்மந்திரத்தை யிரண்டாயிர முருச்செபிக்க, பலநாளும் பூசைதவறிடிலிம்முறையேற்றியேற்றிச் செபஞ்செய து பவசியாயிருந்து அக்கினிகாரியஞ்செய்யிலக்குற்றம்போம் எ - று

ஏற்றியென்னுங் கருத்தாலிரண்டாஞ்சந்திமூன்றாஞ் சந்திதவறில் அபுத்தி பூருவ த்திற் கிருநூறு மூந்நூறும் புத்தி பூருவத்திற்கிரட்டியுஞ்செபிக்க, சமையி புத்தி ரன் - சாதகன் - போதகன் - இந்நால்வர்க்குமந்நாற்சந்தியுமெனவறிக, ஒருநா ண்முதற் பத்துநாளிறுகப் பூசைசெய்யாதிருக்கி லொவ்வொருகாலப் பூசை க்கு மூவாயிர மூவாயிர முருவாக நாடோறுமேற்றிச்செபஞ்செய்க, பத்துநாளைக் குமேற்பதினைந்து நாளளவும் பூசியாதொழியினொன்றுக்கு முப்பதினாயிரமுரு ச்செபித்துக்கல்சத்தாபனமும் பண்ணிப்பிடேகிஞ்செய்தோமமுஞ்செய்யிற் குற்ற ம்போகுமென்வறிக, சத்தியோசாதத்தைச்சாதமென்றதுதலைக்குறை [௬௭]

நித்தியாங்கமாகிய திருப்பவித்திரஞ் சாத்தாதொழியிற் பரிகாரமுணர்த்துகின்றார்.

ஆக்கியரன்றிருமுடியிற்பவித்திரத்தையணிகவா டிமூன்றுமூன்றினு ளேயயர்த்தானேலகோர, வாக்கறைகவிருநியுதமறுத்தானேயனுந்தான்மந் திரிக்கவிருகுணிதமழலைமறந்தானு, நோக்கியயற்றுநாள்கணவின்றிடுக நியுதம்வருடத்தின்மாதத்தின்றெய்தியற்றியகோர, வாக்கறைகவீரயுதநி வேதனத்தைமறந்தான்மற்றவற்றுஞ்சிவகாயத்திரிசதமெண்வாக்கே.

எ - து விதிமுறையேகந்த பவித்திரங்கெங்காவதாரம் கௌரியவதாரங் கங்கணத்திரையம் என்க்கூறியபவித்திரங்களை யுண்டாக்கிவிதிமுறையேயதிவாதன ஞ்செய்து சிவனது திருமுடியிலே பவித்திரஞ்சாத்துவதற்குமுன்னுட் கெந்தபவி த்திரஞ்சாத்துக-ஆடி - ஆவணி - புரட்டாதி யிம்மூன்றுமாதத்தினுள் அதிகமாதம ல்லனமாதம்விட்டுணுசயன்முதலியகாலங் களைநீக்கிச்சாத்துக அபுத்திபூருவமாகச் சாத்தாதொழியினுபவசியாயகோரத்தை யிரண்டுநூறாயிரமுருச்செபிக்க, புத்தி பூருவமாகத்திருப்பவித்திரஞ்சாத்தாதொழியினுபவசியாயதனினிருமடங்குசெபஞ் செய்க, அக்கினிகாரியமொருகாலஞ் செய்யாதொழியினொருகாலம் பூசைதவறி னதுக்குச்சொன்னமுறையேயிதற்குமேற்றிச்செய்க, இந்தமுறையோமஞ்செய் யாநாள்கடோறுங்கணக்கறிந்தம்முறையே யேற்றி யேற்றிச்செய்க, ஒருமாதம க்கினிகாரியஞ்செய்யாதொழியின் நாளொன்றுக்குமுந்நூறு முந்நூறு அகோரம ந்திரத்தை யேற்றிச்செபஞ்செய்க ஒருவருடமக்கினிகாரியஞ்செய்யாதொழியின ம்மந்திரத்தை நூறாயிரமுரு நூறாயிரமுருவேற்றிச்செபஞ்செய்க, சிவனுக்கு நைவேத்தியஞ் செய்யாதொனியினகோரமந்திரத்தை யிருபதினாயிரமுருச்செபிக் க - ஆசாரியர் முதலாயினோர் பவித்திரஞ்சாத்தும்பொழுது அதற்குச் சொன்னவிர தங்கள் -நியமங்கள்அனுட்டியாமற்குறைவுறுமாகிற்சிவகாயத்திரியைநூறுருச்செ பிக்கிலக்குற்றம்போம் எ - று மற்றென்பது வினைமாற்று. [௩௪

இட்டலிங்கத்துக்குப்பரிகாரமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

செந்தழலினபாயத்தாற் சிவலிங்கத்துருவஞ் சிறப்பழியி னழிந்தறிவு தேசிகனைவணங்கி, வந்தவினைநைந்தழிய வுண்டியொழிந்தகோர மந்திரிக்க நியுதமுறமற்றொருலிங்கத்தைத், தந்திடவேதாங்கிடுகசோரரான்மற்றுந்தவ றுறினு முனைத்தமுறை தனைச்செய்கதழல்வந், தந்தவுருவந்தீண்டியும்பழு தின்றுகிலறைந்திடுகமூன்றயுதமுடல்விடல்பொல்லாதே.

எ - து. சிவலிங்கமானது அக்கினியினாலே திருமேனியிற் பூர்வவன்னம்விட்டு வேறுவன்னமாகக் காண்கினுஞ் சிதறிப்போகினு மிப்படிவந்து விட்டதே யென்று மனதிற்றுயரமுற்று ஆசாரியனைவணங்கி யிக்குற்றம்போக்கியருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்து பவசிபாயகோரத்தை நூறாயிரமுருச்செபித்து அவ்வாசாரியனால்வேறொருலிங்கத்தை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டு பூசைசெய்க, கள்வர்முதலாயினோர் சிவலிங்கங்கொண்டு போகிலது வருமோவென்று நாற்பதுநாளு பவசியாயிருந்து பின்பு முற்கூறியபடிபரிகாரஞ்செய்து எழுந்தருளப்பண்ணிக் கொள்க அக்கினியந்தச்சிவலிங்கத்தைத்தீண்டிற் பழுதிலவாயிருக்குமாகிலுபவசியாய்முப்பதினாயிரமுருச்செபிக்கிலக்குற்றம்போம் அப்படிச்செய்யாது பத்தியினாலுடல்விடுவோமென்கைபொல்லாது. எ - று மற்றுமென்றதனால்-வானரம்-காகம் - பருந்து - எலி - முதலாயினவற்றாலபாயம்வரினுமிம்முறைசெய்க (௩௯)

ஊறுபடிற்றிருமேனிபரார்த்தத்துமொழிக்கவுரித்தாகுமற்றொன் றுச
யம்பொழுவாயொழியேற், கூறிடுகெவீரயுகம்பதமேனிகுறுகிற்கடங்கிடினி
ற்றாளிபடிற்கூறுகவோரயுதம், நூறுமிருநூறுமுறநுவல்கவிழல்கடந்தா
ன்பீடத்திற்சாய்ந்திடினுமவ்வளவேநுவல்க, வாம்பிடவபராதமுருண்டிடி
னாயிரமீராயிரம்பின்னும்முருண்டாலப்பாலோரயுதம் *

எ - து மானிடர்தாபித்தபரார்த்தலிங்கத்தக்கினிமுதலியவற்றாலூறுபடின் ஒழிக்க, மற்றையான்மார்த்தலிங்கத்தினுஞ்சுயம்பு முதலியஇலிங்கத்தினுமூறுபடினொழியற்க,சிவலிங்கத்திற்கால்படினுங்கடக்கினுமிருபதினாயிரமுருச்செபிக்க, காலிற்றாள்திருமேனியிற்படிற்பதினாயிரமுருச்செபிக்க, இலிங்கத்தின்சாயைகடக்கினுமெழுந்தருளியிருக்கிறபீடத்திற்சாயினுமகோரத்தைமுந்நூறுருச்செபிக்க, பீடத்திலொருகாலுருண்டாலகோரமாயிரமுருச்செபிக்க, இரண்டுதரமிலிங்கமுருண்டதாயிலிரண்டாயிரமுருச்செபிக்க, இரண்டுதரத்துக்குமேற்பட்டுருண்டுகீழேவீழிற்பதினாயிரமுருச்செபிக்க. எ - று அவ்விலிங்கத்திலேயணையங்குலத்துக்குமேற்பட்டபழுதாயின் அவ்விலிங்கத்தையொழிக்க, பீடத்திலேமூன்றங்குலத்துக்குமேற்பழுதாயினத்தப்பீடத்தையொழிக்க, அந்தலிங்கப்பிரமாணத்தில் வேறொருலிங்கத்தில் முன்புபோலமாண்டமாகத்திருமேனியைச்செ

ம்துபிரதிட்டையையவ்வழியேசெய்க, சுயம்புதைவிகமாரிடங்காணவமிவைகளி ற்பழுதாயினுமக்கினிவாதையினாற்பழுதாயினு மந்தச்சிலையைத்தானே முன்புபோ லேசந்திககலைவைத்துத் திடமுறுதறபொருட்டுச் செம்புமுதலான வற்றாற்பட்டங்க ட்டியதனையேபூசைசெய்க, பீடம்பின்னமாகிற்சீர்ணோத்தாரணவிதியாற்றனையெ டுத்துப்போட்டுப்பெண் சிலையினாலேமுன்புபோலே திருமேனிக் கொண்டுபிரதிட் டைசெய்க [௬௰

ஆதார நிராதாரத்தினால் வருங்குற்றத்துக்குப் பரிகாரமுணர்த்து கின்றார்

அபுதமியம்பாதாரத்தொடுவிழினேசானுக் காதாரமறவிழினேபிரயுத
மறைக, வயுதமிரண்டறைந்திடுகவாய்த்திவலையனுசிலறைந்திடுகமூன்றயுத
மஞ்ஞுகடினேகோழை, நியுதமுறநிகழ்த்துகவாழ்நீர்தன்னிற்படியினின்மாலி
யபபுனவிழ்படிந்திடினுநியுதம், விதிவினைதாளிலேப்புருடமாத்திரத்தின்வீழ
ந்துவிண்டிடினேசிவலிங்கம்பீடம்பிண்டிடினும்

எ-து பெட்டகக்கோயிலுடனே சேமப்பிழைவிழிற்சானுக்குப்பதினாயிர முருச் செபிக்க, ஆதாரமின்றிலிங்கமாத்திரஞ்சேமபபிழையாகிற் சானுக் கிருபதினாயிர முருச்செபிக்க, வாய்த்திவலைசிவலிங்கத்திற்றெறிக்கி லிருபதினாயிரமுருகோழைப டின்முப்பதினாயிரமுருஞ்செபிக்க, பெரியமதிக்களிற்கைதவறிவீழினூறாயிரமுருசெ பித்துமுடித்தவாறேயாசாரியனாலே வேறொருலிங்கத்தையெழுந்தருளப்பண்ணிக் கொள்க. நின்மாலியபாத்திரத்திலேவிழினூறாயிர முருச் செபிக்க, ஒருபுருடப்பிர மாணத்தினின்றுஞ்சேமப்பிழையாய்ச் சிவலிங்கம் பீடமிவைகளிற் பின்னலங்கன மானாலதற்குப்பரிகார மில்லை. எ- று. [௬௧

ஆசாரியர்முதலாயினார்நிழலைக்கடக்கினுநைவேத்தியமாதியிற்றூட ணம்வரினுமதற்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

தேசிகன்றனிழல்கடந்தார்செபிக்கசதத்தினையுந்திருவேடத்தார்நிழலை
க்கடக்கினுஞ்செப்பியவாறுசகலவகோரத்தையந்தணர்தந்நிழலரவினிழல்
விளக்கினிழல்கடந்திடினூறறைக, வீசனதுநிவேதனத்திற்கிருமிமயிரிணங்
கிலிழித்திடுகநிவேதிக்கிலியம்பிடுகவொருநூறு, முசகலவிருநூறணியரிசியுயர்
பிழிவுவிருநூறியையுழக்கெக்காலத்துமாதா.

எ-து. ஆசாரியருடையநிழலைக்கடக்கின்மூன்றுருச்செபிக்க, சாதாகர்புத்திரர்சமையிமுதலியதிருவேடத்தார்நிழலைக்கடக்கினு மப்படியே பார்ப்பார் பசுத்துருவிளக்குஇவைகளினிழலைக்கடக்கினூறுருவகோரத்தைச்செபிக்க, இட்டலிங்கத்துக்குவைத்தநிவேத்தியாதிகளிற் புழு மயிர் முதலானசெந்துக்கள்விழுந்தாலதனைநிவேத்தியம்பண்ணுதொழிக, அஃதன்றிக்கிடக்கின்றதறியாமல் நைவேத்தியம்பண்ணினுலுநூறுருச்செபிக்க, இட்டலிங்கத்துக்கு உத்தமம் இருநாழி மத்திமம்இருநாழிஅதமம்ஐயுழக்குஅமுதுபடியாதலால்அவ்வதமமொருகாலுநைவேத்தியத்துக்காகாது. எ-று.

உத்தமத்திலுத்தமம். இருதூணி. மத்திமந்தூணி அதமங் குறுணி. இருநாழிஐயுழக்குஅமுதுபடிவைக்கிற்பைசாசபோசனமானதா லொருகாலுநைவேத்தியத்துக்காகாதென்றுரைப்பாருமுளர். (௬௨)

இட்டலிங்கத்தைப்பார்ப்பார்முதலாயினர்தீண்டிற் பரிகாரமுணர்த்துகின்றார்

தீக்கையிலா வந்தண ராதியரிட்ட லிங்கந்தீண்டிபிடிற் சிறப்புறவேபூசையினைசெய்தே, நோக்கிமுறையுறநூறு நுவல்க விருநூறு மூந்நூறுநானூறுவாமசமையத்தார், மூர்க்கமொனும் வேடர்முதலோர் தீண்டினபுதமொழிந்திடுகநாய்காகந்தீண்டின்மூவபுத, நாய்க்கடுவான்றீண்டிபிடி னவின்றிடுகநியுதநம்பனுக் குப்பூசையினைசெய் துவிதிநயந்தே.

எ-து. தீக்கையில்லாதபார்ப்பார்முதல்நாலுவன்னத்தார்இலிங்கத்தைத்தீண்டிறபஞ்சகெவ்வியமுதலியவற்றால் விசேடபூசைபண்ணிப்பார்ப்பார்முதல்நால்வர்க்குநூறுநூறுருகவேற்றிச்செபஞ்செய்க, சைவபேதமாகிய மூலதந்திராவதசாத்திரத்தின்வழியனுட்டிக்கும் வாமசமையத்தாருமூர்க்கராகிய வேடர்முதலாயினவிழிகுலத்தாருஞ்சிவலிங்கத்தைத்தீண்டிற் பதினாயிரமுருச்செபிக்க, நாய்முதலானவிருகமுங்காகமுதலானபறவையுந் தீண்டில் முப்பதினாயிரமுருச்செபிக்க, நாய்க்கடுவானிலிங்கத்தைத்தீண்டினூறாயிரமுருச்செபிக்க, இங்ஙனந்தீண்டலாகாதென்றபேர்கள்சிவலிங்கத்தைத்தீண்டில் விசேடபூசையைச்செய்க. எ-று.

உரையிற்கோடலென்பதனாற்சைவசந்தலளிதத்தின் வழியனுட்டிக்குந்தெக்கணசைவர்தீண்டிற் பதினாயிரமுருவும் வாமசமையிதெக்கணசமையி யிவர்களுடனேயேநூறுருவுஞ் செபிக்க, நாய்க்கடுவானென்பதுசண்டாளன்பிராமணியுடனேகூடிப்பிறந்தவன். (௬௩)

செபமாலைமுதலியவற்றிற்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

திருவுருவுக்குறைத்தபரிகாரத்திற்பாதி செபமாலை சிவஞான மெழுவாய்க்குஞ்செய்க, கருதிமிககண்டைக்கும்பாதத்திற் பாதிகைதவறிபபிடேககலசமதுகடுகித், திருமுடியைத்தீண்டிப்பிடினீரயுதஞ்செபிக்கத்திண்ணியவர்க்கியம்வீழிற்சிதைபினுருண்டிடினு,மிருசதமாயிரமைஞ்ஞூறியம்புகநாய்க்கடுவான்றெரிசிக்கிலைந்தயுதமியல்விதிசெய்திறைக்கே

எ - து சிவலிங்கத்துக்குக்கூறிய பரிகாரத்திற் பாதிசெபமாலை சிவாகமமுதலிய விவைகளிற்கால்படினும் விழினும்பரிகாரஞ்செய்க சிவலிங்கத்துக்குச்சொன்னதிலெட்டிலொன்றுமணிமுதலிய வுபகரணங்களிற் கால்படிற் பரிகாரஞ்செய்க அபிடேககலசங்கைநழுவித்திருமுடியிற்படிலிருபதினாயிரமுருச்செபிக்க சாமானியமாகப்படிற்பதினாயிரமுருசெபிக்க அருக்கியசெலந்தாபித்திருக்கையிலதுவீழிலிருநூறுருச்செபிக்க அஃதுடையினாயிரமுருசெபிக்க அப்பாத்திரமுருண்டதாகிலைஞ்ஞூறுருச்செபிக்க நாய்க்கடுவான் இலிங்கத்தைத்தெரிசிக்கிலைம்பதினாயிரமுருச்செபிக்க ஆகமத்திற்சொன்னபடிசிவலிங்கத்துக்குப்பூசைசெய்தென்றவாறு

எழுவாயென்றதனால்வேதமிருதிபுராணமாதிகளெனவறிக (௪௪

சிவலிங்கமுதலியவிற்பார்க்குப்பரிகாரமில்லையென விரண்டுசெய்யுளானுணர்த்துகின்றார்

சிவலிங்கம் விற்பார்கள் சிவஞானந்தனையுந்திருவுருவமதுதனையுந்தீராப்பாதகரோ, யவர்தமக்குப்பரிகார மறையாதாகமமுமாரணத் தினுண்பொருளையாருயிர்க்குத்துணையைச், சிவனையுணற்பொருட்டாலைசெய் வாரோற் பூசைசிறப்புடையவைதிகரோசைவரோதெளிந்த,வெவரேனும்பதிதரவரெனவெண்ணியிணங்கேலிற்புகுந்தாற்றீண்டியபாண்டத்தைவிடலினிதே

எ- து சிவலிங்கம்வேதாகமங்கள்சந்திரசேகரர் முதலானவிக்கிரகங்களைவிலைகுறித்துவிற்றவர்கள், எப்போதுமொழியாதபாதகத்தை யுடையவர்கள் அவர்களுக்குப்பரிகாரமாகமத்திற்கூறிற்றிலர் வேதாந்தத்தெளிவாய்நிறைந்தவுயிர்க் குத்துணையாகியசிவனைப்பத்தியினாற்பூசிப்பதன்றிவிலைபொருந்திப்பூசிக்குமவர்கள்சிறப்புடையவைதிகராயினுஞ்சைவராயினுமற்றைத்தெளிந்தவெவரோனுமவர்களைப் பபதிதரெனவிசாரித்துஅவர்களுடனொருக்காலுங்கூடாதொழிக. அவர்கள் பிறரொருவர்வீட்டில் வந்துபாண்டத்தைத்தீண்டிலதனைக்கழித்துப்போடுக எ - று

ஆதிசைவராகியசிவப்பிராமணர்முதலானவர்கள்திரவியமுதலிய கூலிவாங்கிப்பூசிக்கிலவர்களுமப்படியோவெனில் அவர்களுக்கதுவே விகிதமானகன் மமாதலாற்குற்றமில்லையென்றுஆகமமோதுமெனவறிக (சரு)

பொருணசையாற்பூசையினைப்புரிவார்கண் மாலைப்புரந்தானைத் திசைமுகனைப்புரந்தரன்றன்சேனை, பெருமானைவிநாயகனைப்பேரறங்காப்பாளைப்பேருலகத்தாயனெனப்பேசுமெழுவரையும், இருமையினும்பயனிழந் தாரவர்தம்மையிணங்கேலிகலாதேசாக் கியரோடேனையர்தம் மோடும், விரவிடினுந்திருநீறுமெய்ப்பூசியிடுகவிளம்பிடுகசிவனுமம்வெறுப்பொழிகவெவர்க்கும்

எ - து இங்ஙனங்கூறியதெவதைகளெல்லாரையுங்கூலிவாங்கிப்பூசிக்குமவர்கள் இம்மைமறுமையிரண்டினையுமிழந்தவர்களென்றுவிசாரித்தவர் களுடனொருகாலுங்கூடாதொழிக சாக்கியர்புத்தர்களிவர்களுடன்வாதஞ்செய்யாதவர்களைத்தீண்டினுமாகாதிர்த்தசெலத்திலேதானத்தைப்பண்ணிவிபூதித்தானஞ்செய்துஇருபதினாயிரமுருவகோரத்தைச்செபிக்க மற்றையாவரிடத்தும் வெறுப்பின்றியொழுகுக எ - று ஏனையவொன்றதனுற்சாருவாகன்முதலியவெனவறிக இருபதினாயிரமென்றதுசொல்லெச்சம் (சசு)

சிவதிரவியமுதலியதபகரிக்கிற்பரிகார முணர்த்துகின்றார்

பரமசிவனாலயத்திற்பதர்திரணமற்றும் பற்றுதே பற்றியிடினழுங்கியுளம்பதைத்து, வெருவியபராதத்தைப் பொறுத்தருளென்றிறைஞ்சி விண்ணப்பஞ்செய்தறியா தெடுத்தவனுற் குணிதங், கருதி யெடுத்தவனேந்துகுணிதமுறக்கொடுத்துக்கடிதினியற்றிடுக சாந்திராயணத்தைக்கசிந்தே, யருமறையோர்பொருள்குரவனரும்பொருள்கொண்டானு மம்முறையிற்கொடுத்திடுகவவலவினையறுமே.

எ- து. திருக்கோயிலுக்குள் சிவனுக்கு முபையோக மல்லாத பதர்திரணமுதலானதாயினு மவைகளைத் தீண்டாதொழிக. அந்தத்திரணாதிகளை யபுத்திபூருவமாக வெடுத்தானுகில்இப்படிவந்ததேயென்று மனதிலே துக்கித்து ச்சுவாமியையிக்குற்றம்பொறுக்கவேண்டுமென்றுவேண்டிக்கொண்டு எடுத்ததற்குநான்மடங்குகூட்டிக்கொடுக்கிலக்குற்றம்போம். புத்திபூருவமாக வெடுத்தானுகில் ஐம்மடங்குகூட்டிக்கொடுத்துச்சாந்திராயண விரதத்தை யந்நேரமேயனுட்டிக்கிலக்குற்றம்போம் பி

ராமணர் ஆசாரியர் திரவியத்தையபகரித்தவனும்மும்முறைசெய்யிலக்குற்றம் போமென்றவாறு. (௮௭

இதுவுமது

கூடியெடுத்தனுபவித்தான் பாதமுறக்கொடுக்கக் கூடினனைக்கூடினனு ம்பாதத்திற்பாதி, யோடியிட்டவூனவினைவுணர்த்திடுகெனிபுத முருபித்தனையடுத்த வனுமுன்னாக்கவதன்பாதங், கூடினனைக்கூடினனும் பாதத்திற்பாதிகூறிடுகவ ந்தணர்தம்பொருளினைக் கொண்டானும், பாடிய விம்முறை செபத்தைப்ப ண்ணிற்றீருமந்தப்பாவவினையல்லதழற்குழிதன்னிற்படுத்தும்.

எ-று. சிவதிரவியத்தையொருவனுடனேகூடியெடுத்தனுபவித்தவன்அதினுலத் தொன்று கூட்டிக்கொடுக்க அதனைக் கூடியெடுத்தவனுடனே கூடினவனு மெட்டி லொன்றுகூட்டிக்கொடுக்க. அதனைபுத்திபூருவமாகயெடுத்தவன் அதற்கஞ்சுகுணி தங்கொடுத்துவிரதமனுட்டித்தக்குற்றம்போம்படி யகோரமந்திரத்தைநூறுயிரமு ருச்செபிக்க. எடுத்தவனுடனே சேர்ந்தானுமதி னுலத்தொன்றுசெபஞ்செய்க. அத னையெடுத்தவனுடனடுத்தவனுடன்கூடினவனு மதிற்பாதிசெபஞ்செய்க. பிரர்மண ர்திரவியத்தையெடுத்தவனும்எடுத்தவனுடன்கூடினவனுங்கூடினவனுடன்கூடினவ னுமுற்கூறியசெபஞ்செய்க. இவ்வாறுபரிகாரஞ் செய்யாதொழியி னஃதுரௌரவ முதலானநரகங்களின்வீழ்த்தும். எ-று. உருபியெனினு மகோரமெனினுமி மூக்கா- அந்தணர்தம்பொருள்கொண்டானுமென்றவும்மையால அரசர்முதலாயி னார்திரவியத்தையெடுத்தவனுமெடுத்தவனுடன் கூடினானுங்கூடினவனுடன்கூடினா னுமம்முறைசெய்க. (௮௮)

ஆசாரியர்களமித்தியமாகியசிவலிங்கப் பிரதிட்டையுந்தீக்கையுமிய ன்னலிலின்வருங்குற்றமும். அவைகையாசிரியனைக்கொடியவார்த் தைசொல்லல் முதலிய குற்றமும் போம்படி பரிகார முணர்த்து கின்றார்

பார்த்திவருமற்றையருமுயத்தேவபதிட்டைபண்ணினனேலாசானுமி ருநிபுதம்பகர்க, தீர்த்துணைஇருசிவாகமத்திலுண்மையிதெனியாதேதீக்கைபு ரிதேசிகனும்அஞ்சிலக்கஞ்செபிக்க, வார்த்தைபிழைக்கடின்முறவசனித்தானு நின்மந்திரிக்க வோரிலக்கம் பாதியதன் பாதங், கூர்த்தவருட் சோதனைப் போதகனைமுத்திகொடுப்பானைப்பகம்பணிந்துகுறைபொறுத்தாளென்றே.

எ- து. ' இராசாமுதலானவர்கள்சத்ததியடையு நிமித்தமாகவாசாரியன்சிவலி ங்கப்பிரதிட்டைபண்ணில் அக்குற்றம்போம்படிக்குபவசியாயிரண்டுநூறுபிரமுரு ச்செபிக்க. சிவாகமத்தினுட்கூறியமுறைமையையறியாமற்றீக்கைசெய்யுமாசாரிய னுமுபவசியா யைந்துநூறுயிர முருச்செபிக்க. சோதகர். போதகர். முத்திகொடுப் போர்- என்னுமூவகையாசிரியரைப்பார்த்துக்கொடியவார்த்தையைச்சொன்னூறு கிலக்குற்றம்போகையின்பொருட்டுஅவர்களைவணங்கி நூறுயிரம் ஐம்பதினுயிரம் இருபத்தையாயிரமடைவிற் செபிக்கிலக்குற்றம்போமென்றவாறு- தீர்த்துணவு மென்பதனையிருபாலுங்கூட்டுக. மூவகையுாசிரியருக்குக் கூறிய தொகை. எதிர்நிர னிறை- சைவாகமத்தையிதுவென்றுதெரிசிப்பிக்கையாற்சோதகனெனப்பெயராயி ற்று. மாணுக்கர்க்காகமமாதிகளைப்போதிக்கையாற் போதகனெனப்பெயராயிற்று நிருவாணதிக்கையை மாணுக்கர்க்குப்பண்ணி மோக்ஷத்தையடைவிப்பிக்கையான் முத்திகொடுப்போனெனப்பெயராயிற்று. (சுக)

இதுவுமது

தாக்கிடினேதன்னதுகையவனுடலந்தன்னிற் சாற்றிடுகவாறிலக்கமாயு தத்தாற்றடியி, னேற்றியிருகுணிதமுறயியம்பிடுகபூசையியற்றிடுகசிறப்புற வேயீசனுக்கஞ்சென்னுங், கூற்றுடைய சாந்திராயண விரதமுதலுங்கொள் கவிரதத்தினையுமுடிவினடிகுறுகிப், போற்றியுள பொருளெல்லாங்கொடுத் தவன்செய்தீக்கைபொருந்திடுகவருந்தவனைப்பிழைக்கினுமிப்புரிவே. *

எ- து. மூவகையாசாரியரிலொருவனை யாதொருவர்தமதுகையாலடிக்கிலறு நூறுயிரமுருவகோரத்தைச்செபிக்க. ஆயுதத்தாலிரத்தம்புறப்படவெட்டிற்பன்னி ரண்டுநூறுயிரமுருச்செபித்துச்சிவனுக்குமகாபிடேகமுநைவேத்தியமுஞ்செய்து செலசாந்திராயணமுதல் ஐவகைச் சாந்திராயணத்தையு மனுட்டித்துமுடிந்தவா றேஆசாரியனைப்பாதத்திற்பணிந்து தமக்குள்ளபொருளெல்லாமவருக்குக்கொடு த்துப்பஞ்சகமலமென்னு மண்டலத்தை வேதிகையினிட்டு அதுமுன்னு கத்திக்கை யைப்பெறுக - அரியதவசினையுடையசாதகர் முதலாயினுரை யடிக்கினும்வெட்டி னுமிம்முறைசெய்யிலக்குற்றம்போமென்றவாறு.

பஞ்சகமலமண்டலமாவது. யாகசாலைமண்டபத்துக்குநடுவேதிகையைப்பதினறுவு க்குப்பதினுறுபதம்பண்ணி நடுநாலுபதத்தில் வெண்டாமரையையிட்டு நடுவிற்கர்

கிகையைச்சூழக்கேசரம். பீதவன்னமாகவிட்டு அதைச்சூழ்வர ஒருபதஞ்சிவப்பினாலே வீதியாகவிட்டுப் பூர்வதிக்கு முதலான திக்கினுநான்கு பதத்தாலேயந்தந்த முகத்துக்கேற்றவன்னமாகநடுப்பதுமம்போலநான்குபதமமிட்டு அதனைச்சுற்றிவரவிரண்டாம்வீதியிலொருபதம் பொன்னிறமாகவிட்டு ஒவ்வொருதிக்குக்கு இவ்விரண்டுபதத்துவாரம்- அந்தந்தத்திக்குப்பதிகளுடைய நிறமாகவிட்டு க்கர் ஈமூபகர்ஈபதமிரண்டுசோபத்தாலுங்கோணங்களில்வச்சிரம்போலக்கொண்டு பதமிட்டு அதிற் சிவனைப்பூசிக்கிற்பஞ்சகமலமண்டலமெனப்பெறும். எ- று. (௫௰)

ஆசாரியர்க்கியற்றியகுற்றத்திற்குப் பரிகாரபூசையினைவகுத்துணர்த்துகின்றார்

பலமிரண்டாயிரமுறவே பாறதிநெய்பழமும் பண்ணிடுக திருமுடியினபிடேகம்பரிவாற், பலமிரண்டாயிரமுறவேயேலமுதற்பண்டம் பயிற்றிய நீரவிடேகம்பண்ணிடுசபதமும், பலமிரண்டாயிரமுறவே கறியமுது பாற்பரமனுக்குநிவேதனமும் பண்ணிடுக பாங்காற், பலகுவளைவிளக்கு மிரண்டாயிரமானெய்யாற்பார்த்திடுகதேசிகனுக்கபராதம் பணினார். *

எ- து. வெளி. தேசிகனுக்கபராதம் பணினார்என்பது எழுவாய் பண்ணிடுகவென்பதுபயனிலை. (௫௧)

முற்கூறியமுறைமைக்குப்பொதுவிதிநியமமுணர்த்துகின்றார்

அங்கியினாகுதியுமிரண்டாயிரமேயாக்க யானெய்யாளியுதமுறச்செபமறையும்போது, மங்கியினாயிரமுறவே வாக்குகவானெய்யானயுதத்துக்கப் பாலுந்தசத்தொன்றேயாக்க, வெங்குமிதுபொதுவெனவே யெண்ணியியற்றிடினேயியம்பியமந்திரபலன்றானெய்தியிடு மென்று, மங்கியினுக்கருகராலாரரியனலங்கிக்காகுதியைக்கொடுப்பிக்கிலவலவினையறுமே. *

எ- து. யாதாமொருவர் நூறாயிரமுருச்செபிக்கும்போது பசுவினெய்யினாலிரண்டாயிரமுருஓமஞ்செய்க- பதினாயிரமுருச்செபஞ்செய்யுமிடத்தாயிரமுருஓமஞ்செய்க- பதினாயிரத்துக்குமேலதிகசெபஞ்செய்யிலதற்குப்பத்துக்கொன்றுஅதிகமாகவேற்றியோமஞ்செய்க- முற்கூறியவெல்லாச்செபத்துக்கும் பொதுவிதியென்றறிந்துசெய்யினிவன்செபித்த செபபலத்தைக் கொடுக்கும்- ஓமஞ்செய்தற் கதிகாரியல்லாவிடத்து ஆசாரியராலேஓமம்பண்ணிவிக்கி லிவனுடையபாவங்கள்போமென்றவாறு- அப்பாலுமென்றவும்மை யெதிரதுதழுவியவெச்சவும்மை- ஒப்பின்

முடித்தலென்னுந்தந்திரவுத்தியால் இருபதுருச்செபத்துக்கொரு கலசந்தாபித்தபி டேகஞ்செய்க (௫௨)

பரிகாரஞ்செய்தற்கு நியமவிதியுணர்த்துகின்றார்

உண்மைமொழியுரைத்திடுகை யொண்டொடியார் கலவி யொழிந்திடுகைசிதனிலூண் பூதலத்திலுறங்கல், எண்ணையினைத்தீண்டாமைகௌவியத்தைத்தினமுமிறைவனணிமுடிக்காட்டி யருந்தலிவையெல்லாம், பண்ணுதலேபஞ்சவருடத்தளவும்விரதம்பரிகாரந்தேசிகனைப்பழித்தவினைப்பகைக்கும், புண்ணியர்தமடியிணையும் புரிந்துபணிந்தவர்தம் பொருவரியவருள்பெறலும்புன்மைவினைபோமே. ❋

எ-து. வெளி. கௌவியத்தையருந்தும்போதுஇடையிடையேகையைக்கழுவித் தத்துவத்திரயத்தினாலேயதனைக்கொள்க. (௫௩)

பிரமவதைக்குப்பரிகாரமில்லையாயினுமொரோவாற்றாற் பரிகாரமுணர்த்துகின்றார்

அறிவிலனையந்தணனையதஞ்செய்தானவலனாயிரமாநிரைநடுவேமண்டலத்தையாக்கி, யறைகவதனடுவினந்தே யீசானநியுதமாக்கிடுகநிதியாளன்மகவினையையாங்கே, பொறைபுறவேசாந்திராயணம்பின்புபுரிகை பொதுவலதுபுலனைந்தும்வென்றுதிருநீற்றின், அறையின்மக வுருத்திரத்தையறைந்துநினைந்தரனையையறுநாண்மரணமுடிவலிந்தகொலையறுமே. ❋

எ-து. அபுத்திபூருவமாகப்பிராமணனைக்கொன்றகுற்றம் போம்படிக்கு, ஆயிரம்பசுநிற்கிறகோட்டத்தினடுவே தேனுமண்டலத்தை யெட்டுமுழத்திற்சதுரசிரமாகவிட்டுஅதனையொன்பதுகோட்டமாகப்பிரித்து ஒவ்வொரு கோட்டத்தையொவ்வொருதளமாகவு நடுக்கர்ணிகையாகவுமிட்டு அவைகளிற் சுரபி முதலானவைகளை ஞானரத்னாவலியிற்சொன்னபடி பூசித்து அந்தமண்டலத்தின் முன்னாகவிருந்து ஈசானமந்திரத்தை நூறாயிரமுருச்செபித்து நிதியுடையவனாகிலவ்விடத்திற்றானயாகத்தைச்செய்துசாந்திராயணவிரதத்தை யனுட்டிக்க, இங்ஙனங்கூறியன, பொதுவிதி, அல்லாதபோதுபஞ்சேந்திரியங்களையடக்கித் திருநீற்றறையிலிருந்து சிவபெருமானைத்தியானித்துவேதத்திற்சொல்லியசதருத்திரமெனுமந்திரத்தைச்செபித்துமுப்பதுநாளிருக்கிலக்குற்றம்போம், இப்படிமரணாந்தமளவு மிருப்பானாகிற்புத்திபூருவமாகச்செய்தகுற்றம்போமென்றவாறு, தேனுமண்டலமென்பதனை மண்ட

லமென்றதுதலைக்குறை. (௫௪)

மதுபானிக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

பண்ணினனேலறிவிலனும்மதுபானம்பார்ப்பான்பரமேசனாலயத் திற்றம்புருடம்படைக்க, வெண்ணணியுறவிலக்கமகமியற்றிடுகதியன்பராகமெனுந் திருச்சரத்தையியற்றியிடல்பொதுவே, வெண்ணெயழல்வெதுப்பிவாய் வாக்கலுமாமன்றிவெதுப்பியகோசலம்வெந்தவெண்கலமுமாகும், புண்ணியவெண்ணீற்றறையினுருத்திரத்தைப்புகன்றுபொருந்தலுமாமுன்புகன்றபடியிரண்டும்போமே.

எ - து பிராமணனானவன் அறியாமல்மதுபானம் பண்ணினானாகிற் சிவாலயத்தில்மண்டலமுன்புபோலிட்டுஅதிலேவியோமவியாபிமகாசிவர்முதலாயினார் களைப்பூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து தற்புருட மந்திரத்தை நூறாயிரமுருச்செபிக்க, திரவியவானாகிலயாகத்தைச்செய்து முற்கூறியபராகமென்னுந்திருச்சரத்தைச்செய்க, இதுபொதுவிதி அல்லதுபசுவின் வெண்ணெயைநன்றாக வுருக்கிக்கொதிக்கக்கொதிக்க வாயில்வாக்குக அல்லது கோசலத்தைநன்றாக்காய்ச் சிவாயில்வாக்குக அல்லதுபஞ்சலோகங்களையொழுக வுருக்கிவாயில்வாக்குக அல்லது முன்புபோலத்திருநீற்றறையிலிருந்து மகாருத்திரத்தைச் செபிக்கில் அபுத்திபூருவமும்புத்திபூருவமுமடைவேபோமென்றவாறு (௫௫)

சொன்னந்திருடினார்க்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

கனகமொருகழஞ்சளவுகருத்தழிந்து கொண்டகள்வனுடல் சுடுகளரியெல்லையினைக்கலந்தே, பனுகவகோரத்தைநியுதத்தை நிதியாளன்பனுகமகம்பொதுப்பிரசாபத்தியமேயல்லா, லெனைமுசலத்திரும்பாலேயெற்றுகமன்னவனையென்றறிகவல்லதுவெண்ணீற்றறையையெய்தி, முனமுரைத்தமுறைமுயலின்மோசனமேயாகுமோகவினைமுன்னுணர்வின்முற்றியதிவினையும்.

எ - து அறியாமலொருகழஞ்சுபொன்திருடினகள்ளனானவன், ஆயிரம் பேரிற்குறையாமற் சுட்டசுடுகாட்டிற்சுடுகாடென்னுமண்டலத்தைமுன்புபோலெட்டிதழுநடுக்கர்ணிகையுமாகவிட்டு, அதில்அகோரப்பியோகமவென்று அகோரகலைமந்திரத்தாற்பூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து அகோரமந்திரத்தை நூறாயிரமுருச்செபிக்க, திரவியவானாகில்யாகத்தையாண்டுச்செய்க, இதுஇரண்டு

ம்பொதுவிதி - அல்லது - பிரசாபத்தியவிரதமனுட்டிக்க - அஃதன்றியவன்அரச னிடத்திற்போய்இராசாவேநான்பொன்திருடினகள்ளன் அக்குற்றம்போம்படிக்கு இருப்புலக்கையாலடியுமென்றுசொல்லியவனாலடிக்கப்பட்டுமரிக்க- அல்லதுமுன் புபோலநீற்றறையைப்பொருந்திமுன்சொன்னமுறைசெய்யிற் புத்திபூருவம் அபு த்திபூருவமிரண்டினாலும்வருங்குற்றமும்போம் எ - று ஏகாரம் - தேற்றம் [௫௬]

குருமனைவியைப்புணர்ந்தவனுக்குப் பரிகாரமுணர்த்துகின்றார்

அற்றறிவுகுருமனையையொருநாளுற்றணைந்தா னழலோம்புஞ்சாலைத னில்வாமத்தையறைக, வற்றிடவேயோரிலக்கமதமியற்றிநியமற்றதநிருச் சரமியற்றவொக்குமிருவருக்கு, மற்றலதுகுய்யத்தைப் பீசத்தைக்கருக்கா ன்மாற்றியுணன்மறந்துதிசைதெற்கியங்கிமரிக்க, முற்பகர்ந்த முறையுறவே நீற்றறையின்முயல்கமுயங்கிலவிந்திரண்டாநாணரகனைத்துமுழ்கும். *

எ- து. மோகவசத்தாலறிவற்றுக்குருமனைவியையொருநாட் கூடினானாகிலக்கி னிகோத்திரஞ்செய்கிற யாகசாலையிற் கிழக்கே காருகபத்தியஞ் சதுர சிரமாகவு மேற்கேயாகவனீயம் வட்ட மாகவுந் தெற்கே தெக்கணாக்கினி யர்த்த சந்திரனைப் போலவுமிட்டுஅதில்அக்கினியையுண்டாக்கியதிற் றற்புருடாயவிர்மகேயென்னுமந் திரமுதலாகவடைவேபூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து வாமதேவ மந்திரத் தைநூறாயிரமுருச்செபிக்க, திரவியவானாகில் யாகத்தை யாண்டுச்செய்க, புத்திபூ ருவமபுத்திபூருவமாகச்செய்தவர்கள் தத்தநிருச்சரமனுட்டிக்க இதுபொதுவிதி அ ல்லாதபோது குய்யத்தையும் பீசத்தையுங் கருக்காலரிந்து போட்டுத் தென்றிசை யைநோக்கியுபவசியாய்ப்போகிமரிக்கிலக்குற்றம்போம்புத்திபூருவமாகவிரண்டா நாளும்அவளைக்கூடினானாகி லிருபத்தெட்டுக்கோடிநரகத்திலும்அழுந்துவன். எ- று (௫௭)

கொலை களவு கள் காமஞ் செய்தநால்வருடன்கூடினவஞ்சாம்பா விக்குங்கோவதைக்கும்பரிகார முணர்த்துகின்றார்.

கூடியவ னிவர்தம்முளொருவனுடன்சாதங் கூறிடுகவியுதமுற க்குலவ னாயினுச்சி, மாடுடையன்புரிந்திடுகமகவினையைபாங்கேவருந்திடுக மற்றை யதிதபனத்தைமதித்துத், தேடரியதேனுவினைத்தெளியாதுசெகுத்தான்செ ப்புகவோரிலக்கமுறவகோரத்தைத்தெளிந்தா, னாடியிருகுணிதமுற நவின் றிடுகவந்தநாயகனைமனத்திருத்திபூணொழிந்துனைந்தே. *

எ-து. பிரமவதைமுதலான பாதகங்கள்செய்தாரால்வருள் ஒருவனுடனொருவன்கூடிலவனஞ்சாம்பாதகத்தையுடையவன், அக்குற்றம்போம்படி சத்தியோசாதமந்திரநூறுயிரமுருச்செபித்துப்பருவதாக்கிரத்தின் மண்டலமிட்டுஅதிலஷ்டவேமகமேருமுதற்பாரிசபருவதமீறாகவைந்தினுஞ்சதாசிவமுதலிய கலாமந்திரங்களையடைவேபூசித்துஅந்தப்பருவதத்தினுச்சியிற்றனவாறுகில் யாகத்தைச் செய்துஅநிதபனமென்னுங்கிருச்சரத்தின்முறைமையைவிசாரித்துவருத்தமுறவனுட்டிக்கில்அக்குற்றம்போம், தேசிகற்கரிதாகிய பசுவை யபுத்தி பூருவமாகவதைத்தாறுகில் அகோரத்தைநூறுயிரமுருச்செபிக்க, புத்திபூருவமாகச்செய்தவன்இப்படியந்துவிட்டதென்றுபவசியாயகோரமூர்த்தியை மனதிற்றியானித்து அம்மந்திரத்தைஇருநூறுயிரமுருச்செபிக்கிலக்குற்றம்போம். எ-று. (௫௮)

மகாபாதகத்துக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்.

கங்கைநதிப்புனலாடிக்கடப்பாடுமீந்து காசிவிசுவேசனடிக்கமலவிணை
பணிந்து, தங்கிஒருநாளுணல்காமாதிகளுந்தவிர்ந்து தாமறந்துபுரிந்தமகாபாவமொன்றுதவிருந், திங்களுமினமிந்துபுரிமாபாவமொன்று திருங்கேதாரஞ்சீசயிலங்காளத்தி, சங்கைதசரதன்மகனைத்தணந்த தலமாரூர்சபைமருதுகுடமூக்கையாறெழுவாய்த்தலத்தும். ௯

எ-து. கெங்கையிலேமுழுகித்தமக்கியன்றமாத்திரந் தானங்கொடுத்துக்காசியென்னுந்திருப்படைவீட்டிலெழுந்தருளியிராநின்ற விசுவநாதனுடைய தாமரைமலர்போன்றசீபாதங்களைவணங்கித்தான்காமக்குரோதலோபமோக மதமாச்சரியமுதலானகுற்றங்களைவிட்டொருநாளுபவசியாயிருக்கில் அபுத்திபூருவமாகச்செய்தமகாபாதகங்களிலொன்றுபோம், இவ்வாறொருமாதமளவு செய்யிற் புத்திபூருவமாகச்செய்தமகாபாதகங்களிலொன்றுபோம், அக்காசியன்றிக்கேதாரமுதற்றிருவையாறீறாகச்சொன்ன புண்ணியதலங்களினு மிவ்வாறுசெய்யி லக்குற்றம்போம் எ-று. எழுவாயென்றதனுல் திருவாலவாய் சுவேதாரணியந் திருநெல்வேலிமுதலாகியமற்றுமுண்டானபுண்ணியதலங்களினுமெனவறிக, சங்கைதசரதன்மகனைத்தணந்ததென்றது, தசரதனாயிந்திரன் புத்திரனில்லாதகுற்றத்தினுற்சங்கிக்கச்சங்கோத்தரம்பண்ணித்திருவாரூரில்வந்து தியாகராசனைப்பூசித்துப் புத்திரனுண்டாகையாற்சங்கைதசரதன்மகனைத் தணந்ததல மாரூரெனச்சிறப்பித்தார், திருவிராமேச்சுரமென்றுஞ்சொல்லலாம். (௫௯)

சிவஞானிகளைப்பூசிக்கிறு மக்குற்றம்போமென்றுணர்த்துகின்றார்

அறுதிமலமுத்தனவன்சிவனுயிர்கட்குயிராயகலாதேதவினைப்பலன்கள ருத்திமலமறுப்பான், மறுதியினுக்கெட்டாதா னெனமதித்துத் தம் முண்ம னேலயவாழவுறவவன்றாள் கண்டவர்தாள் வணங்கி, பொறுவினொவெ ண்ணிரியொருபகற்பூசனை யயியற்றினர்களொருநீங்கறுவியற்றினார்கள், முனேதியவாறெழுந்தார் தாமுற்றியமாபாவ முட்டாம வியற்றினர்கள்விட் டார்திமுழுதும். *

எ- து. வெளி. மறுதியினுக்கெட்டாதானென்பது. சாத்துவிகமுதலானமனதி லறியப்படாதவன், மனேலயவாழ்வுஎன்றது, சுவலீனமானமனதையதிதத்தில யிப்பித்துஆண்டுள்ளவின்பத்தையனுபவித்தல். (சுய)

உருத்திராக்கந்தரிக்கினும்பாவம்போமென்றுணர்த்துகின்றார்

அரித்திடவேயவலவினையனுமதித்தார்கண்டி யாமலகபலத்தினளவாக வுமேயன்பாற், றரித்திடுகசிகைதன்னிற்கன்னத்திற்களத்திற் றடவணமா ர்பிடைப்புயத் துத்தாங்குகபூணூலி, னுருத்திரசாதனமாயின்கண்டத்தினுமி னுமொன்றியிடுஞ்சிவபுரியை யதுதானுமென்றே, விரித்தவுரை மெய்யென வேயுணர்ந்தாரொல்லாரும்விருப்புறவேதரித்திடுககண்டியினைவிணங்கே.

எ- து. வெளி. அரித்தல். போக்குதல். கண்டிஉருத்திராக்கம். ☩ கண்டியிற்ப ட்டகழுத்துடையீர் கரிகாட்டிலிட்ட பண்டியிற்பட்டபரிகலத்தீர். என்பதனுலறிக ஆமலசம். நெல்லி. (சுக)

மேலுமோருபாயமுணர்த்துகின்றார்

பூசிடுகநீற்றினையுந் தீவினையைப்போக்கப் புரிந்தார்க டிருநீறு பூசின ரைப்பணிந்து, பேசிடுகமதுரவுரையவரோவற்றன்னைப் பெற்றிடுக முற்றிடுக

---

திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்ததிருவீழிமிழலை. திருவிருத்தம்.

☩ கண்டியிற்பட்டகழுத்துடையீர்கரிகாட்டிலிட்ட *
பண்டியிற்பட்டபரிகலத்தீர்பதிவீழிகொண்டீ *
ருண்டியிற்பட்டினிநோயிலுறக்கத்திலும்மையைவர் *
கொண்டியிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (சுஉ)

பேணியொருப்பட்டே, கூசினர்களவர்தம்மைக்கும்பிடவுமேவற் குறித்திய ற்றியிட த்தானுங்கொடுநரகக்குழியாழ்,நீசரென நினைந்திடுக நின்மலனைத்த ம்புணிலைப்பாரைநினைப்பார்கள்வினைப்பாவநீங்கும். ❋

❋ எ-து. வெளி. ✠ செடிகொணோயினடையார்திறம்பார்செறுதீவினை - கடிய கூற்றமுங்கண்டகலும்புகல்தான்வரு - நெடியமாலோடயனேத்தநின்றார்திரு வாஞ்சியத்-தடியர்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே-என்னுமகாவாக்கியத்தானு ணர்க. [௬௨]

சிவபத்தர்கள்பெருமையுணர்த்துகின்றார்.

மண்ணாளுமன்னவன்றன்மகன்குணந்தீங்கிரண்டும்வையகத்தார்பாரா தேவணங்கிடுவரஞ்சி, யெண்ணாளுமிறையமலன்றிருவேடந்திருநீறிட் டார்கள்குணங்குணக்கேடெனுமிரண்டுமெண்ணார், விண்ணாளத்தீவி னையைவிட்டிட்டிடவிறைந்தார்விரும்பியவரடிபணிவர்விமலனுரைவிலங்க, லொண்ணாதேயெனக்கருதியொருப்பட்டேயமலனைப்பரியபுரிவாழ்வு மற் றையருக்குண்டோ. ❋

எ-து வெளி ✠ எவரேனுந்தாமாகவிலாடத்திட்டதிருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக்கண்டபோதேயுகந்தடிமைத்திறநினைந்தங் குவந்துநோக்கி, யவர்தேவரிவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீ சன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறி யைக்காணலாமே - என்னுமகாவாக்கியத்தானுணர்க (௬௩)

முற்கூறியபார்ப்பாருட்பதிதரையும்அக்குலத்தழிந்துதி ரியுமாதரையும் பூதிசாதனமணிந்துஒழுக்கந்தவறினதவ சிகளையும் வதைத்தல்கூடாதென்பதும் இவர்கள்ஏற்றக்கு றைவுசெய்யின்விசாரித்துநிறுத்துமதூ ஆசிரியர்க்குக்கட னென்பதுமுணர்த்துகின்றார்.

---

✠ திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்அருளிச்செய்த திருவாஞ்சியம். பண். இந்தளம். பா. (௧)

✠ திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த திருக்கன்றாப்பூர் - திருத்தா ண்டகம் (பா) ௩

அந்தணர்தங்குலத்துமுதித்தழிவுபுரிவாரையதஞ்செய்யேற்பரிகாரமு மெவ்வகைக்குமறியோம், வெந்தவெண்ணீறணிந்தமலன்வேடமணிந்தாரு ம்விப்பிரரும்வேண்டியதுசெய்துவினைவிடினுஞ், சிந்தையினையமொன வேதேறியவர்தம்மைத்தெளியற்கதெளிந்துமவர்தமைச்செகுத்தாராயி, னைந்தழிவர்வினையத்திற்றேசிகனுக்கவனைநோவிக்கைநிலைநிறுத்தல் கடன் விதித்தநூலான். *

எ - து வெளி - அந்தணர்தங்குலத்துதித்துமென்றவும்மை - சிறப்பு - அதஞ்செய்யேல் - என்றது - கொல்லேல் - இதுவடமொழி - தெளியற்க - என்றது - சாதியிற்கூட்டாமற்றள்ளிவிடுதல் - செகுத்தல் என்றது - கோறல் - நோவிக்கை எ-து அடித்துக் கோவிக்கை - விதித்தநூல் - என்றது - வேதாகமத்திலின்னதற்கி ன்னபடிசெய்கவென்னுநீதிசாத்திரமெனவறிக. (௬௪)

தன்னிமித்தமாகப் பிறனொருவன் பிராணவதை பண்ணவவனைத்த டாதிருக்கிற்குற்ற முணர்த்துகின்றார்

என்றனைநீபுன்மைமொழிபிசைப்பாயேயென்றுமெனதுதனந்தாராதே யேகுவையேயென்று, நின்றனக்கோவுரித்திந்தநிலமெனக்குமென்றுநின் முன்னேயென்னுயிரைநீக்குவனேயென்றுந், தன்றனையேதான்வதைக்கி ற்றடுத்துமுறைபுரியாச்சலத்தெதிரியவன்றன்னைத்தன்னதுகையாலே, கொ ன்றவனேயாதலினுற்றடுத்திடுகெகொலையைக்கொடுத்திடுகெகணக்குளதுகொ லைக்கஞ்சுங்குணத்தார். *

எ - து வெளி - புன்மொழியென்றது-பொல்லாதவார்த்தை, ஏகுதலென் றது போகுதல் நீக்குதலென்றது விடுதல், சலமென்றது - கோபம் - உம்மை யெண்ணும்மை. (௬௫)

கோபமுதலியவற்றாற்பிராணவதைபண்ணினார்பெறும்பலமீ தென்றுணர்த்துகின்றார்.

கோபத்தாலகத்திற்கொடுநோயான்மற்றுங்குற்றத்தாற்றன்றனைக் கொலைபுரிகைகுணமோ, பாவத்தான்மிக்காரோதமைத்தாமேவதைக்கும்பத ர்மனிதரந்தணர்க்கும்பாங்கல்லக்கும்பீ, பாகத்திற்பட்டழுங்கிச்சிக்குழி

க்கும்படிவம்பகர்வருடமறுபதினாயிரமுறவேபோங்கே, சாகத்தாந்துணிந்
தழிகைசங்கரனாலயத்திற்றவறுற்றினையவரமலன்புரியதனைச்சார்வார். *

எ - து வெளி - கொடுநோய் - மகாவியாதி - குணமோவென்னுமோகாரம் - எதிர்மறை - கும்பீபாகஞ் - சிக்குழியென்பன - நரகம் - பாங்கு - உரிமை. (௬௬)

குற்றஞ்சாராக்கொலையிஃதென்றுசிறப்புவிதியுணர்த்துகின்றார்.

படைபிடித்துத்தங்கையிற்பற்றுனாச்சமரிற்பாய் படைக்கப்போர்புரியும் பார்ப்பானைப்பற்று, றுடலிறுத்தாலேலவர்க்குப்பிரமகத்திப்பாவமொன்று வதன்றெனவுணர்கவுள்ளத்தேகள்ள, மிடனுறவே வநள்ளிருளில்வேற்றய லார்மனையின்வேண்டியதுகொண்டியங்கும்வேலைதனில்வேந்தன், படைய வனைப்பற்றித்தேயப்பொழுது நாசம் பண்ணிடினும் பிரமவதைபற்றுபாதக் திபர்பால். *

எ - து வெளி. படை ஆயுதம் பற்றார் சத்துருக்கள் இறந்தல் தணித்தல் படையெடுத்துப் போர்செய்த பார்ப்பானைப் பிடித்து வதைக்கினுங் குற்றமில்லை யென்க (௬௭)

சூத்திரர் முதலிய மூவரையும் வதைச்சிற்பரிகார
முணர்த்துகின்றார்

ஓராயுதஞ்சூத்திரனையொடுக்கினனுச்சரிக்கவுருபிகளையொண்டோடிக் குங்குழவிக்குமொக்கு, மீராயுதம்வசியனைக்கொன்றிறுத்தவனுச்சரிக்க வேந்திழைக்குங்குழவிக்குமிக்கணைக்கோரியம்ப, வோராயுதமீராயுதம்பார் த்திபனையொடுக்கியுச்சரிக்கவொண்டோடிக்குங்குழவிக்குமொக்கு,மீராயு தஞ்சூத்திரனையெணியிறுத்தானியம்பயேனையர்க்குமிசைக்கவிரு குணித மெணியிறுத்தான். *

எ - து சூத்திரனையுமக்குலத்துமாதரையுமவர்கள்பிள்ளைகளையுங்கொன்றவ னகோரமந்திரத்தைப்பதினாயிரமுருசெபிக்க, மேல்வேனையவிருகுலத்தவர்க்கு மிம்மந்திரத்தாற்பதினாயிரம்பதினாயிரமுருவேற்றியேற்றிச்செபிக்க, சூத்திரர்முத லானமூவரையும்புத்திபூருவமாகக்கொன்றவன இருபதினாயிரநாற்பதினாயிர மறு பதினாயிரமம்மந்திரத்தாற்செபிக்க, எ - று [௬௮]

அண்டசமுதலியவற்றைவதைக்கிற்பரிகாரமுணர்த்துகின்றார்

வதைத்தவனைமயிலன்னங்குக்குடம்பாம்புமற்றுமுளவல்லட சமு
மற்கடமுமறப்பான், மந்திரத்தனைகவகோரமிரண்டாயிரமாஞ்சாலமறப்பா
லேவதைத்தானேராயிரமாஞ்சாதம், வதைத்தவனையசமேதிமற்றையமா
ன்மனையுமந்திரிக்கவகோரமொருநூறுநானூறு, வதைத்தவனேவராகத்
தைவன்மிருகமற்றுமதித்தனைகளொருநூறுமறந்தவினைமாயும். *

எ-து மயில்முதலானபறவைகளையபுத்திபூருவமாகக்கொன்றானாகில் அகோரமிரண்டாயிரமுருச்செபிக்க, புத்திபூருவமாகில்நாலாயிரமுருச்செபிக்க, பூனையையபுத்திபூருவமாகவதைக்கில்ஆயிரமுருவும்புத்திபூருவமாகில்இரண்டாயிரமுருவுஞ் சத்தியோசாதத்தைச்செபிக்க, ஆடு-மான்-மனை-யெருமை-முதலானவற்றைஅபுத்திபூருவமாகவதைக்கில்நூறுருவும்புத்திபூருவமாகவதைக்கில்நானூறுருவுமகோரமந்திரத்தைச்செபிக்க, வனத்திலேசஞ்சரிக்கிறதுட்டமிருகமான-பன்றி-சிங்கம்-கரடி-முதலானவைகளையபுத்திபூருவமாகக்கொன்றானாகில்நூறுருவும்புத்திபூருவமாகில் இருநூறுருவுமகோரத்தைச்செபிக்கிலக்குற்றம்நீங்கும் எ-று மற்றையவென்பதனால்அதற்கினமானவைகளுமெனக்கொள்க. [௬௬]

இதுவுமது

வதைத்தவனாய்நரியுஞ்சாதத்தைமறப்பின்மந்திரிக்கவாயிரமீராயி
ரமேமதித்தான், வதைத்தவனேமூடிகத்தைவாலமூடிகமுமந்திரிக்கசாத
த்தையொருநூறுமறந்தான், வதைத்தவனையென்பில்லாவுடலையுயிரின்
றிமந்திரிக்கவைம்பதுமற்றையவநூறும், வதைத்தவனோற்பலகிருமி
யொருநாளின்மறப்பான்மந்திரிக்கமூன்றயுதமதிக்கிலிருகுணிதம். *

எ-து அபுத்திபூருவத்திலே-நாய்-நரி-யிவைகளைவதைக்கிலாயிரமுருவும்புத்திபூருவமாகிலிரண்டாயிரமுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபிக்க, பெருச்சாளி-யெலி-யிவைகளையபுத்திபூருவமாகக்கொன்றவனூறுருவும்புத்திபூருவமாகிலிருநூறுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபஞ்செய்க, வெதுப்பிற்றோன்றியவென்பில்லாதகிருமிமுதலியவற்றைவதைக்கில் அபுத்திபூருவத்துக்கைம்பதுருவும்புத்திபூருவத்துக்குநூறுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபிக்க, ஒருகாற்பலகிருமிகளைக்கொன்றால அபுத்திபூருவத்துக்குமுப்பதினாயிரமும்புத்திபூருவத்துக்கு அறுபதினாயிரமுஞ்செபிக்க. எ-று (௬௭)

நாய்முதலியவைகடிக்கிற்பரிகாரமுணர்த்துகின்றார்

உடலூறுபடக்கடிக் கிறைய்நரிமம் கடமுமுமாகமும் தேள்விட முறினு மொழியுமடுகிருண், மிடறுறநின்றயுதமுறவிளம்ப வகோரத்தைவிக் கிரகமி னைந்துசுழல்விழிமூன்றுமுடையார், சடைமுடியிற்றலைமாலைகரியவுருக்கரா னந்தாடியாகந்தடமார்பிற் சற்பவிருச்சிகப்பூண், படைசூலமழுத் தண்டுவா ள்வலப்பாலிடப்பாற்பற்றியுளர்கட்டங்கந்தலைபலகைபாசம். *

எ - து நாய்முதலானவைசரீரத்தூறுபடக்கடிக்கிறுமவ்விடம் பொருந்திறு ந்தடாகங்களிற் கழுத்தளவுதண்ணீருணின்று சுழலா நின்றமூன்று விழியினையுஞ் சடாமகுடத்திற்றலைமாலையினையுங் கரிய நிறத்தினையுந்தீக்குணத்தினையுந்தாடியினு முகத்தினும்பெரியமார்பினும்பாம்பு த்தேளாபரணத்தினையுஞ் சூலமழுதண்டுவா ளைப்பற்றியவலப்பாற்கரத்தினையு, மாத்திரைக்கோல் தலை பலகை பாசத்தைப்பற் றியவிடப்பாற்கரத் தினையுமுடையவகோர தேவனாயனைத் தியானம் பண்ணி அகோரம்பதினாயிரமுருச்செபிக்கிலக்குற்றங்கணீங்கும் எ று (எக)

பொன்முதலியவற்றைதானம்வாங்கிற்பரிகாரமு ணர்த்துகின்றார்

தாங்கினனேற்றனத் தைபரிதாலத் தைக்கயுஞ்சுதரந்தாநாவ கோரத் தைச்சாற்றிடுகவாயுதந், தாங்கிருனிடைமாடியாலயத்திற்பாவந்தொலைத்த ருளொன்பாவமெனச்சொல்லுகமுன்றூறு, தாங்கினனேற்றாரிலத் தைத்தநி யானைப்தனையுந்தரித்திடிற்காற்பாசத்தைக்கம்பளத்தைமற்றுந், தாங்கின னேற்றுநபரிதனையெருதுதன்னைத்தானியத்தைத்தரணியையுஞ் சாற்றுக வோரயுதம். *

எ - து பொன்முதலியவற்றையும் அரிதாரமுதலியதாதுக்களையு மொருகழ ஞ்சுதானம்வாங்கின், அவர்கள்சிவாலயத்திருந்து அகோரமந்திரத்தைப்பதினாயி ரமுருச்செபிக்க, பால் தயிர் நெய் யெண்ணை பருத்தி கம்பளம் இவைகளைத் தா னம்வாங்கினவர்களுஞ் சிவன்சன்னிதியிலேயிந்தக்குற்றத்தைப்போக்கி யருளவே ணுமென்று வேண்டிக்கொண்டு அகோரத்தைமுந்நூறுருச்செபிக்க, குதிரை யானை யெருது யிவைகளையும் நெல் பூமி யிவைகளையுந்தானம்வாங்கிற் சிவாலயத்திருந் தஅகோரத்தைப்பதினாயிரமுருச்செபிக்க எ று மற்றுமென்பதனாற் பட்டு முதலான புடைவை ரத்னக்கம்பளம்வெண்பட்டு முஞ்சிப்புல் இவைகளை வாங்கி னும் புறுசெபிக்க. (எஉ)

"பத்தரானவர் ஆசிரியர் முதலாயினோர்க்கு மடங்கட்டு
வித்து அதற்குவேண்டு முபகரணத்துடனே தான
மாகக்கொடுக்கிலதனைவாங்கினகுற்றம் போம்படி
பரிகாரமுணர்த்துகின்றார்.

சிறப்புறவே திருமடத்தைச்செய்து தலைவணங்கித் தேவரீரினியாறுறைய
ச்செறிந்திருக்கவென்றே, யறந்தனையா தரித்தாள் கையதுபரித்தாலுநிலை
றைந்திடுகெனிபுதமுறவாலயத்தினமர்ந்தே, பெறற்கரியாயானறாவேபெற்றி
தனையென்றலம்பிறைநிரவருந்துகவுள்ளளவு மெனப்பேசுங், குறிப் பினன்
கைக்கொண்டுமரணந்தமுனல்கொடுமைகொள்கசிலநாளிறுக்கேயவன் வி
னைக்குக்குறைந்தே. *

எ-து. சிவபத்தர்கள்திருமடஞ்செய்து அதற்குவேண்டுமுபகரணத்துடன் ஆசிரியர்முதலாயினோரை அடியேனுய்யும்வண்ணந்தேவரீர்நீங்காது இத்திருமடத்திலே முநதருளியிருக்கவேண்டுமென்றுவணங்கிக்கொடுக்க அதைவாங்கினவர்கள்சிவாலயத்திலிருந்துஅகோரம் நூறாயிரஞ்செபிக்கக்கடவர் யாவர்க்கும்பெறுதற்குஅரியோய்அடியேன்கொடுப்பதனைப்பெற்றாலன்றிக்குற்றநீங்கவுள்ளகாலமெல்லாமும்புசித்திருக்கவேண்டுமென்றுஇரந்துகூறுவானது குறிப்பினையுணர்ந்துஅவனிடத்திற்பெற்றதனைத்தாமுள்ளளவும்அருந்துதல்கொடிது ஆதலான், அவன்வினைகெடுமாறுள்ளமிரங்கிச்சிலநாள்அருந்தக்கடவர். எ-று. (௭௩)

அதனைவாங்கிச் சிவனுக்கு நிவேதியாதிருக்கிற் பரிகார முதலியன
வுணர்த்துகின்றார்

தரப்பிறர்கைத்தாங்கியது சங்கரற்குநாளுஞ் சமைத்து நிவேதனஞ்செ
ய்கதவறியநாணூற்றெட்டு, டொக்கசிவகுரவனுக்குமூட்டுகநாடோறுமொரு
தேசத்தயலுட்டிலுன்னியவன்பாதந், சிரத்தையுறமலர்தூவித்திசையதனை
நோக்கித் தெண்டனவே பணிந்தெழுக சிவ்வினைசருடனே, விருப்புடனே
நாடோறுமிசைந்திடுகதீக்கைவேறம்முறர்சாதியிறுமொருபந்திமிசைவே.

எ-து. தாதாக்கள்தரவாங்கினதை நாடோறுஞ் சிவனுக்கும் ஞானாசாரியனுக்கு நைவேத்தியஞ்செய்க, செய்யாதொழியின் அக்குற்றம் போம்படி அகோரத்தை நூற்றெட்டுருச்செபிக்க, ஆசாரியர்சமீபத்தில்லாவிடத்து அவர்பாதந் தன்றலையிற பொருந்தவாதரவுடனே தியானம்பண்ணி மலராலருச்சித்து அத்திசையைநோக்கி

தெண்டாகாரமாய்வணக்கஞ்செய்க, இங்ஙனஞ் செய்தபின்பு சாதகர்முதலாயினோருடன்கூடயிருந்துபொசிக்கக்கடவர், தனக்கொத்ததீட்சையுஞ் சாதியுமுடையவருமிலவர்களைக்கூடவைத்துநாடோறும்பொசித்தலேசிறப்பு. எ-று. (௭௪)

பந்திபோசனத்தால்வருங் குற்றமும் பாண்டத்தால்வருங்குற்றமும்போம்படிக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

அற்றழியபவாகாரதொடங்களென்றுமருவினையுமெனக்குவினைத்தழிந்தொழியவென்றும், பெற்றசிரத்தையினாலேயாக்கடனைப் பேணிப் பெற்றவற்றினைந்தினையும்பேதமிலிதன்னை, நெற்றிவிழிநின்மலனை நேயத்தாலாட்டுவிசியருந்திலாகாரதோடங்களீங்த, மற்றழியுமரும்பாவநல்வினையுமாகுமவனதுநற்புரிதன்னையடைந்துறலுமாமே. *

எ-து. பந்திபாண்ட மன்னகாரமுதலியவற்றால் வருங்குற்றம் போகவேண்டுமென்றும், நான்செய்தமகத்தாயிருக்கிறபாவம் விரைந்தழியவேண்டுமென்றுமொருவனாதரவினாலேபசுக்களைநன்றாகப்போற்றியதனிடத்துண்டாகியபால்முதலியவற்றால்✠பிரமகூர்ச்சத்தைத் தாபித்துஅபேதனாகியும், நெற்றிக்கண்ணையுடையநின்மலனாகியுமிருக்கிறசிவனுக்கபிடேகஞ்செய்து உபவாசியாயிருந்துஅதனைப்பருகில அக்குற்றம்போய் மகத்தானபாவங்களும்போம், அதனாலேசித்திபுத்திபிறந்துசற்கன்மத்தையனுட்டித்ததற்குரித்தாய தம்பாபலத்தினாலே யவனது மகாசிவலோகத்தையடைந்திருக்கலாம். எ-று.

அடைந்துறலுமாமென்றவும்மை. சிறப்பு. ஏகாரம். ஈற்றசை. (௭௫)

பிரமகூர்ச்சத்துக்குரியபசுக்களின்முறைமையுங்கோமயங்கொள்ளுமுறைமையுமுணர்த்துகின்றார்.

பிணிமூப்புச்சாகன்றுபிறந்திளையகன்றுபெறுங்கன்றுகநக்கன்றுபெருக்கன்றாண்மலமென், றெனியவிருநான்கொழிந்தவெனவையுமினியனவோரிவற்றுநித்தமயமாந்யாட்டுநிகவிறைக்கே, மனிலனவாமுன்மயத்தைத்தாமிரத்திற்கொள்கவானிடையேகமலத்தின்வனிர்ந்துநடுமயத்திற், பிணியிலர்கைப்பெருவிரலிற்பாதியெனுமளவுபெற்றிடுகமற்றையவுங்கொண்முறைபேசுவமே. *

✠ பிரமகூர்ச்சம், பஞ்சகௌவியம்.

எ - து வியாதிப்பசு - கிழப்பசு - கன்றுசெத்தபசு - கன்றுபோட்டுபத்து நாட்சூதகமுடையபசு - கடாரிக்கன்றுகியபசு - சினைப்பசு - மலட்டுப்பசு - மலத்தைத்தின்னும்பசு - என்றுசுருதமெண்வகைப்பசுக்களையு நீக்கியமற்றப்பசுக்களெல்லாமினிமையையுடையனவாம், இவற்றின்கட்டோன்றியகோமயமுதலியவற்றால்சிவனுக்கபிடேகஞ்செய்க, இவையிற்புகைநிறத்தையுடையபசுகோமயமிடும்போது பூமியில்விழுமுன்னிடையேதாமரையிலையிலேந்தினகோமயத்தினடு வேரோயில்லாதார்கைப்பெருவிரலிற்பாதிமாத்திரம்வகிர்ந்தெடுத்துக்கொள்க மற்றைக்கோசலமுதலாயினவுங்கொள்ளுமுறைமையைமேற்சொல்வாம். எ - று மயம் - எ - து - தலைக்குறை, (௯௬)

கோசலமுதலியவைகொள்ளும்பசுவினிறமுமவற்றின்பலமு முணர்த்துகின்றார்.

பலமொன்றுநீர்கொள்க நீலநிறப்பசுவிற்பால்கொள்கபலமைந்திற் செம்மைநிறப்பசுவின், பலமூன்றினுறத்ததிவைப்பானிறத்திற்கொள்கபல மிரண்டிடினெய்கொள்ககபிலைநிறப்பசுவி, னலதிவைகளரியனவேற்கபிலைதனிற்கொள்கவைந்தினையுமதுதானுமரியதுவேயாகிற்,பலநிறத்தும்பாலெழுவாயைந்தினையுங்கொள்கபசித்தணியவூட்டியபின்பால்கொள்கபாங்கே. *

எ - து வெளி - கபிலைநிறம் - கருமைசேர்ந்தபொன்னிறம் - ஒருபலமாவன - இரண்டுகுன்றிகொண்டது - ஒருவுழுந்து - உழுந்துபத்துக்கொண்டது - ஒருகழஞ்சு - கழஞ்சு - எட்டுக்கொண்டது - ஒருபலமென்றறிக. (௯௭)

பஞ்சகெவ்வியந்தாபித்தற்குக்கோட்டங்கொள்ளுமுறைமை யுணர்த்துகின்றார்.

கோட்டந்தண்டுலத்தொன்டான்கொள்கதருப்பையினாற்கொள்ளலுமா முகமைந்திற்குறித்தநிறமுறவே, நிட்டிடுகநடுப்பூர்வந்தெற்குவடக்கொமியுஞ்சிறப்புறவேயீசத்திற்பொதுமைநிறஞ்செய்க, கூட்டிடுகவிவைதம்மிற்கனகபாத்திரங்கள்கொள்ளலுமாம்வெள்ளியினாற்பலாசினுங்கொண்டிடுக, வீட்டுடையதாமிரத்தினியற்றலுமாமுறையேயிவற்றினுக்குப்பெயர்களையுமியம்பிடுவாமே. *

எ-து, சிவன்சன்னிதியில்இருமுழமாதல், ஒருமுழமாதல், சதுரசிரமாகமெழு

